உ

சிவமயம்

# திருக்குறளில் - சைவ சித்தாந்தம்



திருவாவடுதுறை ஆதீன
சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம்
திருவிடைமருதூர் - 612 104.
1994 (மூன்றும் ஆண்டு)

சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சிமைய வெளியீடு : 21

உ
சிவமயம்

# திருக்குறளில் - சைவசித்தாந்தம்



ஆசிரியர் :

'செந்நெறிச் செல்வர்', 'மெய்ஞ்ஞான வள்ளல்'

திரு. கு. வைத்தியநாதன்.

இயக்குநர்.



திருவாவடுதுறை ஆதீன

சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம்

திருவிடைமருதூர்

1994

( மூன்றாம் ஆண்டு )

உ
சிவமயம்

# முன்னுரை

தமிழ் மொழியை அறிந்தவர் அனைவரும் 'திருக்குறள்' என்னும் தலையாய தமிழ் முதல் நூலை அறிவர். சைவ சித்தாந்தம் பயின்றவர் அனைவரும், திருக்குறளை மேற்கோள் காட்டாமல் சைவ சித்தாந்தக் கருத்துக்களை வெளியிட முடியாது. திருக்குறள் சைவ சித்தாந்தத்தோடு அத்துணை நெருக்கத்தை உடையது.

"திருக்குறளில் சைவ சித்தாந்தம்" என்னும் இந்நூலினை எழுதுவதற்கு உறுதுணையாக இருந்த நூல்கள் வருமாறு.

1. திருக்குறளில் உட்கிடை சைவ சித்தாந்தமே - (1953)
2. திருக்குறள் துலக்கும் ஒழுக்கநெறி - (1971)

இவ்விரு நூல்களும் சித்தாந்தக் கலைச் செல்வர், க. வச்சிரவேல் முதலியார், B. A., L. T., அவர்களால் எழுதப்பட்டவை.

3. திருவள்ளுவர் சித்தாந்த சைவர் - கழகம் - (1976)

இந்நூல் கொரடாச்சேரி திருமடத்துத் தலைவர், வாலையானந்த அடிகள் அவர்களால் எழுதப்பெற்றது.

"திருக்குறளில் சைவ சித்தாந்தம்" என்னும் நூலை எப்படி எழுதுவது என்று எளியேனின் வித்தியாகுருவும் சித்தாந்த வித்தகரும் ஆகிய முரு. பழ இரத்தினம் செட்டியார் அவர்களிடம் கேட்ட பொழுது, அவர்கள் மதுரைத் திருவள்ளுவர் கழகத்தில் 27—12— 1992ல் 'வள்ளுவரின் சமய நிலை" என்னும் தலைப்பில் பேசிய குறிப்புகளிலிருந்து சிலவற்றைக் கூறி, பிறசமயக் கொள்கைகள் குறள் நெறிக்குப் பொருந்தா என்னும் செய்தி இடம் பெற வேண்டுவதன் இன்றியமையாமையையும் வலியுறுத்தி அறிவுரை வழங்கினார்கள். அவர்களுக்கு எளியேனின் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பன்னிரண்டு வயதுச் சிறுவனாய்ப் பள்ளியில் பயிலும் காலத்திலிருந்தே, எளியேனுக்குத் திருக்குறள், என்னும்

தெய்வப் பனுவலில் இனம் புரியாத ஓர் ஈடுபாடு ஏற்பட்டது, இடைவிடாமல் திருக்குறளைப் பயின்று வருகையில், திருக்குறள் தூய தமிழ் மொழியில் தமிழ்ச் சான்றோர் ஒருவரால் செய்யப் பெற்றிருந்தும் சைவப் பெருமக்கள் அனைவரும் திருக்குறட்பாக்களை மேற்கோள் காட்டிச் சைவ சித்தாந்தக் கருத்துக்களுக்குச் சீரிய பிரமாண மாகக் கொள்ளும் வகையில் திருக்குறள் அமைந்திருந்தும், சைவ நூல்களில் தக்கதோர் இடத்தை (அந்தஸ்து Status) திருக்குறள் இதுவரை பெறவில்லையே என்னும் ஏக்கம் எளியேனுக்கு நீண்ட நெடுங்காலமாக இருந்து வந்தது. இந்நூல் எழுதியவுடன் ஐம்பது ஆண்டுகளாக இருந்த அந்த ஏக்கம் நீங்கியது. ஆம் "சைவர்களின் வேதம் திருக்குறளே" என்னும் கருத்து வலுப்பெறும் வகையில் திருமுறைகளிலும் சித்தாந்த சாத்திரங்களிலும் இருந்து செய்திகளைத் திரட்டும் அளவுக்குத் திருவருள் துணை நின்று அருளிச் செய்ததை எளியேனால் உணரவே முடிகிறது; அவ்வுணர்வை வார்த்தைகளில் வடிக்க முடியவில்லை.

"மருளனேன் மனத்தை மயக்கு அற நோக்கி
மறுமையோடு இம்மையும் கெடுத்த
பொருளனே, புனிதா" (8-29-9)

என்று மணிவாசகப் பெருந்தகை அருளிச் செய்தவாறு, அடியேனின் "ஞானத் தந்தை" ஆகிய திருவாவடுதுறை ஆதினத்து இருபத்து மூன்றாவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளிச் சிவஞானச் செங்கோல் ஓச்சி வரும் சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச் சந்நிதி அவர்கள், இந்த அடிமையை இந்தச் சீரிய பணியில் முயக்குவித்து அருளிச் செய்துள்ள பேரருள் திறத்தினை, நன்றி உணர்வோடு நினைந்து போற்றி, அவர்கள் பொன்னார் திருவடிகளை அடியேன் சிரமேற் கொண்டு வழிபடுகிறேன்.

சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்களது திருவருட் குறிப்பைச் சிந்தையில் கொண்டு, மாணவர்கள் இந்நூலினை ஆழ்ந்து கற்றுத் தெளிந்து பயன் பெறுமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

திருவிடைமருதூர்,
29—6—1994.

அடியேன்,
கு. வைத்தியநாதன்.

உ

சிவமயம்

# பொருளடக்கம்

உ

# மெய்கண்டசாத்திரம்

## (பதினான்கு)

*உந்தி களிறு உயர்போதம் சித்தியார்*
*பிந்திருபா உண்மை பிரகாசம் - வந்தஅருள்*
*பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு*
*உண்மைநெறி சங்கற்பம் உற்று.*

பதிப்பகம் :

ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

உ

# குருமரபு வாழ்த்து



கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகித்
துயிலாரும் பொழில்திருஆ வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

**திருச்சிற்றம்பலம்**

— *அருள்திரு மாதவச் சிவஞான யோகிகள்*



ஆதீனக் குருமுதல்வர்
அருள்திரு நமசிவாயமூர்த்திகள்



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்துமூன்றாவது குரு மகாசந்நிதானம்
*சீர்வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்*

சிவமயம்

# திருக்குறளில் சைவசித்தாந்தம்

**தோற்றுவாய் :**

மேலை நாட்டிலிருந்து, கிறித்துவத்தைப் பரப்பும் பொருட்டுத் தமிழ் நாட்டிற்கு வருகை தந்த போப்பையர் அவர்கள், திருக்குறளின் சிறப்பைக் கேள்வியுற்று, அதனைக் கற்க வேண்டும் என்னும் பெரு நோக்கில், தமிழ் மொழியை முதலில் கற்றார். திருக்குறள் முழுவதையும் பழுதறக் கற்று, அதன் பொதுமையை உலகம் முழுவதும் அறிய வேண்டும் என்னும் உயர்ந்த எண்ணத்தில், அதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். போப்பையர் அவர்கள் "**குறள் நெறி**" (**Ethics of Kural**) என்னும் ஆங்கில நூலையும் செய்தார். அந்நூலில்,

**"Thiruvalluvar bases his ethics on the *grand truths* of Tripathartha- PATHI, PASU, PASAM, In fact, his creed is not godless creed, like that of jains or Buddhists. In this respect, there is a disparity between "Naladi" and this work"**

என்று போப்பையர் அவர்கள் கூறியுள்ள கருத்து, ஆழ்ந்த சிந்தனைக்குரியது. இந்தப் பகுதியின் தமிழாக்கம் வருமாறு :

"திருவள்ளுவர் பதி பசு பாசம் என்னும் சிறந்த முப்பொருள் உண்மையின் அடிப்படையிலேயே தமது சமயக் கோட்பாடுகளை அமைத்துள்ளார். சமணர்களும் பௌத்தர்களும் கொள்வது போல், 'கடவுள் இல்லை" என்னும் கொள்கையில் திருவள்ளுவர்க்கு உடன்பாடு இல்லை. இந்த வகையில் நோக்கும் பொழுது, "நாலடியார்" என்னும் சமண நூலில் உள்ள கருத்துக்கும் திருக்குறட் கருத்துக்கும் பெருத்த வேறுபாடு உள்ளது".

வெளி நாட்டிலிருந்து இங்கு வந்து, உண்மையை உணர வேண்டும் என்னும் ஒரே நோக்கில், எந்தவிதக் காய்தல் உவத்தல் இன்றித் திருக்குறளையும் பிற தமிழ் நூல்களையும் கற்றுத் தெளிந்த ஒரு பெருமகனார் கூறும் இந்தக் கருத்தில், எந்தவித ஓரவாரமும்

(பாரபட்சம்) இருக்க முடியாது என்பதை நேர்மையாகச் சிந்திப்பவர் எவரும் அறிவர். போப்பையர் அவர்கள் கூறிய இந்தக் கருத்து கீழ்க்காணும் உண்மைகளைத் தெளிவுறுத்து கின்றது ;

1. திருவள்ளுவர் உலோகாயதரின் 'கடவுள் இல்லை' என்னும் கொள்கையை உடன்படவில்லை. 2. திருக்குறளில் உள்ள சமயக் கோட்பாடு, சமண பௌத்த சமயக்கோட்பாடுகளோடு பொருந்துவது அன்று. 3. திருவள்ளுவர் சைவ சித்தாந்தக் கொள்கைகளையே தமது சமயக்கோட்பாடாகக் கொண்டிருக்கிறார்.

திருவள்ளுவர் வாழ்ந்த காலம் கி மு. 31 என்பது பெரும் பாலான வரலாற்று அறிஞர்களின் முடிவு; அஃதாவது இற்றைக்கு ஏறத்தாழ இரண்டாயிரத்து இருபத்து ஐந்து (2025) ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர் திருவள்ளுர் என்பது தெளிவு. எனவே, **கிறித்துவ சமயம் தோன்றுவதற்கு முன்பே, திருக்குறள் தோன்றியது என்பது பெறப்படும்.**

புறநானூற்றுள், காக்கைப்பாடினியார் என்னும் பெரும் புலவர் எழுதிய "நரம்பெழுந்துலறிய" எனத் தொடங்கும் செய்யுளில், "ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே" என்னும் தொடர் இடம் பெறுகிறது இத்தொடர் "ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும், தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய்" என்னும் திருக்குறட்பாக் கருத்தை '69' மேற்கொண்டு அமைந் துள்ளது.

ஆலத்தூர் கிழார் பாடிய புறநானூற்றுச் செய்யுள் ஒன்றில், திருவள்ளுவர் அருளிச் செய்த "எந் நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை செய்ந் நன்றி கொன்ற மகற்கு" – '110' என்னும் குறட்பாக் கருத்து இடம் பெறுகின்றது அந்தப் புறநானூற்றுப் பகுதி வருமாறு:

*"நிலம் புடை பெயர்வ தாயினும், ஒருவன்*
*செய்தி கொன்றோர்க்கு உய்தி இல் என,*
*அறம் பாடிற்றே ஆயிழை கணவ"*

காக்கைப் பாடினியார் காலம் கி. பி. 100 என்றும், கிள்ளிவளவன் காலத்தில் வாழ்ந்த ஆலத்தூர்கிழார் காலம் கி. பி 200க்கு முற்பட்டது என்றும் வரலாற்றுப் பேராசிரியர்கள் கருதுகிறார்கள்' "புலான் மறுத்தல்" எனனும் அதிகாரத்தில், திருவள்ளுவர் பௌத்தமதக் கொள்கையை மறுத்துப் பேசுகிறார், எனவே,

திருவள்ளுவர் கௌதம புத்தர் காலத்திற்குப் பிற்பட்டு வாழ்ந்தவர் என்பது பெறப்படும். மணிமேகலையில் "தெய்வம் தொழா அள்" எனத்தொடங்கும் திருக்குறட்பாக் கருத்தை எடுத்தாளும் பொழுது, சாத்தனுர் திருவள்ளுவரைப் "பொய்யில் புலவன்" என்று குறிப்பிடுகின்ருர், இவற்றை யெல்லாம் கருத்தில் கொண்டு சிந்திக்கும் பொழுது திருவள்ளுவர், காக்கைப் பாடினியார் காலத்திற்கு முற்பட்டவர் ( கி. பி. 100 ) என்பதும், கௌதம புத்தர் காலத்திற்குப் பிற்பட்டவர் ( கி. மு. 300 ) என்பதும் பெறப்படும், எனவே, திருவள்ளுவர் ( கிறித்து பிறப்பதற்கு முப்பத்தொரு ஆண்டுகட்கு முன்பு ) கி. மு. 31-ல் வாழ்ந்தவர் என்பது பொருந்தும்.

வெளி நாட்டு மதக் கொள்கைகளைத் தமிழ் நாட்டில் பரப்ப வேண்டும் என்னும் குறுகிய நோக்கத்தில், தமிழ் அறிவே இல்லாத ஒரு சிலர், திருவள்ளுவர் கிறித்துவுக்குப் பின்பு தோன்றியவர் என்று கூறுவார்கள். அவர்களது உள்நோக்கம் தெளிவாக உள்ளதால், அக்கருத்தில் ஓரவாரம் உள்ளது என்பது இனிதே பெறப்படும். படவே, அக்கருத்து புறக்கணிக்கப்பட வேண்டியதாகும்.

திருவள்ளுவர் வாழ்க்கை வரலாறு இஃது என அறுதியிட்டுக் கூறும் முறையில் இல்லை, திருக்குறளில் "**குரு வணக்கம்**" என்று ஒரு பகுதி இல்லை, எனவே, திருவள்ளுவர் ஓதாது உணர்ந்த பெரியவராக இருக்க வேண்டும். திருமுறை ஆசிரியர் களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகர் முதலிய பெரியவர்கள், இறைவன் திருவருளால் உணர்த்தப் பெற்றுத் தம் கருத்துக்களைக் கூறியருளியுள்ளனர். அவர்களைப் போலவே திருவள்ளுவரும் இறைவன் திருவருளால் உந்தப்பட்டு இந்நூலை அருளிச் செய்திருக்க வேண்டும். தெய்வப் புலவர், நாயனுர் செந்நாப் போதார் முதலிய திருப் பெயர்களை உடையவராகத் திருவள்ளுவர் திகழ்வதால் இவ்வுண்மை புலப்படும்.

சைவ சமயப் பெரியோர்களை, 'நாயனுர்' என்னும் சொல்லை அவர்தம் பெயர்க்குப் பின்ஒட்டுச் சொல்லாகச் (**Suffix aggluti-nation**) சேர்த்துப் போற்றி வழங்குவது நமது சமய மரபா யுள்ளது. அதுபோலவே குறளாசிரியனரைத் "திருவள்ளுவ நாயனுர்" என்று கூறும் வழக்கு தமிழகத்தில் உள்ளது, எனவே, திருவள்ளுவர் மற்றைப் புலவர்கள் போல் அன்றி,

ஓதாது உணர்ந்த சான்றோர்கள் வரிசையில் வைத்து எண்ணத் தக்கவர் ஆவர். அதுபற்றியே திருவள்ளுவரை "அர்" விகுதி யிட்டுப் பேசுகிறோம். கம்பனை "அன்" விகுதி யிட்டுப் பேசுவது போல் திருவள்ளுவரைப் பேசுவது, அவரது உண்மை இயல்பினை அறியாதார் செயலே ஆகும்.

பன்னிரு திருமுறைகளில் பெரும்பாலான இடங்களில் திருக்குறட் கருத்து இடம் பெற்றுள்ளது. சிறப்பாக சைவ சமய ஆசாரியார்கள் நால்வர் வாக்கிலும் திருக்குறட் கருத்துகள் மலிந்து காணப்படுகின்றன. திருஞானசம்பந்தப் பெருமான் அருளிச்செய்த திரு ஆப்பனூர்ப் பதிகத்தில்,

*"அகர முதலானை அணியாப்ப னூரானைப்*
*பகரும் மனம் உடையார், வினைப்பற்று அறுப்பாரே"*
*(1 - 88 - 5)*

என்றுவரும் தேவாரத்தில், "**அகர முதலானை**" என்று அமைந்த தொடர் திருவள்ளுவரின் இறைக் கொள்கையினைக் குறிக்கின்றது. திருஞானசம்பந்தப் பெருமான் ஓதாது உணர்ந்த பெரியவர்; இப்பெருமானின் திருவாக்கில் திருக்குறட் கருத்து வெளிப்படுவதற்கு என்ன பொருள்? திருவள்ளுவர் அருளிச் செய்த திருவாக்குகள் அனைத்தும் தெய்வத்தன்மை உடையன என்பதை மெய்ப்படுத்தும் பொருட்டுத் திருமுறையாசிரியர்களின் திருவாக்குகளில அவை இடம் பெற்றுள்ளன என்பதே அதற்குப் பொருளாகும், ஆகவே, **திருவள்ளுவர் ஓதாது உணர்ந்த பெரியார்** என்பதும், அப்பெரியவரை அதிட்டித்து நின்று, **சிவபெருமானே திருக்குறளை அருளிச்செய்துள்ளான்** என்பதும் வெள்ளிடைமலை.

திருக்குறளில் சிவாகமச் செய்திகள் மிகவும் மலிந்து காணப் படுகின்றன. சிவாகமங்கள் தமிழில் தோன்றி, பின்பு வடமொழி ஆக்கம் செய்யப்பட்டவை என்பது ஆய்வாளர்கள் கருத்து. திருமூலர் காலத்திற்கு முன்பே இந்த வடமொழி ஆக்கம் நடந் திருக்கிறது.

*"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்*
*தன்னை நன்றாகத் தமிழ் செய்யு மாறே"* *81*

என்று திருமூலர் அருளிச் செய்திருப்பதிலிருந்து இவ்வுண்மை புலப்படும்.

திருக்குறளில், **பதி, பசு, ஆணவம், கன்மம், மாயை** என்னும் சிவாகமச்சொற்கள் முறையே, **இறைவன், மன்னுயிர், இருள், வினை மருள்,** என்னும் தமிழ்ச் சொற்களில் அமைந்துள்ளன; **சத்துவம் இராசதம், தாமதம்** என்னும் உயிர்க்குணங்கள் மூன்றும் முறையே **காமம், வெகுளி, மயக்கம்** என்னும் சொற்களில் வருகின்றன; **'' பரமுத்திநிலை ''** என்பது **'' பேராஇயற்கை ''** 370 என்னும் தொடரில் காட்டப்படுகிறது; சிவத்தை **அன்பு** என்றும், சத்தியை **அருள்** என்றும் திருவள்ளுவர் குறிப்பிடுகிறார், இவற்றின் விரிவைத '' திருக்குறள் நெறி சைவ சித்தாந்தமே'' என்னும் தலைப்பின்கீழ்க் காணலாம்.

திருக்குறள் உரைப்பாயிரத்தில், பரிமேலழகர் '' மாந்தர்க்கு உறுதி என உயர்ந்தோரால் எடுக்கப்பட்ட பொருள் நான்கு. அவை **அறம் பொருள் இன்பம் வீடு** என்பன. அவற்றுள் '' வீடு '' என்பது, '' சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து '' என்று கூறியுள்ளார். இதிலிருந்து திருக்குறள், உயிர்க்கு உய்தி பயக்கும் நான்மறைச் செய்திகளைத் தெளிவாக எடுத்தியம்புகிறது என்பது இனிதே பெறப்படும்.

இன்னோர் அன்ன பன்னாட் பொருளைத் தன்னுள் அடக்கி இலங்கும் திருக்குறட் கருத்துக்களைக் கீழ்க்காணும் ஐந்து தலைப் புக்களில் வைத்துச் சிந்திப்பது பயனுடையதாகும் எனக் கருதுகிறேன் :

1. திருக்குறளை அணுகு முறை.
2. தெய்வத் திருமுறைகளில் தெய்வப்புலவரின் திருவாக்குகள்
3. திருக்குறள் நெறிக்குப் பிறசமயக் கொள்கைகள் பொருந்தாமை (பரபக்கம்)
4. திருக்குறள் நெறி சைவ சித்தாந்தமே (சுபக்கம்)
5. திருக்குறள் சைவர்களின் வேதமே.

# 1. திருக்குறளை அணுகு முறை

**தோற்றுவாய் :**

குறுகிய வெண்பாக்களால் ஆகியதால் குறள் என்னும் பெயரை உடையதாயிற்று; அதன் தெய்வத்தன்மை பற்றித் ‘திரு’ என்னும் அடைமொழியைப் (**Prefix**) பெற்றது. எனவே “திருக்குறள்” என்னும் பெயர், “பா” வகையால் அமைந்ததே அன்றி, அந்நூலின் உட்பொருள் நோக்கி அமைந்ததன்று என்பது பெறப்படும். சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று “திருவருட்பயன்” என்பது. அதுவும் குறள் வெண்பாப் போல அமைந்துள்ளது. திருவருளின் பயனை ஆன்மா பெறுதற்குரிய செய்திகளை அந்நூல் உட்பொருளாகக் கொண்டிருப்பதால், அது “திருவருட்பயன்” என்னும் பெயரைப் பெற்றது. அதுபோல, திருக்குறளின் உட்கிடை யாது என்பதைத் திருக்குறட் பெயரைக் கொண்டு அறிய முடியாது.

**1. பொது மறை :**

திருக்குறளுக்கு வழங்கும் பல பெயர்களுள் ‘பொதுமறை’ என்பதும் ஒன்று. திருக்குறளைப் பொதுமறை என்று கூறுவதற்கு என்ன காரணம்? நாடு, இனம், மொழி முதலிய வேறுபாடு கருதாமல், மனித சமுதாயம் முழுவதும் ஏற்றுக் கொண்டு. பின்பற்றத்தக்க கருத்துக்கள் திருக்குறளில் உள்ளன. ஒவ்வொரு மனிதனும் எப்படி வாழவேண்டும், பிறரை எப்படி மதிக்க வேண்டும், ஓர் இல்வாழ்க்கை எப்படி இருக்க வேண்டும், ஒரு துறவி என்றால் அவர் எத்தகைய அறங்களை மேற்கொள்ள வேண்டும், அரசுப் பொறுப்பில் இருப்பவர் எத்தகைய நடை முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும், ஒரு நட்பு எப்படி இருக்க வேண்டும், எப்படிப் பட்டவரோடு நட்புறவு கொள்ளக் கூடாது, பொருளை எப்படிப் பேண வேண்டும், எப்படிச் செலவு செய்யவேண்டும், ஒரு தந்தை எப்படி மக்களுக்கு நன்மை செய்யவேண்டும், ஒரு மகன் எப்படிப் பெற்றோர்க்கு உதவ வேண்டும், விருந்து என்றால் யாது, விதி எவ்வளவு வன்மை மிக்கது, விதியை வெல்வதற்கு வழியாது, ஒரு பெண் எப்படி இருக்கவேண்டும், மது அருந்துவதால் வரும் கேடு என்ன, புலால் உணவு தின்பது ஏன் தவிர்க்கப்பட வேண்டும், இறை வழி பாட்டின் இன்றியமையாமை யாது என்பன போன்ற பொது -வான அறவுரைகளை மிகவும் நாகரிகமான முறையில் திருவள்ளுவர் கூறியருளியுள்ளார்.

"மறை" என்ற சொற்கு, "வேதம்" என்று பொருள். **(A devine percept)** அஃதாவது மனிதனின் அறிவுக்குப் புலப் படும் வகையில் இறையுணர்வுகளை எடுத்துக் கூறும் செவ்விய நூலே மறை ஆகும். இந்நூலின் கருப்பொருளாக இருப்பது "மறை மொழி" எனப்படும். மறை மொழி **( Incantation)** என்பது மந்திரம் ஆகும். '**பொது மறை**" என்பது, மனித இனம் அனைத்திற்கும் பொருந்தும் பொதுவான செய்திகளைக் கூறுவது ஆகும். ஆகவே திருக்குறளைப் பொது மறை என்று கூறுகின் றார்களே அன்றி, உலகில் உள்ள எல்லா இனத்தினர்க்கும், மொழியி னர்க்கும், மதத்தினர்க்கும், திருக்குறளே வேதம் என்னும் பொருளில் அன்று. எடுத்துக்காட்டாக, திருக்குறள் மறுபிறப்புக் கொள்கையை உடன்படுகிறது; உலகில் உள்ள பெரும்பாலான மதத்தவர்கள் மறுபிறப்புக் கொள்கையை ஏற்பது இல்லை. எனவே திருக்குறளைப் பொது மறை என்று கூறுவது எப்படிப் பொருந் தும்? எனவே **திருக்குறள் உலகப் பொதுமறை அன்று**.

சைவ சமயத்தில் வேதம் பொது, ஆகமம் சிறப்பு என்னும் கொள்கை உள்ளது. சைவர்கள் வாழ்வில் பொதுவாகக் கடைப் பிடிக்க வேண்டிய நடைமுறைகளை வேதம் கூறுகிறது; சைவர்கள் இறையருளுக்கு உரியவர் ஆகும் வகையில் சிறப்பாகக் கடைப் பிடிக்கவேண்டிய முறைகளைச் சிவாகமம் ( சித்தாந்த சைவம் ) கூறுகிறது. இவ்வுண்மையைக் கருத்தில்கொண்டே, "வேதம் பொது, ஆகமம் சிறப்பு" என்னும் அறவுரை எழுந்தது, எனவே திருக்குறளைப் "பொது மறை" என்னும் நோக்கில் அணுகும் பொழுது, உலகில் உள்ள மனித இனம் முழுமைக்கும் பொது வான செய்திகளை உடைய ஒரு வேதம் என்று கருதுவது நல்லது. **திருவள்ளுவர் மனிதனைத் தெய்வம் ஆக்கும் முயற்சியில் இந் நூலைச் செய்தார்** என்று கூறினால், அது மிகையாகாது. அந்த அடிப்படையில் வைத்துத் திருக்குறளைப் 'பொதுமறை' என்று கூறலாம்.

## 2. தமிழ் மறை

"**தமிழ் மறை**" என்ற தொடர்க்குத் "**தமிழர் வேதம்**" என்பது பொருளாகும், எனவே, திருக்குறள் தமிழர்க்கு வேதம் ஆகி, மனித இனத்திற்குப் பொது மறையாக உள்ளது, "**வேதப் பொருளாம் மிகவிளக்கி........உள்ளம் உருக்கும்**" என்று மாங்குடி மருதனாரும், "**வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார் ஓத, வழுக்கு அற்றது உலகு**" என்று மதுரைப் பெருமருதனாரும் திருவள்ளுவமாலையில் கூறியிருப்பது, இங்குக் கருதத்தக்கது.

வடமொழியில் ரிக், யசுர், சாம, அதர்வ வேதங்கள் இருப்பதுபோல், தமிழ் மொழியிலும் அறம், பொருள், இன்பம், வீடு, என்னும் நான்மறை இருந்திருக்கின்றன என்று, திருமுறைகள் அருளிச்செய்துள்ளன. தமிழ் நான்மறை இப்போது கிடைக்கவில்லை; கடல்கோளால் அழிந்திருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். தமிழர்க்கு உரிய வேதம் ஆகிய நான்மறை எப்படி இருந்திருக்கும் என்பதைத் திருக்குறள் அமைந்திருக்கும் முறையை வைத்து அறியமுடிகிறது. இவ்வுண்மை, **''அறம் பொருள் இன்பம் வீடு என்னும் அந்நான்கின் திறம் தெரிந்து செப்பிய தேவு''** என்று திருவள்ளுவரின் தெய்வத் தன்மையை, மாமூலனார் என்னும் புலவர் கூறுவதிலிருந்து புலன் ஆகிறது. (திருவள்ளுவ மாலை–8)

தமிழ் மரபுப்படி அறத்தையும் பொருளையும் புறப்பொருளாகவும், இன்பத்தையும் வீட்டையும் அகப்பொருளாகவும் திருவள்ளுவர் அமைத்திருக்கிறார். **புறம்**-தனிமனிதனுக்குரிய அறத்தையும் பொது மனிதனுக்குரிய அறத்தையும் கூறுவது. **அகம்**-ஒருவன் ஒருத்திக்குரிய மறையையும், ஆண்டான் அடிமைக்குரிய மறை நிலையையும் கூறுவது. எனவே, நான்மறைப் பொருள் முழுவதையும் திருக்குறளில் காணலாம்.

## 3. முதல் நூலா? வழி நூலா?

முதல் நூல் தன்மை யாது என்பதைத் தொல்காப்பியம், பொருளதிகாரம், நூன் மரபு என்னும் தலைப்பில் 96-ஆவது சூத்திரமாக

> **''வினையின் நீங்கி விளங்கிய அறிவின்**
> **முனைவன் கண்டது முதல் நூல் ஆகும்''**

என்று தொல்காப்பியர் கூறுகிறார். இதன் பொருள் வருமாறு;-

''நல்வினை தீவினை என்னும் இருவினைகளின் நின்றும் நீங்கி விளக்கம் பெற்ற அறிவினை உடைய சான்றோர் செய்த நூல் எதுவோ, அதுவே முதல் நூல் ஆகும்.''

திருவள்ளுவர் எத்தகைய சான்றோர் என்பதை அவர் அருளிச் செய்த திருக்குறளே சான்று பகரும், ஆணவ மலப் பற்றும் மாயாமலப் பற்றும் நீங்கப்பெற்றமையால், அவற்றால் வரும் துன்பம் நீங்கப்பெற்று பிறப்பை அறுத்துப் பேரின்ப நிலை ஆகிய வீட்டினைப் பெற்றவர் திருவள்ளுவர். இதனை,

*"இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி*
*மாசறு காட்சி யவர்க்கு"* 352

என்னும் குறள் தெளிவுறுத்தும். அதற்குச் சான்றாக இருக்கும் இக் குறளில் வரும் **இருள்** ஆணவ மலத்தையும், **மருள்** மாயா மலத்தையும் **மாசு** பிறப்பையும் குறிக்கும். **"இருள் சேர் இருவினை"5** என்றமையால், ஆணவ மலம் நீங்கப் பெற்றமையால், தனமுனைப் போடு கூடிச் செய்யும் நல்வினையும் தீவினையும் இல்லாது ஒழியலாயிற்று, திருவள்ளுவரின் அறிவு நிலையான பொருளான சிவத்தையே காண்பது என்பதை,

*" மெய்ப்பொருள் காண்பது அறிவு " 423*

என்னும் அவர் வாய்மொழியாலேயே அறியலாம், இத்துணை நலன்கள் வாய்க்கப் பெற்ற திருவள்ளுவரே பெருஞ்சான்றோர் என்பதைச் " **சான்றாண்மை**" **99** என்னும் அதிகாரத்தில் வரும் குறட்பாக்களை நோக்கினால் எளிதில் புலனாகும். எனவே, திருவள்ளுவர் அருளிச் செய்த திருக்குறள், தொல்காப்பியர் கூறிய "முதனூல் இயல்பு" க்கு எல்லா வகையிலும் பொருந்து வதாக உள்ளது. ஆகவே **திருக்குறள் முதல் நூலே** என்பது பெறப்படும்.

" வழி நூல் இயல்பு " என்னும் தலைப்பின்கீழ் **97** - ஆவது சூத்திரத்தில்,

**" வழி எனப்படுவது அதன் வழித்து ஆகும் "**

என்று தொல்காப்பியர் கூறியுள்ளார். இதன் பொருள் வருமாறு: " வழிநூல் என்பது, முன் சூத்திரத்தில் சொன்னபடி சான்றோர் செய்த முதல் நூலின் வழியில் நின்று, அதனை ஒட்டிச் செய்யப் படுவதாகும்"

**திருக்குறள் எந்த ஒரு நூலையும் பின்பற்றி அமையவில்லை** என்பது யாவரும் அறிந்த உண்மை. எனவே திருக்குறள் வழி நூல் அன்று என்பது பெறப்படும், திருமுறைகள் எவ்வாறு முதல் நூல் எனப்படுகின்றனவோ, அவ்வாறே **திருக்குறளும் முதல்நூலே** என்பது எவராலும் மறுக்கப்பட முடியாத உண்மை ஆகும்.

மேலும் திருக்குறள் " அகர முதல " எனத் தொடங்கி, " முயங்கப் பெறின் " என முடிகிறது. தமிழ் மொழியின் முதல் எழுத்தில் தொடங்கி இருநூற்று நாற்பத்து ஏழாவது எழுத்தாகிய

'ன' கர ஒற்றுடன் முடிவதாகத் திருக்குறள் அமைந்திருப்பதால் **திருக்குறள் தமிழில் தோன்றிய முதல் நூல்** என்பதும் பெறப் படும். வேறு எந்த நூலையும் தழுவியோ, பிறமொழி நூல்களின் மொழிபெயர்ப்பாகவோ திருக்குறள் அமையவில்லை.

சிவஞான போதத்தைத் தழுவிச் சிவஞான சித்தியார் சுபக்கம அமைந்துள்ளதால், சிவஞானசித்தியாரை வழிநூல் என்கிறோம். இவ்விருநூல்களோடு புடை வைத்து எண்ணத்தக்க நூலாக இருப்பதால் சிவப்பிரகாசத்தைப் புடை நூல் அல்லது சார்பு நூல் என்கிறோம். திருக்குறள் அத்தகு சார்பு நூலும் அன்று; அஃது என்றும் முதல் நூலே ஆகும்.

## 4. சைவ நூலே என்பதற்கு ஆதாரம் :

திருக்குறளின் உட்கிடை யாது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டுமானால், தக்க உரை நூலின் துணைக் கொண்டே அதை அறியமுடியும். திருக்குறளுக்குப் பத்துப்பேர் உரை எழுதி யுள்ளனர். அவ்வுரைகளைப் "பதின்மர் உரை" என்பர். இவ்வுரை ஆசிரியர்கள் அனைவரும் திருவள்ளுவர் காலத்துக்குப் பலநூறு ஆண்டுகளுக்குப் பின்னர் தோன்றியவர்கள். அவ்வுரை களுள் சிறந்தது பரிமேலழகர் உரையே என்பது உமாபதி சிவாசாரியார் கருத்து. இதனை,

> "வள்ளுவர்சீர் அன்பர்மொழி வாசகம்தொல் காப்பியமே
> தெள்ளு பரி மேலழகர் செய்தவுரை - ஒள்ளிய சீர்த்
> தொண்டர் புராணம் தொகுசித்தி ஓர் ஆறும்
> தண்தமிழின் மேலாம் தரம்"

என்று அவர் அருளிச்செய்த வெண்பாவால் அறியலாம். இந்த வெண்பாவில், திருவள்ளுவர் செய்த திருக்குறள், மணிவாசகர் செய்த திருவாசகம், தொல்காப்பியம், **பரிமேலழகர் உரை**, பெரியபுராணம், சிவஞான சித்தியார் எனும் ஆறு நூல்களையும் தமிழ் மொழியின் தரத்தை உயர்த்தும் நூல்கள் என்று உமாபதி சிவம் கூறுகிறார். எனவே பரிமேலழகர் உரையே, சைவர்கள் கடைப் பிடிக்க வேண்டிய உரை என்பது தெளிவாகும்.

பரிமேலழகர் உரையைப் பிரமாணமாகக் கொள்வதற்கு, முதன்மையான காரணம் ஒன்று உள்ளது. பரிமேலழகர் காஞ்சி புரத்தில் வைணவ மரபில், உலகளந்த பெருமாள் கோயில் அருச்சக பரம்பரையில் பிறந்தவர்; ஒரு பட்டாச்சாரியாரின்

குமாரர். திருக்குறளுக்கு உரை எழுதும் பொழுது, நடுவுநிலை பிறழாமல் பொருள் எழுதியுள்ளார் என்பதை, ஒன்பதாவது குறளுக்கு அவர் எழுதியுள்ள சிறப்புரையிலிருந்து அறியலாம்.

*"கோளில் பொறியின் குணம் இலவே, எண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை"*

என்பது ஒன்பதாவது குறள். இதில் வரும் "**எண்குணத்தான்**" என்னும் சொற்குப் பரிமேலழகர் கீழ்க்காணுமாறு விசேட உரை எழுதியுள்ளார் :

"எண் குணங்கள் ஆவன : தன் வயத்தன் ஆதல், தூய உடம்பினன் ஆதல், இயற்கை உணர்வினன் ஆதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவில் ஆற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை என இவை; **இவ்வாறு சைவ ஆகமத்தில் கூறப்பட்டது**".

வைணவ மரபில் வந்த ஒருவர், இவ்வாறு வள்ளுவப் பெருந்தகையின் உள்ளக்கிடைக்கையைத் தெள்ளத் தெளிய எடுத்து இயம்பியமையாலேயே, பரிமேலழகர் உரையைப் பிரமாண மாகச் சைவ மரபினர் கொள்ள வேண்டும் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். பரிமேலழகரின் நேர்மைக்கு இந்த விசேட உரை ஓர் எடுத்துக்காட்டு; இன்னும் பலவற்றைப் பின்னர் காணலாம்.

பரிமேலழகர் கி. பி. 1272 ல் வாழ்ந்தவர் என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள். உமாபதி சிவாசாரியார் கி. பி. 1313 ல் வாழ்ந்தவர் என்பது, அவர் அருளிச்செய்த "சங்கற்ப நிராகரணம்" என்னும் சாத்திரநூலின் வாயிலாகப் புலனாகிறது. இந்த இடத்தில் மேலும் ஒன்றைச் சிந்திக்க வேண்டியிருக்கிறது. சிவஞானபோதம் அருளிச் செய்த மெய்கண்ட சிவாசாரியார் வாழ்ந்த காலம் கி. பி. 1232. அஃதாவது பரிமேலழகர், மெய்கண்ட சிவாசாரியாருக்கு நாற்பது ஆண்டுகள் பின்பு வாழ்ந்தவர் என்பது தெளிவாகிறது; ஆயினும் உமாபதி சிவா சாரியாருக்கு நாற்பத்து ஒன்று ஆண்டுகள் முன்பு வாழ்ந்தவர். எனவே, உமாபதி சிவாசாரியார் அருளிச் செய்த "திருவருட் பயன்" என்னும் குறள் வெண்பாவின் "பா" அமைப்பில் உள்ள சாத்திரத்தில், **திருக்குறளில் வரும் சைவ சித்தாந்தக் குறியீட்டுச் சொற்களையே,** உமாபதி சிவாசாரியார் பயன் படுத்தி உள்ளார் என்பதைக் காணலாம். அவற்றுள் சில வருமாறு :

| திருக்குறள் | திருவருட்பயன் |
|---|---|
| இருள் சேர் இருவினை - 5 | இருள் இன்றேல் துன்பு ஏன்? - 27 |
| அகர முதல எழுத்து - 1 | அகர உயிர்போல் - 1 |
| துறந்தார் பெருமை - 22 | துறந்தோர் துறப்போர் தொகை - 11 |

இன்னும் பலவற்றைப் பின்னர்க் காண்போம்.

## 5. பாயிரம் பற்றிய ஓர் ஆய்வு :

திருக்குறளில் உள்ள பாயிரத்தில் வரும் நாற்பது குறட்பாக்களும் திருவள்ளுவர் செய்தனவல்ல என்று சில புதுமை வாதிகள் கூறிவருகிறார்கள். இது பொருத்த மற்ற வாதம். "பாயிரம்" என்பது பொதுவாக முன்னுரையைக் ( **Preface** ) குறிக்கும்; மேலும் ஒரு நூல் நுவலும் திறனைக் ( **the mode of teaching** ) குறிப்பதும் ஆகும். இந்த வகையில் நோக்கும் பொழுது, திருவள்ளுவர் செய்துள்ள பாயிரம், எந்த எந்த அடிப்படைக் கருத்துக்களை மேற்கொண்டு, இந்த நூலை அவர் செய்திருக்கிறார் என்பதைத் தெளிவுறுத்துகிறது.

**திருக்குறளில் அறிவுப்பகுதி மிகுந்தும், அருள் பகுதி குறைந்தும் உள்ளன. திருமுறைகளில் அருள் பகுதி மிகுந்தும் அறிவுப்பகுதி குறைந்தும் உள்ளன.** திருக்குறளில் உள்ள பொருளும் இன்பமும் அறிவுப் பகுதி; அறம் அருள் பகுதி. சிவாகமங்களில் அறிவுப் பகுதியும் அருள் பகுதியும் சமமாக விரவி உள்ளன; ஆகமத்தில் வரும் சரியா கிரியா பாதங்கள் அறிவுப்பகுதிகள்; யோக ஞான பாதங்கள் அருள் பகுதிகள். திருக்குறளில் உள்ள அறத்துப்பாலில வரும் பெரும் பாலான குறள்கள், சிவாகமத்தில் வரும் ஞானபாதப் பொருளைக் கூறுவனவாக உள்ளன. இவற்றுள் பாயிரப்பகுதியில் வரும் நாற்பது குறள்களும், அறத்துப்பாலில் வரும் **நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவா அறுத்தல், ஊழ்** என்னும் ஐந்து அதிகாரங்களில் உள்ள ஐம்பது குறள்களும் முழுக்க முழுக்க, சிவாகமத்தில் உள்ள ஞானபாதப் பொருளைத் தெளிவுறுத்தி விளக்குகின்றன.

திருக்குறளின் "**சிறப்புப் பாயிரம்**" ஆகிய திருவள்ளுவ மாலையில், **நத்தத்தனார்** என்னும் புலவர், திருக்குறளில்

ஆயிரத்து முன்னூற்று முப்பது குறள்கள் உள்ளன, அவை பாயிரம் உட்பட்டன ஆகும் என்று கூறுகிறார். அந்தத் திருவள்ளுவ மாலை வெண்பா வருமாறு:

*" ஆயிரத்து முன்னூற்று முப்பது அருங்குறளும்*
*பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின் - போய் ஒருத்தர்*
*வாய்கேட்க நூல்உளவோ மன்னு தமிழ்ப் புலவ*
*ராய்க் கேட்க வீற்றிருக்க லாம்."*

இதன் பொருள் வருமாறு:

பாயிரம் நான்கு அதிகாரங்களோடு, ஆயிரத்து முன்னூற்று முப்பது அருமையான குறள் வெண்பாக்களையும், ஓதி உணர்ந்த பின்பு, இன்னொருவரிடம் போய், அவர் சொல்லி நாம் கேட்டு அறிவதற்கு, வேறு நூல்கள் இருக்கின்றனவோ ? இல்லை. எனவே, அநாதியே உள்ள தமிழில் புலமை நிரம்பியவர் ஆகிப் பிறர் நம்மிடம் வந்து, எதையும் கேட்டு அறியும் வண்ணம், நாம் சிறப்பாக இருந்த இடத்திலேயே வீற்று இருக்கலாம். "வீற்றிருத்தல்" என்பது, சிறந்த புலவர்கள் கூடியிருக்கும் சபையில், உயர்ந்த ஆசனத்தில் ஏறி, உயர்வுதோன்ற அமர்ந்து இருப்பதைக் குறிக்கும். இந்த வெண்பாவில் "பாயிரத்தினோடு" என்று கூறியிருப்பதால், திருவள்ளுவரே பாயிரத்தையும் செய்திருக்கிறார் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி என விளங்கும். எனவே, பாயிரம் இடைச்செருகல் எனக் கூறுவது போலி வாதமாகும்.

அறத்துப்பாலில் எத்தனை அதிகாரங்களைத் திருவள்ளுவர் செய்தார் என்பதை "எரிச்சலூர் மலாடனார்" என்னும் புலவர் திருவள்ளுவமாலையில் கூறியிருக்கிறார், அவர் கூற்று வருமாறு:-

*"பாயிரம் நான்கு, இல் லறம் இருபான், பன்மூன்றே*
*தூய துறவறம்; ஒன்று ஊழாக - ஆய*
*அறத்துப்பால் நால்வகையா ஆய்ந்துரைத்தார் நூலின்*
*திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து"*

இதன் பொருள் வருமாறு:-

திருவள்ளுவர், தமிழ் நான்மறையின் கருத்துக்களை ஆராய்ந்து, தம்மால் செய்யப்பட்ட நூலின் திறத்திற்கு ஏற்ப நன்மை உடைமையால், இவை இவை உரியவை என்று தெளிந்து

பாயிரம் நான்கு அதிகாரமும், இல்லற இயல் இருபது அதிகாரமும் துறவற இயல் பதின்மூன்று அதிகாரமும், ஊழ் ஓர் அதிகாரமும் ஆகப் பாயிரம் முதலாகிய நான்கு வகையினை உடைய அறத்துப்பாலைக் கூறினர், "ஆய்ந்து உரைத்தார்" என்றமையால், **திருவள்ளுவர் மிகத் தெளிவாகச் சிந்தித்தே பாயிரத்தைத் தமது நூலில் செய்திருக்கிறுர் என்பது வெள்ளிடை மலை.**

திருவள்ளுவ மாலையில் ஐம்பத்தேழு வெண்பாக்கள் உள்ளன. அவற்றைச் செய்த புலவர் பெருமக்கள் பல்வேறு காலங்களில் வாழ்ந்தவர்கள். எனவே, திருவள்ளுவமாலை ஒரு தொகுப்பு என்பது பெறப்படும். இந்தப் புலவர் பெருமக்கள், தங்கம் நிகர் சங்கத்தமிழ் இலக்கியங்களைப் பங்கம் அறப் பயின்றவர்கள். எனவே அவர்கள் வாய்மையே பேசுபவர்கள் என்பதைத் தமிழ்ச் சான்றோர் அனைவரும் அறிவர். ஆகவேதான் திருவள்ளுவ மாலைக்குச் சிறப்புப்பாயிரம் என்று அறிஞர்கள் பெயரிட்டனர். "**சிறப்புப்பாயிரம்**" என்பது ஒரு நூலின் பெயரும், அந்த நூலைச் செய்வதற்கான காரணமும், அதனை ஆக்கியோன் பெயரும், அந் நூலின் தொகையும் அதன் பயனும் கூறுவது ஆகும். இந்தச் செய்திகள் அனைத்தையும் திருவள்ளுவமாலையில் காணலாம்.

## 6. பாயிரக் கருத்து விளக்கம்

திருநெல்வேலி, சிந்துபூந்துறை மா. வே. நெல்லையப்ப பிள்ளை, B. A., அவர்கள் திருக்குறட் பாயிரத்தில் உள்ள நாற்பது திருக்குறள்களையும் ஆராய்ந்து, "**திருக்குறட் பாயிரக் கருத்து**" என்னும் தலைப்பில், ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு கட்டுரை எழுதியுள்ளார்கள், அக்கட்டுரை கழக வெளியீடு எண். 199/1949-ல் வெளியாகியுள்ளது. அக் கட்டுரையில் உள்ள செய்திகள், சைவ சித்தாந்தம் பயிலும் மாணவர்களுக்குப் பெரிதும் பயனுடையனவாக இருக்கும். எனவே அவற்றைச் சுருக்கி நடைப் பெயர்ப்பு செய்து, இங்குக் குறிப்பிட விரும்புகிறேன்:-

பாயிரத்தில் உள்ள நான்கு அதிகாரங்கள், கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்பன ஆகும். அவற்றுள் **கடவுள் வாழ்த்தின் இன்றியமையாமை** வருமாறு:-

மக்கள் அடைவதற்கரிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களையும் உலக வாழ்விஞலேயே

பெறமுடியும். இத்தகைய உலக வாழ்வு செம்மையாக நடைபெறுவதற்கு, முதற்கண் வேண்டப்படுவது கடவுள். "தான் அலாது உலகம் இல்லை" என்று திருநாவுக்கரசு நாயனுர் கூறி அருளியபடி, கடவுள் இன்றி உலகம் உளதாகாது; உயிரில் பொருளும் உயிர்ப்பொருளும் உளதாகா. எனவே திருவள்ளுவ நாயனுர், பாயிரத்தில் முதல் அதிகாரமாகக் கடவுள் வாழ்த்து கூறியருளினுர். வாழ்த்து, வணக்கம், பொருள் இயல்பு உரைத்தல் என்னும் மூன்றில், நாயனுர் கூறியருளிய "கடவுள் வாழ்த்து" பொருளியல்பு உரைத்தல் வகையைச் சேர்ந்தது. முதல் எட்டுக் குறள்களில், கடவுள் இன்ன இன்ன குணம் உடையவர் என்று வகுத்துக் கூறி, ஒன்பதாவது குறளில் இந்த எட்டுக் குணங்களையும் தொகுத்துக் கூறினுர். இத்தகைய பேரறிவும் பேரன்பும் பேராற்றலும் உடைய கடவுளை வழிபட்டால் அன்றி உலக வாழ்வின் பயன் ஆகிய பிறவிப் பெருங்கடலை நீந்துதல் முடியாது என்று பத்தாவது குறளில் வற்புறுத்தியருளினுர்.

உயிர்கள் முடிவில் அடையும் பொருள், வீடு ஒன்றே ஆகும். அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றும், வீட்டை அடைவிக்கும் கருவிகளாய் உதவும். **எல்லாக் குறள்களிலும் கடவுளைத் திருவள்ளுவர் ஒருமையிலேயே சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது;** உயிர்கள் பல என்னும் கருத்தை, "சேர்ந்தார், புரிந்தார்' வாழ்வார்" என்னும் சொற்களால் குறிப்பிடுகிருர்; "சேர்ந்தார், சேராதார்" என்னும் பன்மைச் சொற்கள் வாயிலாக, **உயிர்கள் சார்ந்ததன் வண்ணமாம் தன்மை உடையன** என்பதைத் தெளிவுறுத்துகிருர்.

## வான்சிறப்பு

உலகில் உள்ள உயிரில் பொருளையும் உயிர்ப் பொருளையும் இயக்கி ஆளவல்லது, அக்னியில் சூடுபோலக், கடவுளினின்றும் பிரிக்கமுடியாத அவனுடைய அருட்சத்தி ஆகும். இந்த அருட் சத்தியின் வெளிப்பாடாக அனைவரும் கண்கூடாகக் காணக்கூடியது 'மழை' யே ஆகும். மழை, எத்தகைய அறிவும் ஆற்றலும் உடைய மக்களின் சக்திக்கு மேற்பட்ட ஒரு சத்தியின் தொழிற்பாடு என்பதை யாவரும் அறிவர். கடவுளின் அருள்வழி உலகில் மனிதர்கள் ஒழுகினுல் அன்றித், துன்பம் அடைந்து வருந்துவர் என்னும் உண்மையைக் குறிப்பால் உணர்த்துகின்றது மழை. எனவே, கடவுள் வாழ்த்துக்குப் பினனர்க் கடவுளின் அருள் வெளிப்பாடு ஆகிய "**வான்சிறப்பு**" என்னும் அதிகாரத்தைத் திருவள்ளுவர் வைத்தருளினுர்.

மாநிலத்து உயிர்களுக்குக் குடிநீராய் உதவுவது மட்டும் அன்றி, உண்ணுவதற்கு ஏற்ற உணவுப் பொருள்களையும் உண்டு பண்ணுவது மழையே ஆகும். மழை பெய்யாவிடில், உழவுத் தொழில் நடைபெறாது; இல்லறத்தார் செய்யும் தானம் நிகழாது; துறவறத்தார் செய்கின்ற தவம் நிலைக்காது; திருக்கோயில்களில் பூசனை, விழா முதலியன நிகழா; பொருள் விளையாமையால் வாணிபம் நடைபெறாது; தொழில்கள் முடங்குவதால் அரசியலும் இயங்காது; இவ்வாறு அருளாற்றலின் தொழிற்பாடுகளை **"வான் சிறப்பு"** மூலமாகத் தெய்வத் திருவள்ளுவர் தெளிவுறுத்து கின்றார்.

**நீத்தார் பெருமை:**

ஆணவ மலத்தால் மறைப்புண்டு அறியாமையில் உழலும் மக்கள், கடவுளையும் கடவுளின் அருளையும் பற்றி அறிந்தால் அன்றி, உலக வாழ்வின் பயனைப் பெறமாட்டார்கள். கடவுளின் அருள் தங்களிடம் பதியப் பெற்ற பெரியோர்களே, அவ்வருளை அறிவார்கள். அத்தகைய பெரியோர்கள் மக்களுக்கு அறிவித் தால் அன்றி, மக்கள் அருளின் இன்றியமையாமையை அறிய மாட்டார்கள். எனவே, கடவுளின் அருள் விளக்கம் ஆகிய வான்சிறப்புக்குப் பின், மூன்றும் அதிகாரமாக **"நீத்தார் பெருமை"** யைத் திருவள்ளுவ நாயனுர் வைத்தருளினுர். "நீததார்" என்பவர், அகப்பற்று புறப்பற்று என்னும் இருவகைப் பற்றினையும் நீத்த முனிவர் ஆவர். அவர்கள் தங்களிடம் கடவு ளின் அருள் விளங்கப்பெற்றவர்கள்.

**"அறம் முதல் பொருள்களை உலகிற்கு உள்ளவாறு உணர்த்து வாரே நீத்தார்"** என்று உரையாசிரியர் பரிமேலழகர் குறிப்பிடு கின்றார். "நீத்தார்" என்று மட்டும் கூறாமல், "பெருமை" என்றும் கூறியமையால், உலகில் வாழும் மக்கள், அவர்கள் பெருமையை உணர்ந்து, அவர்கள் கூறும் மறைமொழிகளைக் கேட்டு, அவற்றின் வழி ஒழுகவேண்டும் என்பது பெறப்படும். **(திருக்குறளில் "குரு உபதேசம்" பற்றிய செய்தி இல்லை என்று சிலர் கருதுகிறார்கள். இந்த அதிகாரத்தில் வரும் சான்றோர்களே அருட்குரு ஆவர்)** இந்த குருமார்கள் ஆகிய நீத்தார், உலகில் உள்ள மக்களுக்கு அறத்தை உணர்த்துகிறார்கள்; இம்மை மறுமைப் பயன்களை எடுத்துக் கூறுகிறார்கள்; ஐம்புலன்களையும் வென்ற இந்த அருட்குருமார்கள் செயற்கு அரிய செயல் செய்யும் பெரியவர்கள், மறைமொழி ஆய திருவைந் தெழுத்தைத்

தைக் தக்கவர்களுக்குப் போதிப்பவர்கள்; எனவே இவர்கள் நிறைமொழி மாந்தர் எனப்படுகிறார்கள். எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் உடையவர்கள் ஆகலின், இவர்களே " **அந்தணர்** " என்னும் பெயர்க்கு உரியவர் ஆவர்.

**அறன்வலி உறுத்தல் :**

அத்தகைய அருட்குருமார்கள், உலகத்தில் உள்ள மக்கள் உய்யும்பொருட்டுக் கூறுகின்ற நிறைமொழியே " **அறம்** " ஆகும். " **அறம்** " என்பது, மன வாக்குக் காயங்களால் செய்யத்தக்கன வற்றைச் செய்வதும், தகாதனவற்றைச் செய்யாது ஒழிதலும் ஆகும். மக்கள் இவ்வாறு அறத்தின் வழி ஒழுகினாலன்றி, உலக வாழ்வின் பயனை அவர்கள் அடையமாட்டார்கள், ஆகவே பாயிரத்தில் " நீத்தார் பெருமை " நான்காவது அதிகாரம் ஆகிய " **அறன்வலியுறுத்தல்** " என்பதை வைத்துத் திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்தார்.

மனிதன் எப்படி வாழவேண்டும் என்னும் அடிப்படை அமைப்பைச் சட்டமாக்கி இறைவன் உருவாக்கிய கட்டமைப்பு அறம் ஆகும். ஆகவேதான் இறைவனை **அறவாழி அந்தணன்** என்றார் நாயனார். **(Virtue or moral duty of a man prescribed by God to be practised by man) அறம்**, மக்களுக்கு உலகு வாழ்வில் அடையும் **பொருள், இன்பம்**, என்னும் இரண்டு பொருள்களையும் தருவதுடன், முடிவில் அடையும் **வீடு** என்னும் பெரும் பொருளையும் தரவல்லது, அறத்தின் வழி ஒருவன் ஒழுகினால், அவன் அடையத்தக்க பொருளையும், அதுபற்றி நெறிக்குட்பட்ட சிற்றின்பத்தையும் அடைந்து, பின்பு அனுபவ உணர்வினால் பக்குவம் வாய்க்கும் பொழுது, உலகப் பொருளையும் சிற்றின்பத்தையும் விடுத்து, வீடு பேறு நாடி முயன்று, வீடு அடைதல் திண்ணம், ஆதலினாலேயே வீடுபேறு பற்றிய குறட் பாக்களை அறத்துப்பாலில் முன்னும் பின்னுமாக நாயனார் வைத்தருளினார். அறத்துப்பாலின் முன் உள்ள பாயிரத்தில் நான்கு அதிகாரங்களும், பின்னுள்ள **நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவா அறுத்தல், ஊழ்** என்னும் ஐந்து அதிகாரங்களும் வீடுபேறு பற்றிய செய்திகளைத் தெளிவுற விளக்குகின்றன. இதுகாறும் கூறியவற்றால் பாயிரத்தின இன்றியமையாமை இனிதே புலப்படும்.

## 7. கடவுளும் வீடும்

திருக்குறளில் "**கடவுள்**" என்னும் சொல்லும், "முத்தி" என்னும் பொருளைத் தரும் "**வீடு**" என்னும் சொல்லும் ஆட்சி பெறவில்லை ஆதலினால் திருவள்ளுவர் சமயக் கொள்கைகளைப் பேசவில்லை என்று சிலர் கூறுகிறார்கள். மெய்கண்ட தேவ நாயனார் அருளிச் செய்த சிவஞானபோத சூத்திரம், கருத்துரை, மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டு வெண்பா ஆகியவற்றில் கூட, "கடவுள்" என்ற சொல்லாட்சி இடம் பெறவில்லை. ஆதலினால் மெய்கண்டார் கடவுட் கொள்கையை ஆதரிக்கவில்லை ஏன்று கூற முடியுமா? அப்படிக் கூறினால் அதைவிடப் பேதைமை வேறெதுவும் இருக்க முடியாதல்லவா? அவ்வாறே திருவள்ளுவரும் கடவுட்கொள்கையை ஆதரிக்கவில்லை என்று கூறுவதும், "**பேதைமையுள் எல்லாம் பேதைமை**" யே ஆகும் அஃதாவது, தனக்குப் பயன்படாத ஒழுக்கநெறியில் பற்று வைத்து, கேடு விளைவிப்பவைகளைக் கைக்கொண்டு, நன்மை விளைவிப்பவைகளைக் கைவிடுதையே தொழிலாக உடையவர்கள் தாம், இவ்வாறு கூறுவர்.

கடவுளுக்கு உரிய இலக்கணம் மாறுபடாத சொற்கள் பலவற்றை மெய்கண்ட தேவ நாயனார், சிவஞான போதத்தில் அருளிச் செய்திருப்பது போலவே, திருவள்ளுவ நாயனாரும் இறைவன், வாலறிவன், வேண்டுதல் வேண்டாமை இலான, தனக்குவமை இல்லாதான், எண் குணத்தான் முதலிய சொற் களில் வைத்துத் தமது கடவுட்கொள்கையின் உறைப்பை உணர்த்தியருள்கின்றார்.

அவ்வாறே வீடுபேற்றினைத் திருவள்ளுவர், "சிறப்பு" என்னும் சொல்லாட்சியில வைத்துப் பேசுகிறார். எடுத்துக்காட்டாக,

> *"பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பு என்னும்*
> *செம்பொருள் காண்பது அறிவு"* 356

இங்குப் "**பேதைமை**" என்ற சொற்த "**ஆணவம்**" என்று பொருளாகும். "பிறப்பிற்குக் காரணம் ஆகிய ஆணவமல மறைப்பு உயிரை விட்டு நீங்குவதற்கு, வீடுபேற்றிற்கு நிமித்த காரணம் ஆகிய செவ்விய பொருள் எனப்படும் பரம் பொருளைக் காண்பதே ஒருவருக்கு மெய்யுணர்வு ஆகும்" என்பதே இந்தக் குறட்பாவிற்குரிய செம்பொருள் ஆகும். இதில் வரும் "சிறபபு" என்னும் சொற்குப் பொருள் கூறுகையில்,

**"எல்லாப் பொருளினும் சிறந்தது ஆகலின், "வீடு" சிறப்பு எனப்பட்டது"** என்று பரிமேலழகர் கூறியிருப்பது இங்குக் கருத்தில் கொள்ளத் தக்கது.

வீடுபேற்றைச் **'சிறப்பு'** எனவும், **'சிறந்தது'** எனவும் தொல்காப்பியரும் வழங்கியுள்ளார் என்பது நச்சினார்க்கினியர் கருத்து ஆகும். இதனை,

*"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே*
*பாங்கரும் சிறப்பில் பல்லாற்றானும்*
*நில்லா உலகம் புல்லிய நெறித்தே"*

என்னும் தொல்காப்பியம் - பொருளதிகாரம் - சூத்திரம் 76 கூறுகிறது. இதில் வரும் **"பாங்கரும் சிறப்பு"** என்னும் தொடருக்குத் "தனக்குத் துணை இல்லாத வீட்டு இன்பம்" என்று நச்சினார்க்கினியர் பொருள் கூறுகிறார்.

*"அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்*
*சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"*

என்னும் தொல்காப்பியம் - பொருள் அதிகாரம் - சூத்திரம் 190 - ல் வரும் பகுதிக்கு, நச்சினார்க்கினியர், **"அறம் பொருள் இன்பத்தில் சிறந்த வீட்டின்பம் பெறுவதற்கு"** என்று பொருள் கூறியிருக்கிறார். இதிலிருந்து, திருக்குறளில் இடம்பெறும் **"சிறப்பு"** என்னும் சொல், குறள் எண், 31-லும், 358-லும் **"வீடுபேறு"** என்னும் பொருளையே குறிக்கிறது என்பது பெறப்படும். படவே, திருவள்ளுவர் தமது நூலில் சமயக் கருத்தைக் குறித்துப் பேசவில்லை என்று கூறுவது போலி உரை என்பது பெறப்படும்.

## 8. உயிர்க்குரிய வாழ்நிலை மூன்று

ஒவ்வோர் உயிர்க்கும் மூன்று வகையான வாழ்க்கை நிலைகள் உள்ளன. அவை இம்மை, மறுமை, பிறப்பறு நிலை என்பன ஆகும். **"இம்மை"** என்பது இந்தப் பிறப்பில் உள்ள நிலையைக் குறிக்கும்; **"மறுமை"** என்பது அடுத்து வரும் பிறப்பில் நிகழ இருக்கும் நிலையைக் குறிக்கும்; **"பிறப்பு அறு நிலை"** என்பது பிறவிக்கு வராத பெருநிலையைக் குறிக்கும். திருவள்ளுவர் இந்த மூன்று வாழ்நிலைகளையும், தமது நூலில் சிந்தித்திருப்பதைக் கீழ்க் காணும் குறள்கள் வாயிலாக அறியலாம்:-

*"சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்*
*இம்மையும் இன்பம் தரும்" - 98.*

***''வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை; மற்றது***
***வேண்டாமை வேண்ட வரும்'' - 352.***

## இம்மை

இந்தப் பிறப்பில் வாழ வேண்டிய முறைப்படி, அறநெறியைக் கடைப்பிடித்து வாழவேண்டும். அப்படி வாழ்பவன் இந்தப் பூவுலகில் வாழ்ந்தாலும், அவனை உலகத்தில் உள்ளவர்கள் தெய்வமாக மதிப்பார்கள். இவ்வுண்மையைத் திருவள்ளுவர்,

***'' வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும்***
***தெய்வத்துள் வைக்கப் படும்'' - 50.***

என்று அருளிச்செய்துள்ளார்.

## மறுமை

'மறுமை' என்பது இறந்தபின் வரும் நிலையைக் குறிக்கும்; 'மறுமை இன்பம்' என்பது, இறந்த பிறகு, பசுப் புண்ணியம் காரணமாக சுவர்க்கம் முதலிய பதவிகளைப் பெற்று அங்கு அடையும் இன்பத்தையும், மறுபடியும் இந்த உலகத்தில் உயர்ந்த சூழ்நிலையில் பிறந்து அதனுல் அடையும் இன்பத்தையும் குறிக்கும்.

ஒருவன் மனத்தில் அழுக்கு இன்றி, உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று நடக்காமல் வாழ்ந்தால் மறுமையில் இன்பத்தைப் பெறுவான்; சில சமயங்களில் (ஓரோவழி) தாமத குண வயப்பட்டு மனத்தின் செம்மை திரிந்தாலும், நல்ல நண்பர்களோடு சேர்ந்து அதன் பயனுக மன அழுக்கு நீங்கப்பெற்று வாழ்ந்தாலும் அவன் மறுமை இனபத்தை அடைவான். இதனைத் திருவள்ளுவர்,

***'' மன நலத்தின் ஆகும் மறுமை; மற்று அஃதும்***
***இன நலத்தின் ஏமாப்பு உடைத்து '' - 459.***

என்று அருளிச்செய்துள்ளார்.

## பிறப்பறு நிலை

பிறப்புக்குக் காரணம் உயிர்க்குள்ள ஆணவ மலப் பற்றே ஆகும்; ஆணவ மலப் பற்று, இறையருளைப் பற்றி நின்றுல் அன்றி, அருது. இறையருளையே பற்றி நிற்கும் நிலையில், உயிர்க்கு உலகத்தில் உள்ள பற்று அற்றுவிடும்; ''எல்லாம் சிவன் செயல்'' என்னும் எண்ணம் தலைப்படும். உலகத்தின் நிலை

யாமையை அனுபவ வாயிலாக உணர்ந்துநிற் கும் நிலையில், மீண்டும் இவ்வுலகில் வந்து பிறக்கும் நிலை ஏற்படாது; அதுவே பிறப்பறு நிலை ஆகும். இதனைத் திருவள்ளுவர்,

*''பற்று அற்ற கண்ணே பிறப்பு அறுக்கும்; மற்று*
*நிலையாமை காணப் படும்'' - 349.*

என்று அருளிச்செய்துள்ளார்.

இதுகாறும் ஆய்ந்ததிலிருந்து, திருவள்ளுவர் மறுபிறப்பு உண்மையும் அதன் இயல்பையும் மட்டுமின்றி, பிறப்பே இல்லாத ஒரு பெருநிலையைக் குறித்தும் ஆழ்ந்து சிந்தித்துத் திருவருளால் நமக்கு உணர்த்தியுள்ளார் என்பது பெறப்படும். படவே, மறுபிறப் புக் கொள்கையை ஏற்காத வெளிநாட்டு மதத்தவர்கள் **(Persons following foreign philosophy on rebirth)** திருக்குறளோடு, அவர்கள் மத நூலை எப்படி ஒப்பிட்டுக் கூற முடியும்?

## 9. திருவள்ளுவர் முதன்மையாகக் கருதியது:

உலகத்திலுள்ள மனிதர்கள் அனைவரும் அறிந்து கொள்ளும் பொருட்டுத் திருவள்ளுவர், சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் முறையில் பல்லாயிரக்கணக்கான செய்திகளைத் திருக்குறளில் தெளிவுறுத்தியுள்ளார்.

***''எல்லாப் பொருளும் இதன்பால் உள; இதன் பால்***
***இல்லாத எப்பொருளும் இல்லை''***

என்று திருவள்ளுவமாலையில் மதுரைத் தமிழ்நாகனார் என்னும் புலவர் பெருமகனார் கூறியது போல அறநூல், பொருள்நூல், இன்பநூல், வீட்டுநூல் என்பவற்றில் உள்ள செம்பொருள், ஆக்கப்பொருள், குறிப்புப் பொருள் என்று மூன்று வகையால் பேசப்படும் எல்லாப் பொருள்களைக் குறித்தும் திருவள்ளுவர் தம் அரியநூலில் கூறியருளியுள்ளார். இவற்றுள் அவர் முதன்மையாகக் கருதியது **பிறர் நலம் பேணும் பெருந்தகைமையே** ஆகும்.

உணவு எல்லா உயிர்களுக்கும் தேவையானது. நாம் உண்ணும் பொழுது, பசித்த **பிற உயிர்களுக்குப்** பகுத்துக் கொடுத்து உண்ண வேண்டும். எல்லா அறங்களிலும் சிறந்த அறம் இஃதே என்பது திருவள்ளுவர் கருத்து. இவ்வுண்மையைத், திருவள்ளுவர்,

**"பகுத்து உண்டு பல் உயிர் ஓம்புதல், நூலோர்
தொகுத்த வற்றுள் எல்லாம் தலை"** 322

என்றருளிச் செய்கிறார்.

அறவழியில் பிறர்க்கு நன்மை ஏற்படும் என்றால், பொய்யைக் கூடக் கூறலாம், அதுமட்டுமல்ல; அந்தப் பொய்மைச் சொற்கள், மெய்மைச் சொற்களுக்கு நிகரானவை என்கிறார் பெருந்தகை. இதனை,

**"பொய்மையும் வாய்மை இடத்த, புரை தீர்ந்த
நன்மை பயக்கும் எனின்"** 292

என்னும் குறட்பாவால் அறியாலாம். எல்லா அறங்களிலும் சிறந்த அறம். "பொய்பேசாது இருப்பதே, பொய் பேசாது இருப்பதே' என்று இரண்டு முறை அழுத்தம் திருத்தமாகக் கூறிய பெருந்தகையே, பொய்க்கும் உண்மைக்குள்ள விலையைக் **(price)** கொடுக்க விரும்புகிறார் என்றால், அவரது உள்ளத்தில் முதன்மையாக மதிப்பது, பிறர் நலம் பேணும் கொள்கையையே என்பது இனிது பெறப்படும்.

பிறிதோர் உயிருக்கு ஏதேனும் துன்பம் வந்தால், அத்துன்பம் தனக்கு ஏற்பட்டால் ஒருவன் எப்படி வருந்துவானோ, அப்படியே பிற உயிரின் துன்பத்தைக் காணும் போது வருந்த வேண்டும். அப்படி வருந்தா விட்டால், அவன் எவ்வளவு பெரிய அறிஞனாக இருந்தாலும் அதனால் எந்தப் பயனும் இல்லை என்கிறார் பெருந்தகை, இதனை,

**"அறிவினான் ஆகுவது உண்டோ? பிறிதின் நோய்
தம்நோய் போல் போற்றாக் கடை"** 315

என்னும் குறட்பாவால் அறியலாம்.

"போற்றாக்கடை" என்று கூறியதால், பிறர்க்கு வருந்துன்பத்தைக் கண்டு வருந்துவதோடு மட்டும் நின்று விடாமல், அந்தத் துன்பத்தைத் துடைத்து அவரைக் காக்கவும் வேண்டும் என்று பெருந்தகை கருதுகிறார் என்பது பெறப்படும்.

**"அறிவு அற்றம் காக்கும் கருவி"** 421

என்றும்,

**"அறிவுடையார் எல்லாம் உடையார்"** 430

என்றும்,

" **அறிவுடையார் ஆவது அறிவார்** " 427

என்றும் இவ்வாறெல்லாம் கூறி, அறிவின் உயர்வை வலியுறுத்திய திருவள்ளுப் பெருந்தகை,

" **அறிவினுன் ஆகுவது உண்டோ ?** 315

என்று கூறியதற்கு என்ன காரணம் ? **எல்லாவற்றிலும் முதன்மையாக அவர் கருதுவது, பிறர் நலம் காக்கும் அருள் உள்ளம் உடைமையையே** என்பதைத் தெளிவுறுத்தும் பொருட்டே ஆகும். ஆகவே, ஒவ்வொரு மனிதனையும் தெய்வத் தன்மை உடையவனாக ஆக்கும் முயற்சியிலேயே திருவள்ளுவர் இந்த நூலை அருளிச் செய்திருக்கிறார் என்பது பெறப்படும்.

" அருளுடைமை " என்னும் அதிகாரத் தலைப்பிற்குப் பொருள் உரைத்த பரிமேலழகர், **தொடர்பு பற்றுது, இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செல்வதாகிய கருணை** " என்று கூறியுள்ளார். இதில் 'தொடர்பு பற்றுது " என்ற தொடருக்குப் பொருள், மனைவி, மக்கள், உற்றார், உறவினர் என்பன போன்ற தொடர்பு உடையவர்மீது மட்டுமன்றி எல்லோரிடத்தும் " என்பதாகும். இந்தத் தலைப்பிற்கு **மணக்குடியர்** என்னும் உரையாசிரியர், " யாதானும் ஓர் உயிர் இடர்ப்படின் அதற்குத் தன்னுயிர்க்கு உற்ற துன்பத்தினால் வருந்துமாறு போல வருந்தும் ஈரம் உடைமை " என்று கூறியிருக்கிறார். சிவபெருமானுக்குள்ள எண்குணங்களுள் ஒன்று ஆகிய " பேரருளுடைமை" என்னும் குணத்தைக் கொண்டே, உயிர்களிடத்துக் கொண்ட இரக்கம் காரணமாக, அவன் ஐந்தொழில் ஆற்றுகிறான் என்று சைவசித்தாந்தம் கூறுகிறது. **அனைத்து உயிர்களையும் சிவமாம் தன்மை பெறச் செய்ய வேண்டும் என்னும் நோக்கிலேயே, பெருந்தகை பிறர் நலம் பேணும் பெருந்தகைமையை முதன்மையாகக் கருதினார் என்க.**

## 10. திருக்குறளை அணுகும் முறை :

உலக மக்கள் அனைவரும் உய்ய வேண்டும்; பிறவிப்பயனை எய்த வேண்டும் என்னும் பெருநோக்கில் திருவள்ளுவ நாயனார், தம் நூலைச் செய்துள்ளமையால், மொழி, இனம், மதம் முதலியன கடந்த நிலையில், திருக்குறளை அறிஞர்கள் அனைவரும் போற்றுகின்றனர். ஒரு சிலர், திருக்குறள் தம் சமய உண்மையையே பேசுகினறது என்று உரிமையும் கொண்டாடுகின்றனர். எல்லாரும்

இயைந்து கொள்ளுமாறு சொல்லுவதில், வள்ளுவருக்கு இணையாக வைத்துப் பேசப்படுபவர் எவரும் இலர். ஆயினும் திருக்குறளை முன்னும் பின்னும் நோக்கிப் பல்கால் முயன்று பயில்பவருக்கே, அதன் உட்கிடை புரியும்.

முதலில் பயிலும் பொழுது விளங்காமல் மறைந்திருக்கும் நுண்பொருள், மீண்டும் மீண்டும் பயின்று உணர்பவர்க்குத் தெளிவாகப் படும். எனவேதான் திருக்குறள் **" மறை "** எனப் படுகிறது; தமிழில் செய்யப்பட்ட "முதல் நூல்" ஆகலின், **" தமிழ் மறை "** எனப்படுகிறது; சைவ சமயத்தைச் சார்ந்த ஒவ்வொருவரும், நூலில் உள்ள செய்திகள் அனைத்தையும் ஒன்றுவிடாமல் ஏற்றுக் கடைப்பிடிப்பதால், இது **" சைவர்களின் வேதம் "** எனப்படுகின்றது.

ஒரு நூலைப் பல்கால் பயிலப் பயிலவே அந்நூலின் குறிக்கோள் என்ன என்பது புலப்படும். நூலில் உள்ள ஒரு சில செய்திகளை ஓரிரு முறை படித்துவிட்டு அந்த அளவில ஆய்வு என்ற பெயரில் நோக்கினல், அந்நூலின் நயம் புலப்படாது. இவ்வுண்மையை உணர்த்தும் பொருட்டே,

*" நவில்தொறும் நூல் நயம் போலும், பயில்தொறும்*
*பண்புடை யாளர் தொடர்பு "* 783

என்று அருளிச் செய்தார் திருவள்ளுவப் பெருந்தகை.

இவ்வாறு திருக்குறளை ஓரிருமுறை படித்துவிட்டுப் பாராட்டுபவர்களுள், 'கடவுள் உண்டு' என்பாரும் உளர்; 'கடவுள் இல்லை' என்பாரும் உளர்; இருவினையும் வினைப்பயனும், மறுபிறப்பும் உள எனக் கொள்வாரும் உளர்; இவற்றை இலலை என மறுப்பாரும் உளர். எனவே, திருக்குறட் கருத்துக்களை முன்னும பின்னும் நோக்கி, அவற்றின் நோக்கையும் போக்கையும் உணர்ந்து, ஆராய்பவருக்கே அந்நூலின் உண்மைக் கருத்து யாது என்பது திண்ணமாகத் தெளியப்படும். இதனைக் கருத்தில் கொண்டே, திருவள்ளுவ மாலையில், தேனீக்குடி கீரனர் என்னும் புலவர் பெருமான்,

*" பொய்ப்பால பொய்யேயாய்ப் போயின; பொய்யல்லா*
*மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே - முப்பாலின்*
*தெய்வத் திருவள்ளுவர் செப் பியகுறளால்*
*வையத்து வாழ்வார் மனத்து. "*

என்று கூறியுள்ளார். "பொய் என்பது, நிலையில்லாதன வற்றைக் குறிக்கும்; "மெய்" என்பது நிலையானவற்றைக் குறிக்கும். இந்த வெண்பாப் பொருள் வருமாறு:

திருவருளின் துணைக் கொண்டு தெய்வத் திருவள்ளுவ நாயனுர், மூன்று பகுதிகளை உடையதாகக் கூறியருளிய திருக்குறளைக் கற்று அறியும் நிலையில், இந்த உலகில் வாழ் கின்ற மனிதர்களின் மனத்தில், நிலையிலாதன ஆகிய பகுதியில் உள்ளவை எல்லாம், அவர்களைப் பொறுத்த வரையில் பொய் யாகவே அவர்களுக்குப் புலப்படும். உண்மையை உள்ளவாறு உணரும் நல்லவர்களுக்குத் திருக்குறளில் உள்ள நிலையான பகுதியில் உள்ளன எல்லாம், மெய்யாகவே தோன்றும். அஃதாவது, அவரவர் அணுகும் முறையிலேயே திருக்குறளில் உள்ள 'மெய்ப்பொருள்'' காணக்கிடைக்கும் என்றவாறு.

திருக்குறள் மூன்று வகைப் பயன்களைத் தருவதாக அமைந்துள்ளது. அவை இம்மைப்பயன், மறுமைப்பயன், பிறப்பு அறு நிலைப்பயன் என்பன ஆகும். "இம்மைப்பயன்" என்பது, இந்த உலகில் எப்படி வாழ்வது என்பதற்குத் திருக்குறள் வழிகாட்டும் முறைமையைக் குறிக்கும். "மறுமைப் பயன்" என்பது, அடுத்த பிறப்பில் எப்படிப்பட்ட வாழ்வு அமையும் என்பதற்குத் திருக்குறள் வழிகாட்டும் முறைமையை குறிக்கும். "பிறப்பு அறு நிலைப் பயன்" என்பது, இன்ன இன்ன முறையில் இறைநெறி ஆகிய அற வாழ்வில் வாழ்ந்தால் மீண்டும் இவ்வுலகில் பிறவாப் பெருநிலையை அடையமுடியும் என்பதற்குத் திருக்குறள் வழிகாட்டும் என்பதைக் குறிக்கும்.

இம்மைப் பயனைக் குறித்துத் திருவள்ளுவர்,

*"வசை யொழிய வாழ்வாரே வாழ்வார்; இசையொழிய*
*வாழ்வாரே வாழா தவர்"* **240**

என்று அருளிச்செய்துள்ளார்.

மறுமைப் பயன் குறித்துத் திருவள்ளுவர்,

*"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்*
*தெய்வத்துள் வைக்கப் படும்"* **50**

என்று அருளிச் செய்துள்ளார்.

பிறப்பறு நிலைப்பயனைக் குறித்துத் திருவள்ளுவர்,

*"கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார், தலைப்படுவர்*
*மற்று ஈண்டு வாரா நெறி"*

என்று அருளிச் செய்துள்ளார்.

ஈண்டு வாரா நெறி – வீட்டு நெறி – முத்தி.

எவர் எவர் என்ன என்ன நிலையில் நின்று திருவள்ளுவரைக் காண்கிறார்களோ, அவர் அவர் அறிவுக்கும் அனுபவத்திற்கும் ஏற்றவாறு, திருக்குறள் நுட்பம் புலப்படும். நாம் உள்ளத்தில் எதையாவது நினைத்துக் கொண்டு, திருக்குறளைக் கற்கும் பொழுது, திருவள்ளுவர் கருத்து இதுதான் என்று எண்ணு பவருக்குத் திருக்குறளின் உட்கிடை புலப்படாது; திருவள்ளுவர் இந்தக் கருத்தை எப்படிக் கூறுகிறார், எந்த அடிப்படையில் இவ்வாறு கூறுகிறார் என்று முன்னும் பின்னும் நோக்கிக் காண்பவர்க்கே திருவள்ளுவர் கருத்தாழம் புரியும்; ஏனையோர்க்கு அது புரியாது. எனவே தான்,

*"காணாதான் காட்டுவான் தான் காணான்; காணாதான்*
*கண்டானாம் தான் கண்ட வாறு"*

என்றார் திருவள்ளுவர்.

அறத்துப்பாலின் பகுப்பைக் காணும் பொழுது, 1. உலக இன்பத்தைத் தரும் **உலகியல் அறம்** என்றும் 2. வீடுபேற்றினைத் தரும் **இறையியல் அறம்** என்றும் இரண்டு வகையில் வைத்துத் திருவள்ளுவர் சிந்தித்திருக்கிறார்.

உலகியல் அறத்தைக் கூறும் பொழுது, **அன்புடைமை, அடக்கம் உடைமை, ஒழுக்கம் உடைமை, பொறை உடைமை, அறிவுடைமை பண்புடைமை, நாணுடைமை ஊக்கம் உடைமை, ஆள்வினை உடைமை,** என்னும் **ஒன்பது உடைமைகளைப்** பேசிய திருவள்ளுவர், இறையியல் அறம் பற்றிப் பேசும் பொழுது, **அருளுடைமை** என்னும் ஒரே ஓர் உடைமையைப் பற்றிக் கூறியதன் நோக்கம் என்ன என்பதைச் சிந்திக்க வேண்டும். **"அருள்"** என்பது இயல்பாகவே எல்லா உயிர்கள் மேலும் செல்வதாகிய கருணையைக் குறிக்கும். அஃதே இறைவனின் குணம் ஆகும். ஆகவே, இறைத்தன்மைக்குத் தன்னைத் தகுதி உடையவனாக்க முயற்சி செய்பவனுக்கு, எல்லாக் குணங்களிலும் மேம்பட்டதாகிய இரக்க குணம் இன்றியமையாதது என்பதைப்

புலப்படுத்தும் பொருட்டே திருவள்ளுவ நாயனர், "அருளுடைமை" என்னும் பண்பையே சிறப்பாகப் பேசுகிறர்.

"அருளுடைமை" யை அடுத்துப் "புலால் மறுத்தல்" என்னும் அதிகாரம் வைக்கப்பட்டிருப்பதன் நோக்கம், ஊன் உண்பது அருள் உடையவர்க்குப் பொருந்தாது என்னும் காரணம் பற்றி என்று பரிமேலழகர் தந்திருக்கும் விளக்கம் கூர்ந்து நோக்கு தற்குரியது. "புலான் மறுத்தல்" அதிகாரத்தின் தொடக்கத்தி லேயே, முதல் குறட்பாவிலேயே, ஊன் உடம்பைப் பருக்கச் செய்வதற்காகப் பிறிதோர் உயிரின் உடம்பை நீ, தின்பாய் ஆயின், அருள் உடையவன் என்று உன்னை எப்படிக் கூற முடியும்; இறையருள்தான் உனக்கு உதவுமா? என்று நாயனர் கேட்டு அருளியதன் நுட்பத்தை எண்ணிப் பார்க்கவேண்டும்.

புலால் என்பது பிறிதோர் உடம்பின் புண்; எனவே புலால் உண்பது புண்ணைத் தின்பதற்குச் சமமாகும்; உன் புண்ணையே நீ உண்பாயா? அது இழிந்த செயல் அல்லவா? எனவே புலால் உண்பவன், தூயனல்லன்; உணவுப் பழக்கம் உள்ளத்தை மாற்றும். எனவே உன்னிடம் எப்படி இரக்கத்தை எதிர்பார்க்க முடியும்? ஒரே ஓர் உடைமை ஆகிய அருளுடைமையே, இறைத் தன்மை உடையவனுக்கு இன்றியமையாமையாதது. ஆகவே புலால் உணவை மேற்கொள்ளும் எந்தச் சமயத்தவரும், திரு வள்ளுவப் பெருந்தகையின் உள்ளக் கிடக்கையை அறியாதவரே ஆவர். அதனல், அருளுள்ளம் கொண்ட எவரும் புலால் உண்ணு தல் கூடாது என்பது பெறப்படும்.

அன்புடைமையை உலகியல் அறத்திலும் அருளுடைமையை இறையியல் அறத்திலும் வைத்ததன் காரணத்தை இனிக் காண்போம். திருவள்ளுவர் இல்லறத்தின் சிறப்பைக் கூறும் நிலையில் இல்லறஇயலில் "புதல்வரைப் பெறுதல்" என்னும் அதிகாரத்தை அடுத்து அன்புடைமையை வைத்துள்ளார். மக் கட்செல்வம் இல்லறத்தின் உயிர்நாடி; மக்களிடம் அன்பு பாராட்டி ஞல் அன்றி, வளர்ச்சி குன்றும். எனவே மனித இனம் முழுவ தும் அன்பை ஒரு பொது அறமாக உலகளாவிய நிலையில் போற்றிப் பாதுகாக்கவேண்டும்; அந்நிலையில்தான் உலக வாழ்வு இனிது நடைபெறும் - என்னும் இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டே அன்புடைமையை உலகியல் அறத்தில் வைத்தார். அருளுடைமை ஒன்றே ஒருவர்க்கு இறைத் தன்மையை ஏற்படுத் தும் என்பதால், அருளுடைமையை இறையியல் அறத்தில் வைத்தார். அருளினும் அன்பே பெரிது. அன்பு தாய்; அருள்

குழந்தை. தாயின்றிக் குழந்தை இல்லை. அன்பு இன்றி அருள் இல்லை.

முதலில் ஒவ்வொரு மனிதனும் அன்புடைமையைப் பேண வேண்டும்; குழந்தைப் பருவத்திலிருந்தே இப்பணி தொடங்க வேண்டும், பக்குவம் வாய்க்கப்பெற்ற நிலையில், அன்பு முதிர்ந்த நிலையில் அஃதே அனைத்து உயிர்களிடத்தும் கொள்ளும் அருளாக மாறும். இக்கருத்துப்பற்றியே **"அருள் என்னும் அன்பு ஈன் குழவி"** என்றார்; இத்தொடருக்குச் சைவசித்தாந்தச் செம்பொருள் ஒன்று உண்டு. அதனைப் பின்னர் பார்ப்போம்.

திருக்குறளில் உள்ள அதிகாரத் தலைப்புக்களைத் திருவள்ளுவரே செய்திருக்கவேண்டும் என்று கொள்வதே பொருந்தும். ஏனென்றால் ஒரு தலைப்பின் கீழ் அந்த அந்தத் தலைப்பிற்கு உரிய கருத்துக்களே பேசப்படுவதாலும், ஒரு தலைப்பிற்கும் அதனை அடுத்து வரும் தலைப்பிற்கும் பொருள் இயைபு இயல்பாகவே அமைந்திருப்பதனாலேயும் ஆகும். இவ்வுண்மையைப் பரிமேலழகர் உரையை ஊன்றிக் கற்றோர் எளிதில் அறிவர். மேலும் ஆயிரத்து முன்னூற்று முப்பது குறள்களையும் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கூறி இருந்தால், இவற்றை இத்துணை அழகு மிளிர எவராலும் வகைப்படுத்தித் தொகுக்க முடியாது. திருமுறைகளுள் முதல் ஏழு திருமுறைகளைப் பண் முறையில் தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பிகள் என்பதைச் சைவ உலகம் நன்கு அறியும். அவற்றை அருளிச்செய்த மூவர் முதலிகள் அவற்றிற்கு எந்தத் தலைப்பும் வைக்கவில்லை; அவற்றை வகைப்படுத்தவும் இல்லை. திருவள்ளுவர் தம் நூலைத் திருமுறைகளைப்போலன்றி வகைப் படுத்தித் தொகுத்துச் செய்திருக்கிறார்; ஏனென்றால் இந்த இடத்தில் என்ன சொல்ல வேண்டும் என்னும் கருக்கூடு **(A guide in shaping mouldings)** அமைக்காமல், இவ்வாறு ஒழுங்குபடுத்தப்பட்ட **(a stream-lined)** ஒரு செவ்விய நூலைச் செய்ய முடியாது என்பதாலேயே ஆகும். திருவள்ளுவரை அன்றி வேறு எவரும், இவ்வளவு பொருத்தமாக ஒவ்வொரு அதிகாரமாக அமைத்து, அதற்கு ஏற்ற தலைப்பையும் அமைத்துச் செய்ய முடியாது. அப்படி இன்னார் செய்தார் என்று இதுவரை எவரையும் ஆதாரத்தோடு குறிப்பிட்டுக் கூற முடியவில்லை ஆகலின், திருக்குறள் அதிகாரத் தலைப்பைத் திருவள்ளுவரே செய்தருளியுள்ளார் என்று கொள்வதே பொருத்தமாகும்.

இன்னும் எவ்வளவோ இதுபற்றிச் சிந்திக்கலாம். இஃது ஒரு தொடக்கமே ஆகும். அடுத்து திருமுறைகளோடு வைத்துத் திருக்குறளைச் சிந்திப்போம்,

# 2. தெய்வத் திருமுறைகளில் தெய்வப் புலவரின் திருவாக்குகள்

## தோற்றுவாய்

திருமுறைகளைத் திராவிட மாபாடியத்தில் மேற்கோளாகக் காட்டும்பொழுது, திருமுறை வாக்குகளைச் சிவஞான சுவாமிகள், **" அனுபவம் உடைய தேசிகன் அருள்வழி வரும் திருவாக்குகள் "** என்று கூறியருளியுள்ளார்கள். (பாடியம் சூத்திரம் - (6) அதிகரணம் - (1)).

**"எனதுரை தனதுரையாக நிமலன் என் எழில்கொள்வது இயல்பே "** (1-76-1) என்று திருஞானசம்பந்தப் பெருமான் திருவாக்கிலிருந்து, திருமுறைகள் சிவபெருமானாலேயே அருளிச் செய்யப் பெற்றவை என்பது பெறப்படும். திருமுறை வாக்குகள், அவற்றிற்குப் பின்னர்த் தோன்றிய சித்தாந்த சாத்திரங்களில் இடம் பெறுவது இயல்பானது. திருமுறைகள் தோன்றுவதற்கு ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னர்த் திருக்குறள் தோன்றியது. திருவள்ளுவப் பெருந்தகை அருளிச்செய்த திருக்குறட் கருத்துக்கள் பல, திருமுறைகளில் இடம்பெற்றுள்ளன.

இறைவன் அருளிச்செய்த தெய்வத் திருமுறைகளில் தெய்வப் புலவர் திருவள்ளுவ நாயனார் அருளிச்செய்த திருக்குறட் கருத்துக்கள் இடம்பெற்றுள்ளதிலிருந்து, ஓர் உண்மை புலப்படுகின்றது. திருமுறை ஆசிரியர்களை அதிட்டித்து நின்று சிவபெருமான் திருமுறைகளை அருளிச் செய்திருப்பதுபோல, திருக்குறள் ஆசிரியர் திருவள்ளுவ நாயனாரை அதிட்டித்து நின்று, சிவபெருமானே திருக்குறளையும் அருளிச் செய்துள்ளான் என்பதே அந்த உண்மை ஆகும். ஆகவேதான், நாடு, மொழி, இனம் கடந்த நிலையில் உலகில் உள்ள அனைவரும் ஏற்றுப் பாராட்டத்தக்க முறையில் திருக்குறள் அமைந்துள்ளது.

உலகில் உள்ள மக்கள் அனைவரும் அமைதியாக வாழும் வழி முறைகளை வகுத்து ஓதியதுடன், **" பேரா இயற்கை "** என்னும் முடிந்த நிலையாகிய வீடுபேற்று நிலையையும் அது கூறுவதால், **திருக்குறள் சிவபெருமானால் செய்யப்பட்ட நூலே ஆகும்.** இனித் திருக்குறளில் இடம்பெறும் சொற்கள் மட்டுமல்லாமல், கருத்துக்களும் எந்த அளவு திருமுறைகளில் இடம்பெறுகின்றன என்பதைக் காண்போம். எடுத்துக்காட்டுக்காக ஒரு சிலவே இங்குக் காட்டப் படுகின்றன.

## திருமுறைகளில் திருக்குறள்

இதனடியில் திருக்குறட் கருத்துக்கள் முதலில் கூறப்படுகின்றன. அவற்றைத் தொடர்ந்து, திருமுறைக் கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. குறட் கருத்தை அடுத்துக் குறட்பா எண்ணும், திருமுறைக் கருத்தை அடுத்துப் பண்முறையில் உள்ள திருமுறை எண்ணும் குறிக்கப்பட்டுள்ளன. திருமுறை எண்ணிலிருந்து அதனைச் செய்தருளிய ஆசிரியர் பெயர் புலப்படும்; எனவே திருமுறையாசிரியர் பெயர் கொடுக்கப்படவில்லை.

**1. அகர முதல எழுத்தெல்லாம் - 1**

**அகர முதலானை** *அணியாப்பன் ஊரானை* (1 - 88 - 5)

**ஆனத்தின் முன் எழுத்தாய்** *நின்றார்* (6 - 28 - 1)

**அகர முதலின் எழுத்தாகி** *நின்றாய்* (7 - 3 - 7)

திருவள்ளுவர் 'அ' கரத்தை இறைவனுக்கு உவமையாகக் கூறியது போல, சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோரும் 'அ' கரத்தை இறைவனுக்கு உவமையாகக் கூறியுள்ளனர்.

**2. ஆதி பகவன் - 1**

**சத்தியுள் ஆதி ஓர் தையல் பங்கன்** (1 - 115 - 4)

ஆதி – சத்தி; பகவன் – சத்தன் – சிவன். இதே கருத்திலேயே சம்பந்தரும் அருளிச் செய்துள்ளார்.

**3. கற்றதனாலாய பயன் என்கொல்? வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின் - 2**

''கற்றல் கேட்டல் உடையார் பெரியார், கழல்
கையால் **தொழுது** ஏத்தப்
பெற்றம் ஊர்த்த பிரமாபுரம் மேவிய
**பெம்மான் இவனன்றே''** (1 - 1 - 2)

''குறிகளும் அடையாளமும் கோயிலும்
நெறிகளும் **அவர் நின்றதோர் நீர்மையும்**
**அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்**
*பொறியிலீர் மனம் என் கொள்வதே?''* (5 - 90 - 6)

''மெய்யுணர்வு உடையவன் ஆகிய இறைவனது திருவடிகளைத் தொழார் ஆயின், அவர்கள் எந்த நூலைக் கற்றிருந்தாலும், அக்கல்வி யறிவினால் ஆகத்தக்க பயன் ஏதும் இல்லை''

என்னும் திருக்குறட் கருத்தையே இந்தத் திருமுறைகள் கூறுகின்றன.

4. மலர் மிசை ஏகினான் - 3

"மனன் உணர்வொடு மலர் மிசை எழுதரு பொருள் நியதமும் உணர்பவர்" (1 - 21 - 5)

"புகல் உடையோர் தம் உள்ளப் புண்டரிகத்து உள்ளிருக்கும் புராணர்" (1 - 132 - 6)

"நின்ற பூமேல் எழுந்தருளி இருந்தானை" (6-84-1)

"புண்டரிகப் புது மலர் ஆதனத்தார்" (6 - 53 - 8)

"அடியார்களின் உள்ளக் கமலத்தில் எழுந்தருளி இருக்கும் இறைவன்" என்று குறளில் உள்ள கருத்துக்கு ஏற்பத் திருமுறைச் சொற்கள் அமைந்துள்ளன.

5 வேண்டுதல் வேண்டாமை இலான் " - 4

"வேண்டாமை வேண்டுவதும் இல்லான் தன்னை" (6-46-9)

"ஒரு பொருளையும் விரும்புவதோ வெறுப்பதோ இல்லாதவன் இறைவன்" என்னும் குறள் கருத்து சொற்கிடந்தவாறே அப்பரடிகள் தேவாரத்தில் இடம் பெற்றுள்ளது.

6. "இருள் சேர் இருவினை" - 5

"ஊனத்து இருள் நீங்கிட" (1 - 38 - 3)

"இருள் தரு துன்பப்படலம் மறைப்ப" (4 - 92-4)

"இருள் அறுத்து நின்ற ஈசன் என்பார்க்கு" (5 - 31-8)

"இருள் ஆய உள்ளத்தின் இருளை நீக்கி
இடர் பாவம் கெடுத்து" (6 - 54-4)

"**இருள்**" என்ற சொல் திருக்குறளில், ஆணவ மலத்தைக் குறித்து இடம் பெறுகிறது. உயிர்களின் வினைகளுக்குக் காரணம் உயிர்களது ஆணவமலப் பற்றே ஆகும். ஆகவே "**இருள் சேர் இருவினை**" என்பது, ஆணவ மலத்தைப் பற்றி வரும் நல்வினை தீவினை என்னும் இரண்டினையும் குறிக்கும். சம்பந்தப்பெருமானும் நாவுக்கரசுப் பெருந்தகையும் இந்தக் கருத்தினையே, தம் தேவாரங்களில் இடமபெறச் செய்துள்ளனர் என்பது பெறப்படும்.

7. "பொறி வாயில் ஐந்து அவித்தான்" - 6

"ஐந்து புலனொடு வென்று பொய்மைகள்
தீர்த்த புண்ணியர்" (1 - 42-4)

"பொல்லாப் புலன் ஐந்தும் போக்கினன் காண் (6 - 8 - 6)

"மூக்கு வாய் செவி கண் உடல் ஆகிவந்து தாக்கும்
ஐவர் தம் ஆட்சியை அவிழ்த்து, அருள் நோக்குவான் (5 - 47 - 7)

"பொறிவாயில் ஐந்தினையும் அவியப்பொருது,
உன் அடியே புகும் சூழல் சொல்லே" (7 - 3 - 3)

"**பொறிவாயில் ஐந்தவித்தான்**" என்னும் திருக்குறட் கருத்து, **இயல்பாகவே பாசங்களின் நீங்கிய இறைவன்**, மெய்யான ஒழுக்க நெறியில் வழுவாது வாழும் அடியவர்களின் பொறிகள் வாயிலாக நிகழும் ஐந்து வகையான பற்றுக்களையும் அறுக்கச் செய்வான் என்பதைக் குறிக்கிறது. "**அவித்தான்**" என்ற சொல் இந்தச் செயப்படுபொருள் **குன்றுவினையில் அமைந்துள்ளது** என்பதைப் பரிமேலழகர் உரை மாட்சியால் உணரலாம். சம்பந்தர் அப்பர், சுந்தரர் ஆகிய மூவர் முதலிகளும் இந்தக் கருத்தையே மேற்கொண்டுள்ளனர்

இவ்வுண்மை அறியாது "அவித்தான்" என்று குறளிலுள்ள சொல்லைத் தன்வினை ஆக்கி, இறைவன் மேல் ஏற்றிப் பேசுவது, பெரும் பாவமாகும், ஒரே வினைச் சொல், செயப்படுபொருள் குன்றுவினையிலும் (**Transitive verb**) செயப்படுபொருள் குன்றியவினையிலும் (**Intransitive verb**) வருவதை ஆங்கில மொழியிலும் காணலாம். (**For example, REMOVE, CHANGE etc**) அது போலவே "அவித்தான" என்ற சொல், இந்தத் திருக்குறட்பாவில், செயப்படுபொருள் குன்றுவினையில் வந்துள்ளது என்பது போதரும், இறைவனின் இயல்பு இன்னது என்பதை அறியாதவரே, இச்சொல்லைச் செயப்படுபொருள் குன்றியவினையில் வைத்துப் பொருள் கூறி இடர்ப்படுவர்,

7. "பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார்" - 6

"பொய் இலா மெய்ந்நெறிக்கே தக்கிருந்தார்" (2 - 42 - 1)

என்னும் சம்பந்தப்பெருமான் திருவாக்கில் உள்ள '**தக்கு இருந்தார்**" என்ற தொடர், திருக்குறளில் உள்ள நெறி நின்றார்" என்னும் தொடர்க்கருத்தை விரித்துக் கூறுவதை அறியலாம்,

8. **தனக்கு உவமை இல்லாதான்" - 7**

**" தன்னொப்பார் இல்லாத தூயவன்" ( 1 - 113 - 2 )**

**" மற்றொரும் தன்னொப்பார் இல்லாதானை ( 6 - 1 - 2 )**

இறைவன் எந்த வகையாலும் பிறர்க்கு நிகரானவனல்லன் என்னும் திருவள்ளுவ நாயனார் கருத்தையே, திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும் திருநாவுக்கரசு நாயனாரும் திருமுறைகளில் அருளிச் செய்திருப்பதைக் காணலாம்.

9. **" அறவாழி அந்தணன் " — 8.**

*"கொடிமாடச் செங்குன்றூர் நின்ற* **அந்தணனைத்**
**தொழுவார்** *அவலம் அறுப்பரே" (1-107-11)*

**"அறவன் ஆரூர் தொழுது** *உய்யலாம்" (2-79-5)*

*"நால்வர்க்கு ஆலின் கீழ்* **அறவனை"** *(7-68-7)*

என்னும் மூவர் முதலிகளின் திருவாக்குகளிலிருந்து **"அந்தணன்"** என்னும் சொல் அறக்கடல் ஆகிய இறைவனையே குறிக்கும் என்னும் வள்ளுவர் வாய்மொழிக்குக், கட்டியம் கூறி நிற்பதைக் காணலாம்.

10. **" எண்குணத்தான் " – 9.**

**"எண்ணமரும் குணத்தாரும்"** *(2-69-1)*

**"எட்டு வான் குணத்து ஈசன்"** *(5-89-8)*

**"எட்டு கொலாம் அவர் ஈறு இல் பெருங்குணம்"** *(5-18-8)*

**"இறையவனை** *மறையவனை* **எண்குணத்தினானை"** *(7-1 -3)*

என்னும் திருவாக்குகள், திருவள்ளுவரின் அருள் வாக்குகளையே குறிக்கின்றன என்பதை அறியலாம். **" எண்குணம் "** என்ற திருக்குறட் சொல்லுக்குத் தமது சிறப்புரையில், எண்குணங்கள் இவை யிவை என்று சொல்லி, **"இவ்வாறு சைவ ஆகமத்துக் கூறப் பட்டது"** என்று நேர்மைக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் மைவைப் பெரியார் ஆகிய **" பரிமேலழகர் "** கூறியிருப்பது, நெஞ்சில் நிறுத்திவைப்பதற்கு உரியது.

11. **"தாளை வணங்காத் தலை" - 9.**

**"தலையால் தொழுவார்** *தலையாரே" (1-34-6)*

"தலையால் வணங்குவார் தலையானார்களே" *(1-80-7)*

"தலையே நீ வணங்காய் ... சேவடிக் கீழ் நின்று" *(4-9-1 & 11)* என்னும் திருமுறை வாக்குகளில் தெய்வத் திருவள்ளுவரின் சொல் ஆட்சி, முழுமையான பொருட் செறிவுடன் இடம் பெற்று இருப்பதைக் காணலாம்.

## 12. "கோள் இல் பொறியில் குணம் இல" - 9.

இந்தத் தொடருக்குப் பரிமேலழகர், "தத்தமக்கு ஏற்ற புலன்களைக், கொள்கை இல்லாத பொறிகள், பயன்படுதல் உடையன அல்ல" என்று பொருள் கூறுகிறார். அஃதாவது பார்வை முதலிய புலன்கள் இல்லாமல், கண் முதலிய உறுப்புக்கள் இருந்தும் பயன்படாதவாறுபோல, கடவுளை வழிபடாதவர்கள் மனித உடம்பைப் பெற்றிருந்தும், அந்த உடம்பின் பயனைப் பெறாதவரே என்பது கருத்து ஆகும்.

இந்தச் சிந்தனையோடு திருமுறைகளை நோக்குவோம்:-

"ஆமாத்தூர் அம்மானைக் காணாத கண்ணெல்லாம்
காணாத கண்களே" *(2-44-2)*

"கூறாத நா எல்லாம் கூறாத நாக்களே" *(2-44-7)*

"கேளாச் செவி எல்லாம் கேளாச் செவிகளே" *(2-44-8)*

"ஆக்கையால் பயன் என்? அரன் கோயில் வலம் வந்து
பூக்கையால் அட்டிப் போற்றி என்னாத இவ்
ஆக்கையால் பயன் என்" *(4-9-8)*

என்னும் திருமுறை வாக்குகளில், திருவள்ளுவ நாயனாரின், "கோள் இல் பொறியின் குணம் இல்" என்னும் திருக்குறட்டொடர் தெள்ளத் தெளிய இடப் பெற்றிருப்பது, இனிதே புலப்படும்.

## 13. "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவன் அடி சேரா தார்" - 10.

இறைவன் திருவடி என்னும் கட்டுமரத்தைச் சேர்ந்தவர், பிறவி என்னும் பெரிய கடலை நீந்திக் கரைசேர்வர்; அந்தக் கட்டுமரத்தைச் சேராதவர், கரைசேர முடியாமல், கடலில் அழுந்துவர் என்பதே இக் குறட்பாவிற்குச் செம்பொருள் ஆகும். இக் கருத்தையே,

'' இடர்க் கடலில் சுழிக்கப்பட்டு, இங்கு இளைக்கின்றேற்கு
அக்கரையை ஏற வாங்கும் தோணியை '' (6-46-4)

'' அற்றூர் பிறவிக்கடல் நீந்தி ஏறி அடியேன்
உய்யப்போவதோர் சூழல் சொல்லே '' (7-3-8)

'' பிறவி எனும் பொல்லாப் பெருங்கடலை நீந்த''
( 11-நம்பி மும்மணிக்கோவை )

என்னும் திருமுறை வாக்குகளில் காணமுடிகிறது.

## 14. எல்லாம் மழை - 15,

'' மழை எல்லா வல்லமையையும் உடையது '' என்று பரிமேலழகர் இத் தொடருக்குப் பொருள் கூறுகிறார். மழையைத் திருவருளுக்கு உவமையாக வைத்து, முன்பு சிந்தித்தது நினைவிருக்கலாம். இக்கருத்துப் பற்றியே,

'' மன் ஆனவன் உலகிற்கு மழை ஆனவன்'' (1-16-6)

'' ''சொரிவிப்பார் மழை'' (5-16-3)

(திருவருளாலன்றி மழை பெய்யாது என்பது சிந்திக்கத்தக்கது)

'' கார்க்குன்ற மழையாய்ப் பொழிவானை '' (7-59-3)
(திருவருளே மழையாய்ப் பொழிகிறது)

என்று திருமுறைகளும் முழக்குகின்றன.

## 15. தான் அமிழ்தம் 11

இந்தத் திருக்குறள் தொடருக்கு, '' மழைதான் உலகத்திற்கு அமிழ்தம் என்று உணரத்தக்கது '' என்று பொருள் கூறிய பரிமேலழகர், சிறப்பு உரையில், '' அமிழ்தம் உண்டார் சாவாது நிலை பெறுதலின், உலகத்தை நிலை பெறுத்துகின்றவானை, 'அமிழ்தம் என்று உணர்க' என்றார் '' என்று கூறியிருப்பது, திருவருளே உலகைப் படைத்துக் காத்து வருகிறது என்னும் கருத்தைத் திருவள்ளுவ நாயனார் மேற்கொண்டு, இந்த அதிகாரத்தைச் செய்தருளினார் என்பது தெளிவாகிறது. இக்கருத்தையே,

'' தூய நீர் அமுது ஆய வாறு அது சொல்லுக '' ( 7 - 88 - 9 ) என்று சுந்தரர் பெருமான் திருப்பாட்டில் கூறியருளியுள்ளார் என்பது பெறப்படும்.

**16. "விசும்பின் துளி வீழின் அல்லால், மற்று ஆங்கே பசும்புல் தலை காண்பு அரிது" 16**

மேகத்தின் துளி மண்ணில் வீழாதாயின், பூமியில் பசும் புல்லின் தலையையும் காணமுடியாது என்பதே இக்குறட்பாவிற்குக் கருப்பொருள். மழைத்துளி திருவருளின் வெளிப் பாடாகும். இக்கருத்தினையே சுந்தரர் பெருமான்,

***"குழைக்கும் பயிர்க்கு ஓர் மழையே ஒத்தியால்" (7-4-4)*** என அருளிச் செய்துள்ளார். "ஓர் மழையே" என்றது, இறைவன் ஒருவனே என்றற்போல அவனருளும் ஒன்றே என்பதைக் குறிக்கும். மழைத்துளிகள் பலவாய் உள்ளனபோல, அருட்சத்தியின் ஆற்றல்கள் பலவாய் இருக்கின்றன.

**17. "சிறப்பொடு பூசனை செல்லாது, வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு"**

"இந்த உலகில் மக்களால் தேவர்களுக்குச் செய்யப்படும் நித்திய நைமித்திகங்கள், மழை பெய்யாவிட்டால் நடைபெறா" என்பது இக்குறட் பாவிற்குப் பொருளாகும். நித்தியம் – நாள் தோறும் செய்யப்படும் பூசை; நைமித்திகம் – ஆண்டுக்கு ஓரிரு முறை நடக்கும் விழாக்கள். "வானோர்க்கும் ஈண்டு பூசனை செல்லாது" என்னும் தொடருக்கு வானவர்கள் ஆகிய தேவர்களும் இந்த உலகிற்குச், சிவபெருமானை வழிபடுதல் பொருட்டு வருகிறார்கள்; மழை பெய்யாவிட்டால், அந்த தேவர்களாலும் நித்திய நைமித்திக வழிபாட்டை நடத்த இயலாது என்றும் பொருள்கொள்ளப்படும்'. இந்தக் கருத்துப் பற்றியே,

***"வானோர் சிறப்போடு பூசிக்கும் திருவாரூரில்" (6 - 30 - 5)***

என்று அப்பரடிகள் அருளிச் செய்வாராயினர்.

இந்தக் கருத்தை இன்னும் தெளிதல் பொருட்டு, **நம் சொந்தப் புராணம் ஆகிய கந்த புராணத்தில்** சீகாழிப் பெருமானை வழிபடுதற்குத் தேவேந்திரன் பூவுலகிற்கு வருகை தந்த போது, திருக்கோயில் நந்தனவனம் மழை இன்றி வாடிய நிலையில் இருந்ததாகவும், காவிரியை வேண்டி வரவழைத்து அதன் நீரை, நந்தனவனத்திற்குப் பாய்ச்சி மலர்களை வளர்த்து பூசித்ததாகவும் உள்ள செய்தி, இங்குச் சிந்திப்பதற்குரியது. இந்திரனுக்கும் மழை கட்டுப்படவில்லை என்பது இதனால் பெறப்படுகிறது. படவே, **தன் வயத்தன் ஆகிய சிவபெருமானின் திருவருளே, மழை ஆகும்** என்பது தெளிவாகிறது.

## 18. "சுவை ஒளி ஊறுஓசை நாற்றம் என்று ஐந்தின் வகை தெரிவான் கட்டே உலகு" - 27

"சுவை ஒளி முதலிய தன்மாத்திரைகள் ஐந்தனது கூறு பாட்டையும் ஆராய்பவனது அறிவிலேயே உலகம் உள்ளது" என்பது இக் குறட்பாவிற்குப் பொருளாகும். "**ஐந்தின் வகை தெரிவான்**" என்பது, ஐந்து புலன்களிலும் கட்டுப்படாமல் தன்னைக் காத்துக்கொள்பவனைக் குறிக்கும். இக்கருத்தை,

> **"உரன் என்னும் தோட்டியால் ஓர் ஐந்தும் காப்பான்**
> **வரன் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து"** 24

என்னும் திருக்குறளோடு வைத்துச் சிந்திக்கத்தக்கது. இதன் பொருள், "திண்மை என்னும் அங்குசத்தினால், பொறிகள் ஆகிய யானைகள் ஐந்தினையும், தத்தம் புலன்களின்மேல் செல்லாமல் காப்பவன், எல்லா நிலத்திலும் உயர்ந்தது என்று சொல்லப்படும் வீட்டு நிலம் எனப்படும் வீட்டுலகத்தை அடையும் ஒரு வித்து ஆவன்" என்பதாகும். அஃதாவது புலன்களை வெல்வதாகிய வித்து, வீடு பேறு ஆகிய முத்தியை விளைவிக்கும் என்பது கருத்து. இந்தக் கருத்தையே,

> **"புலன் தாங்கி ஐம்புலனும் செற்றார் வாழும் பூம்புகலி"**
> **(1 - 16 - 8)**

> **"பொறி புலன்களைப் போக்கறுத்து, உள்ளத்தை**
> **நெறிப்படுத்து நினைந்தவர் சிந்தையுள்**
> **அறிப்புறும் அமுது ஆயவன்"** **(5 - 48 - 4)**

> **"உன் உருவின் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றத்து**
> **உறுப்பினது குறிப்பாகும் ஐவீர்"** ***(6 - 27 - 4)***

என்னும் திருமுறை வாக்குகள் தெளிவுறுத்துகின்றன.

## 19. "கனி இருப்பக் காய் கவர்ந்தற்று" (100)

என்னும் குறட்பா கூறும் உவமை, சொற்கிடந்தவாறே "**கனி இருக்கக் காய் கவர்ந்த கள்வனேனே**" (4 - 5 - 1) என்று அப்பரடிகள் திருவாக்கில் இடம் பெற்றிருப்பது, திருவள்ளுவ நாயனார் திருவாக்கின் சிறப்பைக் காட்டுகிறது,

## 20. "அகத்தூய்மை வாய்மையால் காணப்படும்" - 298

என்னும் குறட் கருத்து,

**" வாய்மையே தூய்மையாக மன மணி இலிங்கமாக "** **( 4 - 76 - 7 )** என்னும் அப்பரடிகள் வாக்கில் மிளிர்கிறது.

## 21. " நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை " 334

என்னும் திருவள்ளுவ நாயனுர் திருவாக்கு, **" இன்றுள்ளார் நாளை இல்லை" ( 5 – 84 - 9 )** என்னும் திருநாவுக்கரசு நாயனுர் திருவாக்கில் இடம் பெற்றுள்ளது.

## 22. " குடம்பை தனித்து ஒழியப் புள் பறந்தற்றே உடம்போடு உயிரிடை நட்பு - 338

கருவும் உயிரும் ஒன்ருய்ப் பிறந்து, இறக்கும் பொழுது உயிர் வேருய்ச் செல்வதுவரை, கரு அந்த உயிருக்கு ஆதாரமாய் நிற்கிறது. எனவே, முன்பு தனியாக இல்லாத முட்டை, பின்பு தனித்துக் கிடக்கிறது; அந்த முட்டையினுள் இருந்த பறவை, பருவம் வந்தும் பறந்து போய் விடுகிறது. அதுபோலவே, உடம்பிற்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு ஆகும். இக்கருத்தே,

**"கூட்டை விட்டு உயிர் போவதன் முன்னமே ( 5 - 84 - 2)**

என்னும் அப்பரடிகள் அருள்வாக்கில் மிளிர்கின்றது.

**திருமந்திரத்தில்,** இந்தத் திருக்குறட் கருத்தும் சொல்லும் அப்படியே இடம் பெற்றுள்ளன. இதனை,

**"உடம்பொடு உயிரிடை நட்பு அறியாதார்**
**மடம்புகு நாய்போல் மயங்குகின் றுரே" 2148**

என்று திருமூலர் திருவாக்கால் அறியலாம்.

## 23. " பற்றுக பற்றற்ருன் பற்றினை; அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு " 350

'எல்லாப் பொருளையும் பற்றி நின்றே, பற்றற்ற இறைவன் ஓதிய வீட்டு நெறியை, இதுவே நன்னெறி என்று மனத்துக் கொள்க; கொண்டு, (உயிரை) விடாது வந்த பற்றினை விடுவதற்கு அதன்கண் உபாயத்தை அம்மனத்தால் செய்க' என்று இதற்குப் பரிமேலழகர் உரை செய்துள்ளார்.

**" திருவாப்பனூரானைப் பற்றும் மனம் உடையார் வினைப்பற்று அறுப்பாரே " (1 - 81 - 1)**

"அருள் பற்று அல்லது, மற்று அடி நாயேன்
எப்பற்றும் இலன் எந்தை பிரானிரே" (5 - 96 - 9)

"மற்றுப்பற்று எனக்கு இன்றி
நின் திருப்பாதமே மனம் பாவித்தேன்" (7 - 48 - 1)

"பற்று நான் மற்றிலேன்" (8 - 28 - 3)

"மற்று நான் பற்றிலேன்" (8 - 28 - 4)

என்று சமய குரவர் நால்வர் அருள் வாக்கிலும் வள்ளுவப் பெருந்தகையின் கருத்து இடம் பெற்றிருப்பது, **திருக்குறள் சைவ சமய நூல்** என்பதை மெய்ப்படுத்துகின்றது.

**24. "உறங்குவது போலும் சாக்காடு, உறங்கி விழிப்பது போலும் பிறப்பு" – 339**

'இறப்பு வருவது, உறக்கம் வருவதோடு ஒக்கும்; அதன்பிறகு பிறப்பு வருவது, உறங்கி விழிப்பு வருவதோடு ஒக்கும்' என்பது இக்குறளுக்குப் பொருளாகும். இக்கருத்தை

"உறங்கி விழித்தால் ஒக்கும் இப்புறவி" (7 - 3 - 4)

என்னும் சுந்தரர் திருவாக்கில் காணலாம்.

**25. "இருள் நீக்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி மாசறு காட்சி யவர்க்கு" – 352**

ஆணவமலம் நீங்கப்பெற்று, மெய் உணர்வு உடையவருக்கு, அந்த மெய்யுணர்வு பிறப்பினை நீக்கி, வீடுபேற்றினைக் கொடுக்கும் – என்பது இக்குறளுக்குப் பொருளாகும். சைவ சித்தாந்தத்தின் உள்ள சிறந்த இக்கருத்து,

"இருள் நீக்கி எண்ணில் பிறவி கடத்தி
அருள் நீங்கா வண்ணமே ஆதி அருளும்
மருள் நீங்கா வானவர் கோனொடும் கூடிப்
பொருள் நீங்கா இன்பப் புலம்பயின் றானே" 1516

எனும் **திருமந்திரத்தில்** இடம்பெற்று இருப்பதிலிருந்து, திருக்குறளில் வரும் சமயக் கருத்துக்கள் அனைத்தும் சிவாகமச் சார்பு உடையன என்பது இனிதே பெறப்படும்.

**26. "சிறப்பு என்னும் செம்பொருள்" – 358**

"**சிறப்பு**" என்பது வீடுபேற்றினைக் குறிக்கும்.

"**செம்பொருள்**" என்பது, வீடுபேற்றிற்குக் காரணமாகிய சிவபெருமானைக் குறிக்கும், இக்கருத்தையே, மணிவாசகப் பெருந்தகை திருவாசகத்தில்

**"செம்பொருள் துணிவே, சீருடைக் கழலே**
**செல்வமே, சிவபெருமானே"** (8 - 37 - *1*)

என்று மேற்கொண்டருளியுள்ளார். இதிலிருந்து திருவள்ளுவ நாயனுர் சிவபெருமானையே தம் நூலில் கடவுள் எனக் கொள்கிருர் என்பது தெளிவாகிறது. "**செம்பொருளான சிவம்" 2563** என்னும் திருமந்திரக் கருத்தும் இங்குச் சிந்திப் பதற்குரியது.

## 27. "பிறப்பு என்னும் பேதைமை" – 358

பேதைமை என்பது, ஏனைக் குற்றங்கள் எல்லாவற்றினும் மிக்கது ஒன்று என்று பரிமேலழகர் பொருள் கூறுகிருர். குற்றம் என்பது குணத்திற்கு எதிரிடையான சொல், ஆகவே, குற்றம் உயிர்க்குச் செயற்கை ஆனது. உயிர் பிறவிக்கு உட்படுவ தற்குக் காரணம், இந்தப் பேதைமைக் கேடு ஒன்றே ஆகும். இக்கருத்தை

*"பிறவியால் வருவன கேடு உள ஆகலின்"* *(2 - 79 - 5)*

என்னும் சம்பந்தப் பெருமான் திருவாக்கும் தெளிவுறுத்துகின்றது.

## 28. "சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின், மற்றழித்துச் சார்தரா சார்தரு நோய்" - 356

இந்தக்குறளுக்குப் பரிமேலழகர், "ஒருவன் எல்லாப் பொருட்கும் சார்பு ஆய அச்செம்பொருளை உணர்ந்து, இரு வகைப் பற்றும் அற, ஒழுக வல்லான் ஆயின், அவனை முன் சாரக் கடவனவாய் நின்ற துன்பங்கள், அவ்வுணர் ஒழுக்கங்களை அழித்துப் பின் சார மாட்டா" என்று பொருள் கூறுகிருர். அஃதாவது, சிவபெருமானைச் சார்ந்து இருப்பதை அன்றிப் பிறசார்பு நிலையானதன்று என்பது கருத்து. இக்கருத்தையே,

**"சைவனுர் அவர் சார்பு அலால், யாதும்**
**சார்பு இலோம் நாங்களே"**

என்னும் சம்பந்தப்பெருமான் திருவாக்கு மெய்ப்படுத்துகின்றது.

**29. "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" - 362**

பிறப்பது துன்பம் என்பதை அறிந்தவன், வேண்டுவது ஒன்றாக இருக்கும் ஆயின், அது மறுபடியும் பிறந்துவிடக் கூடாது என்பதாகவே இருக்கும் - என்பது இத்தொடருக்குப் பொருளாகும். இக்கருத்தையே,

**"கேட்பதெல்லாம் பிறவாமை கேட்டொழிந்தேன்"**
**(7 - 21 - 2)**

**"வேண்டேன் புகழ், வேண்டேன் செல்வம், வேண்டேன் மண்ணும் விண்ணும், வேண்டேன் பிறப்பு, இறப்பு" (8 - 34 - 7)**

"இறவாத இன்ப அன்பு வேண்டிப், பின்வேண்டுகின்றார்; **பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்பு உண்டேல்** உன்னை என்றும் மறவாமை வேண்டும்" – பெ. பு. 60 (காரைக்கால் அம்மையார் புராணம்) என்னும் திருமுறை வாக்குகள் முழக்கு கின்றன. இந்தக்குறள் மொழி, திருவள்ளுவர் மறுபிறப்புக் கொள்கையினை உடையவர் என்பதற்குத் தக்க ஆதாரமாகத் திகழ்கிறது.

**30. "எண் என்ப ஏனை எழுத்து என்ப" – 392**

"எண் எழுத்து என்னும் கலைகள் இரண்டும்" என்பது இதற்குப் பொருள். இதனை,

**"எண்ணும் ஓர் எழுத்தும் ......**
**கடவுட்கு இடம் என்பர்"** **(1 - 34 - 4)**

**"எண் ஆனாய் எழுத்து ஆனாய்"** **(4 - 13 - 7)**

என்னும் திருவாக்குகள் மேற்கொண்டுள்ளன,

**31 "உள்ளத்து அனையது உயர்வு" - 595**

மனிதன் ஆர்வம் மிகுதியொடு முயற்சி செய்தால், அந்த முயற்சியின் அளவு அவனுக்கு உயர்வு உண்டாகும் என்பது இதற்குப் பொருள். இக்கருத்தையே,

**அண்ணல் கழல் நாளும் உள்ளமேல் உயர்வு**
**எய்தல் ஒரு தலையே"** **(1 - 119 - 1)**

என்னும் சம்பந்தப் பெருமான் திருவாக்கு மேற் கொண்டிருக்கிறது.

32 **"ஊழி பெயரினும் தாம்பெயரார், சான்றாண்மைக்கு ஆழி எனப்படும் வார்" - 989**

சான்றாண்மை என்பது உத்தமர்க்குள்ள இயல்பு. அதன் பெருமை பற்றி அது கடலுக்கு ஒப்பானது. அவ்வளவு பெரிய கடலையும் தாங்கி நிற்கும் கரையைப் போன்றவர்கள், அந்த உத்தமர்கள்; அவர்கள் இந்தக் கடலும் கரையும் இல்லாமல், காலம் திரிந்து உலகம் முடிந்தாலும், தாம் எதற்கும் கலங்க மாட்டார். இக்கருத்தையே அப்பாடிகள்,

**வானம் துளங்கில் என்? மண்கம்பம் ஆகில் என்?**
**மால் வரையும்**
**தானம் துளங்கித் தடுமாறில் என்? தண்கடலும்**
**மீனம் படில் என்? விரிசுடர் வீழில் என்?**
**வேலை நஞ்சு உண்டு**
**ஊனம் ஒன்று இல்லா ஒருவனுக்கு ஆட்பட்ட**
**உத்தமர்க்கே" (4 - 112 - 8.)**

என்று திருப்பாட்டில் தெளிவுறுத்தி யருளியுள்ளார்கள்,

33. **"தவமும் தவம் உடையார்க்கு ஆகும்"**

'முற்பிறப்பில் செய்த தவத்தை உடையவர்கட்கு மாத்திரமே இப்பிறப்பில் இடையூறு இன்றித் தவம் முயற்சிகள் நிறைவேறும் என்பது இதற்குப் பொருளாகும், இக்கருத்தையே,

" **தவம்மிக்கவர்க்கு அன்றித்** தாங்க ஒண்ணாதே 1661

என்று திருமூல நாயனார் தெளிவுற அருளிச் செய்தார்.

34. **"யான்எனது என்னும் செருக்கு அறுப்பான், வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்" - 346**

இதற்குப் பரிமேலழகர்,

"தான் அல்லாத உடம்பை '**யான்**' என்றும், தன்னோடு இயைபு இல்லாத பொருளை '**எனது**' என்றும் கருதி, அவற்றின் கண் பற்றுச் செய்தற்கு ஏது ஆகிய மயக்கத்தைக் கெடுப்பான், **வானோர்க்கும் எய்தற்கு அரிய வீட்டுலகத்தை எய்தும்**" என்று பொருள் கூறியுள்ளார் "**வானுலகம்**" என்பது சொர்கத்தைக் குறிக்கும், அதற்கும் உயர்ந்த உலகம் '**மோட்சம்**" ஆகிய சிவ

ாகத்தையே குறிக்கும், சிறப்புரையில் 'இருவகைப் பற்றினையும், ட்டவர்க்கே வீடு உளது '' என்று பரிமேலழகர் கூறியுள்ளார்.

திருவள்ளுவ நாயனாரின் இந்தச் சிவாகமக் கருத்தையே ருமூலர்,

**'' பதமுத்தி மூன்றும் பழுதுஎன்று கைவிட்டு,**
**இதம் உற்ற பாச இருளைத் துரந்து,**
**மதம் அற்று, '' எனது யான் மாற்றிவிட்டு ஆங்கே**
**இதம் உற்றவர்கள் சிவசித்தர் தாமே''** **2525**

என்று **தமிழ்ச்சிவாகமம்** ஆகிய திருமந்திரத்தில் ஓதியருளி யுள்ளார்.

**35. '' பற்றுக பற்றற்றான் பற்றினை '' 350**

என்னும் திருக்குறட் கருத்தைத் திருமந்திரம்,

**'' பற்றது பற்றின் பரமனைப் பற்றுமின்''** **298**

என்று ஓதுகின்றது,

**36. '' காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம் கெடக் கெடும் நோய் '' 360**

**'' காமம் வெகுளி மயக்கம்'' என்னும் மூன்றும் முக் குணங்களின் விகாரம்''** என்று **'' காலிங்கர் '' பொருள் கூறுகிறார்**. முக்குணங்கள் சத்துவம், இராசதம், தாமசம் என்னும் மூன்றாகும்; இவை ஆணவமலச் சார்பால் உயிர்க்குள்ள செயற்கைக் குணங்கள் ஆகும். இங்கு '' நோய் '' என்பது ஆணவமலத்தைக் குறிக்கும், முக்குணங்களின் செயல் ஒழிந்தால் அன்றி, ஆணவ மலம் உயிரை விட்டு நீங்காது, இக்கருத்துப்பற்றியே திருமூலர்,

**'' காமம் வெகுளி மயக்கம் இவை கடிந்து**
**ஏமம் பிடித்து இருந் தேனுக்கு எறிமணி**
**ஓம் எனும் ஓசையின் உள்ளே உறைவதோர்**
**தாமம் அதனைத் தலைப்பட்ட வாறே '' - 2436.**

என்று அருளிச்செய்துள்ளார்.

சிவஞானமாபாடியம், இரண்டாம் சூத்திரம், இரண்டாம் அதி கரணத்தில் 'புருட தத்துவம்' என்னும் தலைப்பின்கீழ், சிவஞான

சுவாமிகள் “**பஞ்சக் கிலேசத்தை மூன்றாய் அடக்கிக் காமம் வெகுளி, மயக்கம் என்றார் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரும்**” என்று கூறியருளியிருப்பதும சிந்திப்பதற்குரியது.

**37. “இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு” - 752**

**38, “கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஒண்டொடி கண்ணே உள” - 1101 [ஐம்புலனும்**

என்னும் இவ்விரு குறட்பாக்களும் அப்படியே முழுமையாக சேரமான் பெருமாள் நாயனார் அருளிச்செய்த “**திருக்கயிலாய ஞான உலா**” என்னும் **பதினோராம் திருமுறைப்** பனுவலில் முறையே 136 மற்றும் 173 ஆவது கண்ணிகளில் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. சேரமான் பெருமாள் நாயனார், சுந்தரமூர்த்தி நாயனாரின் கெழுதகை தோழர் என்பதை யாவரும் அறிவர்.

**39: “குணம் என்னும் குன்று ஏறி நின்றார்” - 29.**

என்னும் திருக்குறட் கருத்து, **ஒன்பதாம் திருமுறையில்** உள்ள **திருமாளிகைத்தேவர்** அருளிச்செய்த **கோயில் 3 “உறவாகிய யோகம்**” என்னும் பனுவலில் உள்ள

“*குரு நீ என்னும் குணக்குன்றே என்னும்*
*குலாத் தில்லை அம்பலக் கூத்தனையே*”

என்னும் பத்தாவது செய்யுளில் மேற்கொள்ளப்பட்டுள்ளது. “நிறை மொழி மாந்தர்” ஆகிய நீத்தார்களைக் குருநாதராகக் கொள்ளும் முறைமையைத் “திருக்குறளை அணுகு முறைமை” என்னும் தலைப்பில் முன்பே கண்டோம்.

**40. “அறம் பொருள் இன்பம் உயிர் அச்சம் நான்கின் திறம்தெரிந்து தேறப் படும்” - 501.**

“**உயிரச்சம்**” என்னும் சொற்குப் ‘**பரிதியார்**’ என்னும் உரை ஆசிரியர், “**மோட்சம்**” என்று பொருள் கூறுகிறார். எனவே அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உயிர்க்கு உறுதி பயக்கும் நாற்பொருளின் மேன்மையை ஆய்ந்து எந்த ஒரு செயலையும் செய்வது நலம் பயக்கும் என்பது இக் குறட்பாவிற்குப் பொருளாகும். இக்குறட்பாக் கருத்தைப் பெரியபுராணம் திருநகரச் சிறப்புப் பகுதியில்,

**"அறம் பொருள் இன்பமான அறநெறி வழாமல் *புல்லி***
***மறம் கடிந்து, அரசர்போற்ற வையகம் காக்கும்நாளில்" -17***

என்று சேக்கிழார் பெருமான் **பன்னிரண்டாம் திருமுறை**யில் மேற்கொண்டுள்ளார்.

**41.** திருமந்திரத்தில் இடப்பெற்றுள்ளவைகளில் உள்ள தலைப்புக்கள் பல, திருக்குறளில் உள்ள அதிகாரத் தலைபுக்களைச் சார்ந்தே அமைந்துள்ளன.

அவை வருமாறு:-

| திருமந்திரத் தலைப்பு | | திருக்குறள் தலைப்பு | எண் |
|---|---|---|---|
| கடவுள் வாழ்த்து | – | கடவுள் வாழ்த்து | 1 |
| நிலையாமை | – | நிலையாமை | 34 |
| கொல்லாமை | – | கொல்லாமை | 33 |
| புலான் மறுத்தல் | – | புலான் மறுத்தல் | 26 |
| பிறர் மனை நயவாமை | – | பிறன் இல் விழையாமை | 15 |
| வான் சிறப்பு | – | வான் சிறப்பு | 2 |
| அன்புடைமை | – | அன்புடைமை | 8 |
| கல்வி | – | கல்வி | 40 |
| கேள்வி | – | கேள்வி | 42 |
| கல்லாமை | – | கல்லாமை | 41 |
| நடுவு நிலைமை | – | நடுவு நிலைமை | 12 |
| கள்ளுண்ணுமை | – | கள்ளுண்ணுமை | 63 |
| பொறையுடைமை | – | பொறை உடைமை | 16 |
| பெரியாரைத் துணைக்கோடல் | – | பெரியாரைத் துணைக்கோடல் | 45 |
| துறவு | – | துறவு | 35 |
| தவம் | – | தவம் | 27 |
| அருளுடைமை | – | அருளுடைமை | 25 |
| அடியார் பெருமை | – | நீத்தார் பெருமை | 3 |
| கூடா ஒழுக்கம் | – | கூடா ஒழுக்கம் | 28 |
| புறங் கூறுமை | – | புறங் கூறுமை | 19 |
| வாய்மை | – | வாய்மை | 30 |
| அவா அறுத்தல் | – | அவா அறுத்தல் | 37 |
| ஊழ் | – | ஊழ் | 38 |

இதுகாறும் ஆய்ந்ததிலிருந்து, திருவள்ளுவ நாயனாரின் கருத்துக்கள் பன்னிரு திருமுறைகளிலும் மேற்கொள்ளப் பட்டிருப்பது தெள்ளிதின் புலப்படும். சித்தாந்த சைவம், பரம பிரமாணமாகக் கொள்ளும் பன்னிரு திருமுறைகளில், திருக் குறட் கருத்துகள் சொல்லால் மட்டும் அன்றிப் பொருளாலும் மேற்கொள்ளப்பட்டிருப்பதிலிருந்து, **திருக்குறளும் சித்தாந்த சைவரின் பரம பிரமாணமாகக் கொள்வதற்கு உரியது** என்பது பெறப்படும்.

## 3. திருக்குறள் நெறிக்குப் பிற சமயக் கொள்கைகள் பொருந்தாமை (பரபக்கம்)

### தோற்றுவாய்:

திருக்குறள் ஓர் அற நூல் மட்டும் அன்று; அஃது ஒரு சமய நூலும் ஆகும். திருவள்ளுவரைச் சமயவாதியல்லர் என்று கூறுவது பிழை ஆகும். திருக்குறளில், **நரகம் சுவர்க்கம், மோட்சம், மறுபிறப்பு, ஊழ்** பற்றிய செய்திகள் பேசப்படுவதால், திருவள்ளுவர் சமயக் கருத்துக்களைக் கொண்டிருந்தார் என்பது பெறப்படும். படவே, திருவள்ளுவர் சமயவாதியாகவும் இருந்திருக்கிறார் என்பது குறித்துச் சிறிது காண்போம்.

1. **நரகம்:**

> **" உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன்உண்ண**
> **அண்ணாத்தல் செய்யாது அளறு "** 255

என்னும் குறட்பாவிற்குப் பொருள் வருமாறு:

மிருகங்கள், பட்சிகள், நீர்வாழ்வன முதலிய ஒரு சார் உயிர்களின் நிலை, அவற்றின் உடம்புகளில் உள்ளது. எனவே, அவற்றின் ஊனை உண்ணாமல் இருந்தால்தான், அவ்வுயிர்கள் அந்தந்த உடல்களில் நிற்கும். ஆதலால் அந்த உயிர்களைக் கொன்று ஒருவன் உண்ணுவானாயின், நரகம் அவனை விழுங்கி விடும்; அதுமட்டுமன்று; விழுங்கிய அவனை மீண்டும் வெளி யேற்றுவதற்கு உமிழும் பொருட்டு வாயைத் திறக்கவும் செய்யாது. (அளறு – நரகம்). ஊன் உண்பவன் அந்தப் பாவத்தால் நீண்ட நாள் நரகத்தில் அழுந்திக் கிடப்பான் என்பது கருத்து.

இந்தக் குறட்பாவில், கொடிய தீவினைக்குப் பயன் நரகத் துன்பம் என்னும் சமயக்கருத்தைத் திருவள்ளுவர் வலியுறுத்து கின்றமையால், அவர் நரகத்தை உடன்படுகிறார் என்பது பெறப்படும்.

## 2. சுவர்க்கம்:

"கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை; கள்ளார்க்குத்
தள்ளாது புத்தேள் உலகு" 290

என்னும் குறட்பாவிற்குப் பொருள் வருமாறு:

களவுத் தொழிலையே செய்து கொண்டு இருப்பவர்க்கு, அவரது உயிர் நிற்பதற்கு இடமாய் இருக்கின்ற உடம்பும் பயன் இன்றி ஒழியும். ஆனால் களவுத் தொழிலைச் செய்யா தவர்க்கு, வெகு தொலைவில் இருக்கின்ற சுவர்க்கம் ஆகிய தேவலோகம் அவரைத் தவறாமல் ஏற்றுக் கொள்ளும். "கள்ளாமை" என்பது பிறரிடமிருந்து எப்பொருளையும் வஞ்சித் துக் கொள்ளாமையைக் குறிக்கும். கள்ளாமை உடையார்க்கு சுவர்க்கம் கிட்டும் என்கிறார், திருவள்ளுவர்.

"பெற்றான் பெறின், பெறுவர் பெண்டிர் பெருஞ் சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு" 58

என்னும் குறட்பாவிற்குப் பொருள் வருமாறு:

தம்மைப் பெற்ற கணவனை, மனைவியர் பேணிப் போற்றி வருவார் ஆயின், தேவர்கள் வாழ்கின்ற உலகத்தில் அந்தப் பெண்கள் பெறுதற்கரிய பெரும் சிறப்புக்களைப் பெறுவார்கள். "தற்கொண்டான் பேணி" - 56 என்னும் குறட் டொடரும் இதனுடன் வைத்து ஒப்பு நோக்கத் தக்கது.

இந்தக் குறட்பாவில், கணவனைப் பேணி உபசரிக்கும் மனைவியைப் பெருமைப் படுத்த எண்ணிய திருவள்ளுவர், வேறு ஏதேனும் சிறப்புக்களைக் கூறியிருக்கலாம். கள்ளாமை உடையா ருக்கும் அவ்வாறே செய்திருக்கலாம். அவ்வாறு செய்யாமல், தேவலோகச் சிறப்பைக் குறித்துப் பேசியது, திருவள்ளுவரின் சமயக்கருத்தை விளக்குகிறது. பேசத்தேவை இல்லாத இடத்தி

லும், பேசியதிலிருந்து, சமயக்கருத்துக்கள் அவர் உள்ளத்தி லிருந்து ஊற்றெடுத்து வெளிப்படுகின்றன என்பதை அறியலாம்.

### 3. மோட்சம் (வீடு பேறு) :

**''கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார், தலைப்படுவர்**
**மற்று ஈண்டு வாரா நெறி** **356**

என்னும் குறட்பாவிற்குப் பொருள் வருமாறு :

இந்த மக்கட் பிறப்பில், உபதேச மொழிகளை அனுபவம் உடைய தேசிகரிடத்துக் கேட்டு, அதனால் நிலைபேறுடைய தன்மை ஆகிய உண்மைப் பொருளை உணர்ந்தவர், மீண்டும் இந்தப் பிறப்பில் வராத நெறி ஆகிய வீடுபேற்றினைப் பெறுவர்.

சுவர்க்கம் வேறு; மோட்சம் வேறு. சுவர்கம் விண்ணுலகை வாழ்வு; மோட்சம் சிவலோக வாழ்வு. சிவலோகம் ஆகிய மோட்சம் பெறுதற்தரிய ஞானங்கள் நான்கனுள் கேட்டல் ஞானம் குறித்து, இந்தக்குறட்பாவில் திருவள்ளுவர் அறிவுறுத்து கின்றார்.

**''யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும்''** **346**

என்னும் குறட்பாவில் வரும் **''வானோர் உலகம்''** என்பது, தேவலோகம் ஆகிய சுவர்க்கத்தைக் குறிக்கும்; **''வானோர்க்கு உயர்ந்த உலகம்''** என்பது தேவர்களும் எய்துதற்கு அரிய வீட்டு உலகம் ஆகிய மோட்சத்தைக் குறிக்கும். மோட்சம் – வீடுபேறு.

### 4. மறு பிறப்பு :

**''வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை; மற்றது**
**வேண்டாமை வேண்ட வரும்''** **362**

என்னும் குறட்பாவிற்குப் பொருள் வருமாறு :

மீண்டும் மீண்டும் பிறப்பது, துன்பம் ஆகும் என்பதை அறிந்தவன், ஒன்றை விரும்புவானாகில், மீண்டும் ஒரு பிறவி வந்துவிடக் கூடாது என்பதையே விரும்புவான். அந்தப் பிறவாமைதான், எந்த ஒரு பொருளையும் விரும்பாமல் இருக்கும்

நிலைமையை விரும்பும்படி அவனுக்குத் தானே உண்டாக்கும். அஃதாவது மறு பிறப்பு விருப்பம் ஒருவனுக்கு இல்லையாயின், உலகில் உள்ள எந்த ஒரு பொருளையும் அவன் விரும்ப மாட்டான் என்றவாறு.

5. **ஊழ் :**

" **ஊழ்** " என்பது, ஒருவன் செய்த நல்வினை தீவினைப் பயன்கள், செய்தவனுக்கே சென்று சேர்வதற்குக் காரணம் ஆகிய " **நியதி** " யைக் குறிக்கும், இஃது இறைவனால் விதிக்கப்படுவதால் " **விதி** " எனப்படுகிறது. " **ஊழ்** " பற்றித் திருவள்ளுவர் ஓர் அதிகாரமே செய்தருளியுள்ளார், இவ்வாறு திருக்குறளில் நரகம், சுவர்க்கம், மோட்சம், மறுபிறப்பு, விதி என்பன பற்றித் திருவள்ளுவர் தெள்ளத் தெளியப் பேசி இருப்பதால், திருவள்ளுவர் சமயவாதியாகவும் இருந்திருக்கிறார் என்பது புலப்படும்.

மேற்சொன்ன நரகம், மோட்சம் முதலியன பற்றித் திருவள்ளுவர் பேசும்போது, எந்தச் சமயத்தைச் சார்ந்து நின்று பேசுகின்றார் என்பதை, நேர்மையுடன் காய்தல் உவத்தல் இன்றிச் சிந்திப்பவர்க்குச் சித்தாந்த சைவம் அல்லாத பிற சமய நெறிகளில் அவருக்கு உடன்பாடு இல்லை என்பது தெளிவாகும். அதுபற்றி இனிச் சிந்திப்போம்.

**சமணம் பொருந்தாமை :**

1. சமணர்கள் இல்லறத்தைப் போற்றவில்லை; துறவறத்திற்கு வந்துதான் மனிதன் முத்தியைப் பெறமுடியும் என்பது சமணர் கொள்கை. இக்கொள்கையைத் திருவள்ளுவர் மறுத்து,

> **" அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின், புறத்தாற்றில்**
> **போஒய்ப் பெறுவது எவன்?"** 46

என்று கேட்கிறார், இதன் பொருள் வருமாறு :

ஒருவன் அறத்தின் வழியே இல் வாழ்க்கையைச் செலுத்து வானாயின், அவன் அதற்குப் புறம் ஆகிய துறவற நெறியில் சென்று என்ன பயனைப் பெறப் போகிறான்? அடுத்து,

**"அறன் எனப் பட்டதே இல்வாழ்க்கை; அஃதும்**
**பிறன் பழிப்பது இல்லாயின் நன்று"** 49

என்னும் குறட்பாவில் தம் கருத்தைத் திருவள்ளுவர் வலியுறுத்துகின்றார். இதன் பொருள் வருமாறு :

இல்லறம், துறவறம் என்னும் இருவகை அறத்திலும், நூல்களால் அறம் என்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது இல்வாழ்க்கையே ஆகும். இவற்றுள் துறவறமோ என்று கேட்டால் அதுவும், பிறரால் பழிக்கப்படுவது இல்லை ஆயின், இல்லறத்தோடு ஒரு தன்மைத்தாக நன்று.

இவ்விரு குறட்பாக்களிலும் திருவள்ளுவர், இல்லறமும் துறவறமும் சமமாக மதிக்கத் தக்கன என்பதைத் தெளிவுறுத்தியுள்ளார். எனவே, இல்லறத்தைப் போற்றாத சமண் கொள்கையைத் திருவள்ளுவர் ஏற்க வில்லை என்பது தெளிவாயிற்று.

2. சமணத்தில் பெண்களுக்கு முத்தி இல்லை; ஒரு பெண் மீண்டும் ஒரு பிறவி எடுத்து, ஆணாகப் பிறந்தாலே முத்தி என்கிறார்கள்.

திருவள்ளுவர் இக்கொள்கையை உடன்படவில்லை என்பதைப் **"பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்" – 972** என்னும் குறட்பாக் கருத்து மெய்ப்படுத்தும்.

**"பெற்றான் பெறின்"** எனத் தொடங்கும் குறட்பாவில் – **58** கற்புடைப் பெண்கள், சுவர்க்கத்தில் பெறுதற்கரிய பெருஞ் சிறப்பைப் பெறுவர் என்று திருவள்ளுவர் கூறியுள்ளார். **"வீடு பேறு"** பற்றிப் பேசும் குறட்பாவில் – **356** ஆண் பெண் வேறுபாடு கொள்ளாமல், மக்களாய்ப் பிறந்த அனைவரும், "மெய்ப்பொருள் கண்டார்" ஆயின், ஆண் பெண் இருபாலாரும் வீடுபேறு பெறுவர் என்பது திருவள்ளுவர் கொள்கை. எனவே, சமண் கொள்கையை அவர் ஏற்கவில்லை என்பது பெறப்படும்.

3. உழவுத் தொழிலைச் சமணம் ஏற்பதில்லை. இல்லறத்தார் உழவைச் செய்வதால், மண்புழு போன்ற பல உயிர்களைக் கொன்று பாவம் செய்கிறார்கள் என்றும், அந்தப் பாவத்தைப் போக்குதல் பொருட்டு, அவர்கள் சமண் துறவிகளுக்கு உணவு வழங்கவேண்டும் என்றும் அவ்வாறு சமண் துறவிகளுக்கு உதவுவ

தால் அவர்கள் மீண்டும் ஒரு பிறப்பில் சமண் துறவிகளாகப் பிறவி எடுத்தே முத்தியைப் பெறுவர் என்றும் சமண் கொள்கை கூறுகிறது.

இந்தச் சமண் கொள்கையைத் திருவள்ளுவர் ஏற்க வில்லை; உழவுத்தொழில் பாவம் என்று அவர் எந்த ஒரு குறட்பாவிலும் கூறவில்லை. அது மட்டுமன்று.

**" சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்; அதனால்**
**உழந்தும் உழவே தலை "** **1031**

என்று உழவுத் தொழிலின் சிறப்பைத் திருவள்ளுவர் பாராட்டிப் பேசுகின்றார். இதன் பொருள் வருமாறு;

பிற தொழில்களைச் செய்து பலவாறாகத் திரிந்து அலைந்தாலும், உலகம் முழுவதும் உழவரின் வழியிலேயே நிற்கின்றது. எனவே, உழவுத் தொழில் பிற தொழில்களை நோக்க, வருந்தி உழைக்கக் கூடியது ஆயினும், உலகில் முதன்மை நிலை வகிப்பது உழவுத்தொழிலே ஆகும். அடுத்து

**" உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார்; மற்றெல்லாம்**
**தொழுது உண்டு பின்செல் பவர் "** **1033**

என்னும் குறட்பாவில் உழவரது முதன்மையைத் திருவள்ளுவர் கூறுகிறார். இதன் பொருள் வருமாறு:

உழவுத் தொழிலைச் செய்து, தாமும் உண்டு, பிறரையும் வாழ வைத்து வாழ்பரே, உண்மையிலேயே தமக்கு உரியவராய் வாழ்பவர் ஆவர். மற்றவர் எல்லாம் பிறரைத் தொழுது, அதனால் தாம் உண்டு உடுத்தி, அவர்களுக்குப் பின்னாலே கைகட்டிச் செல்பவர் ஆவர். இதிலிருந்து என்ன தெரிகிறது? உழவுத் தொழிலைச் செய்து உலகில் உள்ள மக்கள் அனைவருக்கும் உணவைக் கொடுக்கும் உழவரைச் சமணர்கள் மதிக்காதது திருவள்ளுவருக்குப் பிடிக்கவில்லை என்பது தெளிவாகும்.

4. வேள்வியைச் சமணர்கள் ஆதரிக்க வில்லை; பௌத்தரும் வேள்வியை மறுக்கிறார்கள். திருவள்ளுவர் வேள்வியை ஆதரிக்கிறார்; வேள்வியில் உயிர்ப்பலி செய்வதைத் திருவள்ளுவரும் ஆதரிக்கவில்லை; ஆயினும் நெய் சொரிந்து செய்யும் வேள் வியைத் திருவள்ளுவர் ஆதரிக்கிறார். இதனை,

**"அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின், ஒன்றன்**
**உயிர் செகுத்து உண்ணாமை நன்று"** **259**

என்னும் குறட்பா தெளிவுறுத்தும். இதன் பொருள் வருமாறு:

நெய் முதலியவைகளை நெருப்பில் இட்டு ஆயிரம் யாகங்களைச் செய்வதை விட, ஒரு விலங்கின் உயிரைப் போக்கி, அந்தப் புலாலை உண்ணாமல் இருப்பது நல்லதாகும்.

இதிலிருந்து வேள்விகளாலும் பயன் உண்டு என்பதைத் திருவள்ளுவர் கருதுகிறார் என்பது புலப்படும்; ஆயினும், புலால் உண்ணாமல் இருப்பதைவிட வேள்வி ஒன்றும் பெரிதன்று என்று அவர் கருதுவதால், அந்த வேள்வியில உயிர்ப்பலி செய்வதைத் திருவள்ளுவர் ஏற்கவில்லை என்பதும் தெளியப்படும். அறவே வேள்வியை வெறுக்கும் சமண் கொள்கை திருவள்ளுவருக்கு உடன்பாடு இல்லை என்பது பெறப்படும்.

5. உலகம் தானே தோன்றி, தானே அழியும் என்றும் அதனைத் தோற்றுவித்து நிலைபெறச் செய்து அழிக்க ஒரு கடவுள் தேவை இல்லை என்றும் சமணர்கள் கொள்கிறார்கள். திருவள்ளுவர் இக்கொள்கைக்கு மாறான ஒரு செய்தியை,

**"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின், பரந்து**
**கெடுக உலகு இயற்றி யான்"** **1062.**

என்னும் குறட்பாவில் கூறியுள்ளார். இதன் பொருள் வருமாறு:

உலகத்தில் வாழ்பவர்கள் பிறரை யாசித்துத் தான் உயிரைக் காப்பாற்றி வாழவேண்டும் என்று ஒரு விதியை, இந்த உலகத்தைப் படைத்தவன் விரும்பி விதித்திருப்பான் என்றால், அந்தக் கடவுளும் யாசிப்பவரைப்போல எங்கும் அலைந்து திரிந்து அழியட்டும்,

இந்தக் குறட்பாவில், **"உலகு இயற்றியான்"** என வரும் தொடர், 'உலகைப் படைத்தவன் இறைவன்' என்னும் பொருளைத் தருவதாகும். ஆகவே, உலகம் தானே தோன்றி, தானே அழியும் என்னும் சமணர் கொள்கையைத் திருவள்ளுவர் ஏற்கவில்லை எனபது பெறப்படும். **உலோகாயதரும் சமண் கொள்கையையே கொண்டுள்ளனர்.**

சமணர்கள் கொள்ளும் அருக்க் கடவுள் மனிதர்களுள் உயர்ந்த ஒருவனே ஆவன். அவர்களது அருகக் கடவுள் படைத்தல், காத்தல் முதலிய எந்தத் தொழிலும் செய்வதில்லை என்று சமணர்கள் கூறுகிறார்கள். உலகம் சடம். சடப்பொருள் தானே இயங்குவதில்லை; அறிவுடைப் பொருள் ஒன்றினால்தான் அச் சடம் இயங்கவேண்டும். எனவே, உலகத்தைப் படைக்க ஒருவன் தேவை இல்லை; அது தானே தோன்றியது என்று கூறும் சமண் கொள்கை பகுத்தறிவுக்கும் ஒவ்வாததாக இருக்கிறது.

6. "**ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும்**" என்பது சமண் கொள்கை. இதற்குப் பொருள். "வினை செய்தவனை வினைப் பயன் தானே சென்று அடையும்" என்பதாகும். ஆகவே வினைப் பயனை உயிர்க்கு ஊட்டுவதற்குக் கடவுள் தேவையில்லை என்பது சமணர் கொள்கை. இந்தச் சமண்கொள்கையைத் திருவள்ளுவர் மறுத்து,

**"வகுத்தான் வகுத்த வகை அல்லால் கோடி**
**தொகுத்தார்க்கும் துய்த்தல் அறிது" 377.**

என்னும் குறட்பாவில் தெளிவுறுத்தியுள்ளார், இதன் பொருள் வருமாறு:-

ஐம்பொறிகளால் நுகரப்படும் கோடிக்கணக்கான பொருள்களை முயன்று ஒருவன் சேர்த்தாலும், நுகருமாறு இறைவன் ஊட்டினால் அல்லது, அவ்வாறு சேர்த்தவன் அவற்றை அநுபவிக்க முடியாது.

முயற்சிசெய்து பொருளைக் குவிப்பதுமட்டும் ஒருகால் கூடினாலும் கூடும்; ஆனால் அதனை அனுபவிப்பதோ இறைவன் விதித்த விதி இருந்தாலன்றி கூடாது என்பது கருத்து. வினை, சடம். வினைப்பயனும் சடம். எனவே இறைவன் இயக்காமல் சடம் எப்படி இயங்க முடியும்? இதனாலேயே "**கைக்கு எட்டினதும் வாய்க்கு எட்டாது**" என்னும் பழமொழியும் எழுந்தது.

வினைப்பயன், வினை செய்தவனைத் தானே சென்று அடையும் என்னும் கொள்கையைத் தெளிவுறுத்தும் பொருட்டு.

***"பல் ஆவுள் உய்த்து விடினும் குழக்கன்று***
***வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்***
***பழவினையும் அன்ன தகைத்தே தற்செய்த***
***கிழவனை நாடிக் கொளற்கு"***

என்னும் நாலடியார்ச் செய்யுளைச் சமணர்கள் எடுத்துக்காட்டு வெண்பாவாகக் காட்டுவர். இந்த வெண்பாவில், 'தாய்ப்பசுவைக் கன்றுக்குட்டி தானே சென்று அடைவதைப்போல' என்னும் உவமையில் வைத்து, வினைப்பயன் வினை செய்தவனைத் தானே சென்று அடையும் என்றார்கள். வினையும் வினைப்பயனும் சடமாய் இருப்பதுபோல், உவமையும் சடப்பொருளைக் கொண்டு காட்டாமல், அறிவுடைப் பொருளைக் கொண்டு காட்டுவதால். சமண் கருத்து ஏற்குமாறு இல்லை எனத் தெளிக.

7. ஊழை வெல்ல முடியாது; செய்தவன் அந்தப் பிறவி முழுவதும் அனுபவித்தே ஆகவேண்டும் என்பது சமணர்களின் வினைக் கொள்கை ஆகும். "உறற்பால நீக்கல் உறுவார்க்கும் ஆகா" என்பது நாலடியார். சமணரின் இந்தக் கொள்கையைத் திருவள்ளுவர் ஏற்கவில்லை. "ஆள்வினை உடைமை" என்னும் அதிகாரத்தில் வரும்,

**"பொறியின்மை யார்க்கும் பழியன்று; அறிவு அறிந்து**
**ஆள்வினை இன்மை பழி"** 618-

என்னும் குறட்பாவில், **"விடாது முயல்க"** என்றும் அவ்வாறு முயற்சி இல்லாமல் இருப்பது உனக்குக் குற்றம் (பழி) ஆகும் என்றும் திருவள்ளுவர் கூறுகிறார். இக் குறட்பாவிற்குப் பொருள் வருமாறு :-

பயனைத் தரும் விதி உனக்கு இல்லை என்றால், உலகில் அதை யாரும் குறையாகக் கூறமாட்டார்கள்; ஆனால் நீ அந்தப் பழியைப் போக்குவதற்கு, அறியவேண்டுவனவற்றை அறிந்து தெளிந்து, முயற்சிசெய்யாமல் இருப்பாயானால், அதுவே உனக்குக் குற்றம் ஆகும்.

இந்தக்குறட்பா வாயிலாக, ஊழினால் உண்டான குறையைப் போக்க, முயற்சி செய்ய வேண்டும் என்று கூறிய திருவள்ளுவர், அடுத்த குறட்பாவில் "ஊழ் ஊழ் என்று இருந்து விடாதே; நீ முயன்றால், அந்த முயற்சி உன் உழைப்புக்குரிய பயனை நிச்சயமாகத் தரும்" என்று **ஊழை உடைக்க வழி கூறுகிறார்.** அந்தக்குறட்பா வருமாறு :

**"தெய்வத்தான் ஆகாது எனினும், முயற்சிதன்**
**மெய் வருத்தக் கூலி தரும்"** 619

இதன் பொருள் வருமாறு :

முயன்ற வினை ஊழ் காரணமாகக் கருதிய பயனைத் தரா தாயினும், நீ செய்யும் முயற்சி, அதற்கு இடம் ஆகிய உன் உடம்பு வருந்திய வருத்தத்தின் கூலி அளவு, பயனைத் தந்தே தீரும்., உழைப்பு வீண் போகாது.

இந்த அதிகாரத்தின் இறுதிக்குறட்பாவில் ஊழை வெல்வது நிச்சயம் முடியும் என்று திருவள்ளுவர் கூறுகிறார். அக்குறட்பா வருமாறு :

**"ஊழையும் உப்பக்கம் காண்பர், உலைவு இன்றித்**
**தாழாது உஞற்று பவர்"** 620

இதன் பொருள் வருமாறு :

தளர்வு இன்றி, இடைவிடாமல், தம் செயலில் முயற்சி செய்பவர், தரவேண்டிய பயனைத் தராமல் தடுக்கின்ற விதியை புறமுதுகிட்டு ஓடச் செய்வர். **( To take to its heels ).** உப்பக் கம்-பின்பக்கம்.

இந்தக் குறட்பாவிற்குச் சிறப்புரை எழுதிய பரிமேலழகர்,

"ஊழ் ஒரு காலாக இரு காலாக அல்லது, விலக்கல் ஆகாமையின், பலகால் முயல்வார் பயன் எய்துவர் என்பார், **'உப்பக்கம் காண்பர்'** என்றார்"

என்று கூறியிருப்பது அறிதற்குரியது. அஃதாவது பல முறை முயன்றால் ஊழை வெல்லலாம் என்பது திருவள்ளுவர் கொள்கை என்பது தெளிவாகிறது.

இதுகாறும் சிந்தித்ததிலிருந்து, சமண சமயக் கொள்கை, திருக்குறள் நெறிக்குப் பொருந்தாது என்பது பெறப்பட்டது.

**பௌத்தம் பொருந்தாமை :**

1. ஆன்மா என ஒன்று இல்லை; சைதன்ய அறிவே எங்கும் நிறைந்து இருக்கிறது; அந்த அறிவு ஒவ்வோர் உடலிலும் புகும் போது "நான்" என்னும் மயக்க உணர்வு உண்டாகிறது; எனவே ஒவ்வோர் உடலிலும் ஒவ்வோர் ஆன்மா உண்டு என்று சொல்வது சரியன்று உயிரைப்பற்றிய பௌத்த சமயத்தின் கொள்கை இஃதாகும். இக்கொள்கை சற்று ஏறக்குறைய ஏகான்மவாதியின் கொள்கையை ஒத்து இருக்கிறது.

திருவள்ளுவர், உயிர்பற்றிய பௌத்தசமயக் கொள்கையை ஏற்கவில்லை. **"உயிர்கள் பல; என்றும் உள்ளவை"** என்னும் சைவ சித்தாந்தக் கொள்கையே, திருவள்ளுவரின் உயிர் பற்றிய கொள்கையாகவும் இருக்கிறது.

திருவள்ளுவர் உயிரை, **"மன்னுயிர்"** என்று 68, 244, 268, 318, 457, 1168 என்னும் ஆறு குறட்பாக்களில் குறிப்பிடுகின்றார், "மன்னுயிர்" என்பது "என்றும் நிலைபெற்ற உயிர்" என்பது பொருளாகும். இதனை,

**"மன்னுயிர் ஓம்பி அருள் ஆள்வாற்கு இல் என்ப,**
**தன் உயிர் அஞ்சும் வினை"** **244**

என்னும் குறட்பாவினுல் தெளியலாம். இதன் பொருள் வருமாறு:

என்றும் நிலைத்தும் நிற்பனவாகிய உயிர்களைப் பாதுகாத்து, அவற்றின்மீது இரக்கம் உடையவனுக்குத், தன் உயிர் அஞ்சுவதற்குக் காரணமாகிய தீவினைகள் வந்து சேரமாட்டா என்பர் அறிஞர்.

"உயிர்கள் எல்லாம் நித்தம் ஆகலின், மன்னுயிர் என்றார்" என்று பரிமேலழகர், சிறப்புரையில் கூறியிருப்பதும் காணத்தக்கது ஒரு சிலர், திருவள்ளுவர் "மன்னுயிர் தொடரைப் பழக்கம் காரணமாகக் கையாளுகிறார் என்கின்றனர்; அவ்வாருயின் பல இடங்களில் இவ்வாறு திருவள்ளுவர் குறிப்பிடுவானேன் என்பதையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும், திருவள்ளுவர் பௌத்த மதத்தைச் சார்ந்தவராக இருந்தால், தம் மதத்திற்கு மாறான கொள்கையைத் தமது நூலில் கூறுவாரா? எனவே, இது போலி வாதம் என்க.

2. முத்தியில் துன்பம் அற்ற ஒரு சாந்திநிலை உண்டு என்று பௌத்தம் கூறுகிறது. அதனுல்தான் பௌத்தம் **"துக்க நிவர்த்தி"** பற்றிப் பேசுகிறது, முத்தியில் துக்கநிவர்த்தி (துன்ப நீக்கம்) உண்டே அன்றி இன்பம் இல்லை என்பது பௌத்த மதக்கொள்கை. துக்க நிவர்த்தி நிலையைத்தான பௌத்தர்கள் **"நிருவாணம்"** என்கிறார்கள், பௌத்த நூல்களில் சில இடங்களில், இன்பம் என்ற சொல்வரும்; ஆனுல் அச் சொல் சாந்தி நிலையைத்தான் குறிக்கும்; ஏனென்ருல், பௌத்தத்தில் ஆன்மா என்று ஒன்று இல்லை. ஆன்மா இருந்தால்தானே இன்பம்

அனுபவிக்க வேண்டி வரும். ஆகவே துக்க நிவர்த்தி சொல்வதைத் தவிர இன்பம் கூறுவது பௌத்தக் கொள்கைக்கு முரணான தாகும்.

திருவள்ளுவர், துன்ப நீக்கமும் பேசுகிறார்; இன்ப ஆக்கமும் பேசுகிறார். 'இருள்' என்பது, அணவமலத்தைக் குறிக்கும்; துன்பத்திற்குக் காரணம் அணவமலப் பற்றே ஆகும்; ஆகவேதான் "**இருள் இன்றேல் துன்பு என்?**" என்றார் உமாபதிசிவம். "மெய்யுணர்தல்" அதிகாரத்தில் வரும் "**இருள் நீங்கி இன்பம் பயக்கும்**" என்னும் குறட்பாக் கருத்து, பௌத்தமதக் கொள்கைக்கு முரணானது. மேலும் துன்ப நீக்கம் வேறு; இன்பம் ஆக்கம் வேறு. துன்பம் நீங்குவது இருள் விலகுவதைப் போன்றது. இருள் விலகியதும் ஒளி வந்து விடுவதில்லை.

அதிகாலைப் பொழுதில் சூரிய உதயம் ஆவதற்கு முன்பு இருள் நீங்கி இருக்கும்; அதைத் '**தரை வெளுத்து விட்டது**' என்று நாட்டுப் புறங்களில் கூறுவர். பகலவன் உதித்து மேலே வர வரத்தான் ஒளி வரும், இன்பம் விளைவது, சூரிய ஒளி வருவதைப் போன்றது, "**வீடுபேற்றில் இன்பம் உண்டு**" என்பது திருவள்ளுவர் கொள்கையாகும், "**இருள் நீங்கி இன்பம் பயக்கும்**" – 352 என்னும் குறட்பாக் கருத்துக்குப் பரிமேலழகர், 'பிறப்பினை நீக்கி வீட்டினைக் கொடுக்கும்" என்று பொருள் கூறியிருப்பது காணத் தக்கது, எனவே, பௌத்தமதக் கொள்கைக்கு நேர் எதிரான கொள்கையைத் திருவள்ளுவர் கொண்டுள்ளார் என்பது பெறப் படும்.

**3.** பௌத்தர்களில் பெரும்பாலோர் உயிர்களைக் கொல்லக் கூடாது என்கின்றனர்; ஆனால் பிறர் கொன்று தந்த உயிரின் ஊனைத் தின்னலாம என்றும், அது பாவம் இல்லை என்றும் கூறுகிறார்கள். இக்கொள்கையைத் திருவள்ளுவர் வன்மையாகக் கண்டிக்கிறார். பௌத்தரின் இக்கொள்கையை மறுத்தே திருவள்ளுவர்,

> **"தினல் பொருட்டால் கொல்லாது உலகெனின், யாரும்**
> **விலைப் பொருட்டால் ஊன் தருவார் இல்" - 256**

என்னும் திருக்குறளைச் செய்தார். இதன் பொருள் வருமாறு:

தின்பதற்காக வேண்டி உலகத்தில் ஊனைக் கொல்லவில்லை என்றால், அதனை விற்றுப் பொருள் பெறவேண்டும் என்பதற்காக ஊனை விற்பவர் எவருமே இருக்க மாட்டார்கள். அஃதாவது ஊனைத் தின்பதற்கு யாரும் இல்லை என்றால், அதனை விற்பதற்கு எவரும் முன்வர மாட்டார் என்பதாகும்.

ஆகவே, கொலைப்பாவம் கொன்றவனைச் சேருமே அல்லது, அதன் இறைச்சியைத் தின்றவனைச் சேராது என்னும் போலி வாதத்தைத் திருவள்ளுவர் மறுக்கிறார். இவன் வாங்குவான் என்னும் நம்பிக்கையே கொலைஞன் கொல்வதற்குக் காரணமாக இருப்பதால் கொலைப்பாவம் ஊன் தின்பவனையும் சேரும் என்னும் நியாயத்தைத் திருவள்ளுவர் இந்தக் குறட்பாவில் தெளிவுறுத்துகிறார், எனவே, பௌத்தமதத்தின் **போலி ஊன் மறுப்புக் கொள்கை** யையும் திருவள்ளுவர் மறுக்கிறார் என்பது பெறபட்டது.

**ஏகான்ம வாதம் பொருந்தாமை :**

ஏகான்மவாதிகள், பிரமம் ஒன்றே உள் பொருள் என்றும், உயிர்கள் வெறும் தோற்றமே ( மித்தை ) எனறும் கூறுகிறார்கள். எனவே அவர்களை ஒரு பொருட் கொள்கையினர் **(monotheist)** என்பர், உயிரைப் பற்றிய ஏகான்மவாதக் கொள்கை சற்று ஏறக்குறைய பௌத்தர்களின் கொள்கையை ஒத்து இருக்கிறது. "நானே பிரமமாக இருக்கிறேன்" என்னும் கொளகையினை உடைய ஏகான்மவாதிகள், உயிரும் இறைவனும் வெவ்வேறு பொருள்களல்ல, இரண்டும் ஒன்றே எனகின்றனர். இக் கொள்கையைத் திருவள்ளுவர் உடன்படாமையினலேயே.

**"தனக்கு உவமை இல்லாதன்" - 7** என்று இறைவனைக் குறிப்பிடுகிறார். இறைவன ஒரு வகையாலும் தனக்கு ஒப்பாக எவரையும் வைத்துக் கருதப்பட முடியாதவன் என்பது இக்குறட்பாக் கருத்துக்குப் பொருளாகும், மேலும் திருவள்ளுவர், உயிர்கள் என்றும் உள்ளவை என்பதை **"மன்னுயிர்"** என்னும் சொல்லால் தெளிவுபடுத்துகிறார். உயிர்கள் பலவாக உள்ளன என்பதைத் திருவள்ளுவர்,

**"தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க்கு எல்லாம் இனிது"** 68

என்னும் குறட்பாவில் தெளிவுபடுத்தியுள்ளார்.

**"மன்னுயிர்க்கு எல்லாம்"** என்னும் தொடர், என்றும் உள்ள எல்லா உயிர்களுக்கும் என்னும் பொருளைத் தரும், **"எல்லா உயிர்களுக்கும்"** என்றமையால் உயிர்கள் பலவாய் உள்ளன என்னும் கொள்கையே திருவள்ளுவருக்கு உடன்பாடு என்பது தெளிவாகும்.

"பிரமம் தனித்து இருக்கிறது" என்பது ஏகான்மவாதக் கொள்கை. இறைவன் தனித்து இல்லை, அம்மையப்பராகவே இருக்கிறன் என்னும் கொள்கையைத் திருவள்ளுவர் **"ஆதி பகவன்"** - 1 என்னும் தொடரால் நிறுவுகிறர், எனவே ஏகான்ம வாதிகளின் கொள்கையைத் திருவள்ளுவர் ஏற்கவில்லை என்பது தெளிவாகிறது.

திருவள்ளுவர் காலத்தில் ஏகான்மவாதம் ஏற்பட்டதில்லை, ஆயினும், எந்தக் காலத்துக்கும் பொருந்தும் கொள்கைகளையே திருவள்ளுவர் தம் நூலில் கூறியிருப்பதால், பிற்காலத்தில் தோன்றிய ஏகான்மவாதக் கொள்கையின் பொருந்தாமை எடுத்துக்காட்டப்பட்டது.

**வைணவம் பொருந்தாமை**

வைணவத்தில் முத்தி நிலையில் **அப்பிராகிருத திருமேனி (Immortal body)** உண்டு என்பர். இதனைத் **திப்பிய மங்கள சரீரம்** என்றும் கூறுவர். முத்திபெற்ற ஆன்மாக்கள், திருமாலின் சந்நிதியில் அப்பிராகிருத திருமேனியோடு கூடியே இருப்பர் என்று வைணவ சமயம் கூறுகிறது. அஃதாவது முத்தி நிலையில் ஆன்மாக்கள் ஒருவகை உயர்ந்த உடலோடுதான் இருக்கும் என்பது அவர்கள் கொள்கை. இந்தக் கொள்கையைத் திருவள்ளுவர் உடன்படவில்லை. இதனை,

**"மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல்? பிறப்பு அறுக்கல்**
**உற்றர்க்கு உடம்பும் மிகை" 345.**

என்னும் குறட்பாவில் திருவள்ளுவர் கூறுகிறர். இதன் பொருள் வருமாறு:-

பிறப்பு அறுப்பதை மேற்கொண்டவர்க்கு அந்தப் பிறப்புக்குக் கருவி ஆகிய உடம்பும் மிகை ஆகும். ஆகவே அதற்குமேலே இயைபு இல்லனவும் சில தொடர்ப்பாடு உள ஆதல் என்னுகும்? - இது பரிமேலழகர் உரை. அஃதாவது, மீண்டும் பிறக்கத் தேவை

இல்லை என்று கருதுபவர்களுக்கு, முத்தி நிலையில் உடம்பும் தேவைப்படாது. அப்படி இருக்கும் பொழுது. முத்தி பெற்ற பிறகும் பொருத்தம் இல்லாத பொருள்கள்மீது பற்று வைப்பதற்கு என்ன காரணம் என்றவாறு,

இந்தக் குறட்பாவில் திருவள்ளுவர், **"உடம்பும் மிகை"** என்றமையால், முத்தி நிலையில் எந்த வகையான உடம்புமே இருக்கத் தேவையில்லை என்பதை வலியுறுத்துகின்றார். எனவே, வைணவ முத்தியில் ஒளியுடம்பு உண்டு என்று கூறுவதைத் திருவள்ளுவர் உடன்படவில்லை என்பது தெளிவாகிறது.

வைணவ முத்தியில் உலகியலில் தலைவன் தலைவியைத் தழுவி இருப்பதுபோல, வைகுண்டத்தில் திருமாலை ஆன்மாக்கள் கூடி இருந்து பேரின்பத்தைத் துய்க்கும் என்று கூறப்படுகிறது. இதில் இருந்து வைணவ முத்தியில் இறைவனுக்கும் உயிர்களுக்கும் உடம்பு உண்டு என்பது பெறப்படுகிறது. இவ்வுண்மையைத் திருவள்ளுவர்,

**"தாம் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்**
**தாமரைக் கண்ணான் உலகு"** 1103.

என்னும் குறட்பாவில் கூறுகிறார். இதன் பொருள் வருமாறு:-

தம்மால் விரும்பப்படும் பெண்ணின் மென்மையான தோள்களின் மேல தூங்குவதைப்போல, திருமாலின் உலகம் ஆகிய வைகுண்டம் இன்பம் உடையது ஆகுமா?

இதிலிருந்து வைகுண்டப் பதவியைத் திருவள்ளுவர் உலகியல் வாழ்வைவிட உயர்ந்ததாகக் கருதவில்லை என்பது பெறப்படும். "தாமரைக் கண்ணான் உலகு" என்பதைச் சிலர் இந்திரலோகம் ஆகிய சுவர்க்கம் என்பர்; இதனைப் பரிமேலழகர் உடன்படவில்லை; இந்திரனுக்குத் 'தாமரைக் கண்ணான்' என்று பெயர் இல்லாமையால், வைகுண்டத்தை இந்திரலோகம் என்று குறிப்பிடுவது பொருந்தாது என்கிறார்.

முத்தி நிலையில் உயிர்க்கு **"உடம்பும் மிகை"** என்பது திருவள்ளுவர் கொள்கை ஆகும்; ஆகவே வைணவ நெறி குறள் நெறிக்குப் பொருந்தாமை பெறப்பட்டது.

**வெளிநாட்டு மதம் பொருந்தாமை**

வெளிநாட்டில் தோன்றிய மதங்கள் ஆகிய (**Foreign religions**) கிறித்துவ சமயமும் இசுலாமிய சமயமும் மறுபிறப்புக் கொள்கையை மறுக்கின்றன. திருவள்ளுவர் மறுபிறப்புக் கொள்கையினை உடன்படுபவர் என்பதை முன்பே கண்டோம். பிறப்பும் இறப்பும் மாறி மாறி வரும் என்பதைத் திருவள்ளுவர்,

> **"உறங்குவது போலும் சாக்காடு; உறங்கி**
> **விழிப்பது போலும் பிறப்பு" 339.**

என்னும் குறட்பாவில் தெளிவுறுத்துகின்றார். இதன் பொருள் வருமாறு:-

இறப்பு வருவது, உறக்கம் வருவதை ஒக்கும்; பிறப்பு வருவது, உறங்கியபின் விழிப்பு வருவதை ஒக்கும்.

வெளிநாட்டு மதங்கள் புலால் உணவைப் போற்றிக் கடைப் பிடிக்கின்றன; திருவள்ளுவர் புலால் மறுத்தலை வலியுறுத்து கின்றார்; புலால் தின்பவர் நரகத்திற்குச் செல்வர் என்பதுமட்டு மன்று, நரகத்திலிருந்து மீளவே மாட்டார் என்று கூறுகிறார். எனவேதான் அவர்கள் மதக் கொள்கைகளில் **மீளா நரகம் (Eternal hell)** பேசப்படுகிறது போலும்!

இதிலிருந்து திருவள்ளுவர் நெறி, கிறித்துவ இசுலாமிய நெறிகளுக்கும் பொருந்தாமை பெறப்பட்டது.

கள் உண்ணாமை, கொல்லாமை, புலான் மறுத்தல் என்னும் அதிகாரங்களில், கள்ளையும் உயிர்க் கொலையையும் திருவள்ளுவர் வன்மையாகக் கண்டிக்கிறார். எனவே, உயிர்ப்பலி இட்டும், கள்ளைப் படைத்தும் வணங்கும் சிறுதெய்வ வழிபாட்டையும் திருவள்ளுவர் உடன்படவில்லை என்பது பெறப்படும்.

## *4, திருக்குறள் நெறி சைவசித்தாந்தமே*
## *( சுபக்கம் )*

**தோற்றுவாய் :**

கிறித்து பிறப்பதற்கு, முப்பத்தொரு ஆண்டுகளுக்கு முன்பு திருவள்ளுவர் வாழ்ந்தவர்; ஆகவே அவர் வாழ்ந்த காலத்தில் தமிழ் நாட்டில் கிறித்துவம் இல்லை; இசுலாமியம் இல்லை; ஆதி சங்கரின்

வேதாந்தம் இல்லை; இராமாநுசரின் விசிட்டாத்துவிதம் இல்லை; மாத்துவரின் துவைதம் இல்லை. அவர் காலத்தில் சமணம் இருந்தது; பௌத்தம் இருந்தது; சைவமும் இருந்தது.

திருவள்ளுவர், தம் காலத்திற்குப் பின்னர்த் தோன்றிய பன்னிருதிருமுறைகளைக் காணவில்லை; தமிழில் தோன்றிய தமிழ்ச் சிவாகமம் எனப் போற்றப்படும் திருமந்திரம் திருஞானசம்பந்தர் காலத்தில்தான் வெளிவரலாயிற்று. சிவஞானபோதம் முதலிய பதினன்கு சாத்திரங்களை அவர் பார்த்ததில்லை. அங்கிலையில் தமது சமயக் கொள்கைகளை எந்த நூலை அடிப்படையாகக் கொண்டு செய்திருக்க முடியும் என்னும் கேள்வி எழுகிறது.

அவர் காலத்தில் தமிழகத்தில நிலவிய சமண பௌத்த மதக் கொள்கைகளை அவர் உடன்படவில்லை என்பதை முந்திய பிரிவில் (**chapter**) கண்டோம். அன்றியும், அவ்விரு மதங்களும் கடவுள உண்மைக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் கொள்கைகளைக் கூறியுள்ளமையால், அவற்றைத் திருவள்ளுவர் பின்பற்றவில்லை என்பது தெளியப்படும்.

சமணரின் வினைக்கொள்கை பகுத்தறிவுக்குப் பொருந்துமாறு இல்லை; வினைப்பயன், வினை செய்த உயிரைத் தானே சென்று அடையும் என்னும் சமண் கொள்கை, சமணர்கள் கடவுள் உண்மையை ஏற்கவில்லை என்பதை மெய்ப்படுத்துகின்றது. இக்கொள்கையின் பொருந்தாமையை மக்களுக்கு எடுத்துச் சொல்லி, மக்களை உய்விக்கும பொருட்டே இறைவன ஞானசம்பந்தப் பெருமானை இப்பூவுலகிற்கு அனுப்பியருளினன். இவ்வுண்மையைச் சம்பந்தப் பெருமானின் திருக்கடைக்காப்பு தோறும், இறைவழிபாட்டினுல் ஊழை வெல்லலாம், இந்தப் பிறப்பிலேயே வீடு பேற்றினைப் பெறலாம் என்பன போன்ற செய்திகள் காணப்படுவதிலிருந்து உணரலாம்.

அவ்வாறே 'அறம்' என்ற பெயரால், இறைவனை மறந்து வாழும் ஒரு வகை வாழ்க்கை முறையைத், தம் பொருந்தாக் கொள்கையால் சமணர்கள் சமைத்து விட்டிருந்தனர்; தமிழ் மொழியில் ஐம்பெருங் காப்பியங்களைச் செய்து, தமிழ் மக்கள் உள்ளத்தில் அக்கொள்கை வித்துக்களைச் சமணர்கள் ஊன்றி வளர்த்து வந்திருந்தனர். தமிழர்கள் திசைமாறிச் சென்று கொண்டிருந்தனர்.

இறைவன் தமிழ் மக்களை நெறிப்படுத்தும் பொருட்டுத் திருவள்ளுவ நாயனரை இப்பூவுலகிற்கு அனுப்பி, அவரை அதிட்டித்து நின்று, இந்தத் திருக்குறளைச் செய்தான் என்று கொள்வதே பொருந்துவதாக உள்ளது. சமணரின் வினைக் கொள்கையை வீழ்த்தும் பொருட்டுச் சம்பந்தப்பெருமானை அதிட்டித்து நின்று, திருமுறைகளைச் செய்தது போலவே, சமணர்களின் போலி அறக் கொள்கையை வீழ்த்தி, **உண்மை அறம் இஃது** என மக்களுக்கு உணர்த்தும் பொருட்டுத் திருவள்ளுவரை அதிட்டித்து நின்று திருக்குறளை இறைவன் செய்தான், எனவேதான் திருக்குறளை "மறை" எனகிறோம்: திருவள்ளுவரைத் தெய்வப்புலவர் என்கிறோம்: சமயாசாரியர்களை நாயனர் என்பது போலத் திருவள்ளுவரை நாயனர் என்கிறோம்.

அறம் இறைவனின் சட்டம். இறையுண்மையினை ஏற்காதவர் பேசும் அறம் போலி ஆகும், அறம் அறிவுடைப் பொருளா, அறிவற்ற பொருளா என்னும் தடைகளை எழுப்பிச் சிந்தித்தோமாயின், **அறம் இறைவனின் ஆணை** என்று விடை கூறினல், இறைவனின் ஆற்றல் எனப்படும் "**சத்தி** அறிவுடைப் பொருளாயிருத்தல் போல, **அறம் அறிவுடைப் பொருள்** ஆகும்: இவ்வுண்மையை ஏற்காதவர் அறம் ஒரு சடப்பொருள் என்றே கொள்ள வேண்டிவரும். அறம் அறிவற்ற ஆற்றல் என்றால், அந்த அறத்தால் பெறும் அறிவு, அளவை அறிவு அல்லது சுட்டறிவு எனவே கூற வேண்டும். சுட்டறிவு என்பது மனித அறிவுக்குப் புலப்படும் அறிவே ஆகும். மனித அறிவுக்கு எட்டும் எல்லாப் பொருள்களும் அழியக் கூடியனவாகும், அறம் அறிவற்றதோர் ஆற்றல் என்று கொண்டால் அறம் அழியக் கூடியது என்று கொள்ளவேண்டிவரும்.

திருவள்ளுவர், அறம் வீடுபேற்றைத் தரும் என்று கூறுகிறார்: உயிர்களுக்குப் பிறப்பு நிலையில் தேவைப்படும் எல்லாச் செல்வத்தையும் தருவது அறமே என்கிறார். இவ்வுண்மையைச்

**"சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும் அறத்தின் ஊஉங்கு**
**ஆக்கம் எவனே உயிர்க்கு" - 31**

என்னும் குறட்பாவினல் உணரலாம். இதற்குப் பொருள் வருமாறு:

அறம் வீடுபேற்றைத் தரும்; துறக்கம் (சுவர்க்கம்) முதலிய எல்லாச் செல்வத்தையும் தரும், எனவே, உயிர்க்கு அறத்தைவிட மேலான பொருள் யாது? எதுவும் இல்லை என்றவாறு.

இக்குறட்பாவிற்குச் சிறப்புரை எழுதிய பரிமேலழகர்.

"எல்லாப் பேற்றினும் சிறந்தமையின் "**வீடு**" சிறப்பு எனப்பட்டது, "சிறப்பு என்னும் செம்பொருள்" **358** என்ற திருக்குறளிலும் சிறப்பு என்பது வீடு என்னும் பொருளில் வந்தது. "சிறந்தது பயிற்றல்" (கற். **51**) எனத் தொல் காப்பியத்து வருதலும் காண்க; இதனுல் அறத்தின் மிக்க உறுதி இல்லை என்பது கூறப்பட்டது"

என்று கூறியிருப்பது சிந்திப்பதற் குரியது.

ஆன்மாவுக்கு முத்தியைத் தருவது அருளே என்பது சைவசித்தாந்தம். திருவள்ளுவர் அறமே உயிர்க்கு வீடு பேறு ஆகிய முத்தியைத் தரும் என்கிருர், எனவே, அறத்தைத் திருவள்ளுவர் இறைவனின் ஆணை ஆகிய அருள் எனக் கருதுகிருர் என்பது பெறப்படும், இன்னும், அறத்தை மறப்பதை விடக் கேடு வேறு இல்லை *(32)* என்றும், உயிர் உடம்பைவிட்டு நீங்கும் பொழுது உயிர்க்கு என்றும் நீங்காத் துணையாய் இருப்பது அறமே (36) என்றும் திருவள்ளுவர் கூறியருளியதிலிருந்து, அறத்தைத் திருவள்ளுவர் எல்லா நன்மைகளுக்கும் நிமித்த காரணமாய் இருப்பது என்றே கருதுகிருர் என்பது இனிதே புலப்படும், அறம் என்ற சொல், திருக்குறளில் "**அறக் கடவுள்**" என்னும் பொருளிலும் கையாளப்படுகிறது. "அன்புடைமை" என்னும் அதிகாரத்தில் வரும்,

**"என்பில் அதனை வெயில் போலக் காயுமே**
**அன்பில் அதனை அறம்"** 77

என்னும் குறட்பா இவ்வுண்மையை மெய்ப் படுத்துகின்றது இக்குறட் பாவுக்குப் பரிமேலழகர்,

"என்பு இல்லாத உடம்பை, வெயில் காய்ந்தாற் போல, அன்பு இல்லாத உயிரை அறக்கடவுள் காயும்"

என்று பொருள் கூறுகிருர், இதிலிருந்து "**அறம்**" இறைவனின் அருளாற்றல் (ஆணை) என்பது தெளிவாகும்.

**அன்பு சிவம்; அருள் சத்தி** என்பது சைவ சித்தாந்தம், இதனைச் சிவஞான சித்தியார், "**சிவம் சத்திதனை ஈன்றும்**" (167) எனக் கூறுகின்றது, இதனையே திருவள்ளுவர், "**அருள்**

**என்னும் அன்பு ஈன் குழவி** '' (757) என்னும் குறட்பாவில் வைத்துணர்த்துகிறார்.

'' **தீவினை அச்சம்** '' என்னும் அதிகாரத்தில் வரும்,

'' **மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்**
**அறம் சூழும் சூழ்ந்தவன் கேடு**'' *204*

என்னும் குறட்பாவில், '' **அறக்கடவுள்** '' என்னும் பொருளில் '' **அறம்** '' என்னும் சொல் ஆளப்படுவதைக் காணலாம். இக்குறட் பாவுக்குப் பொருள் வருமாறு:-

ஒருவன் பிறர்க்குக் கேடுபயக்கும் வினையைத் தன்னை மறந்தும் எண்ணாது ஒழிக; எண்ணுவானாயின், தனக்குக் கேடுபயக்கும் வினையை **அறக் கடவுள்** எண்ணும் - இது பரிமேலழகர் உரை, இதன் சிறப்புரையில்,

*'' அறக் கடவுள் எண்ணுதல் ஆவது, அவன்*
*கெடத் தான் நீங்க நினைத்தல் ''*

என்று பரிமேலழகர் கூறியிருப்பது நினைவில் கொள்ளத்தக்கது. அஃதாவது, பிறன் ஒருவனுக்குக் கெடுதல் செய்ய நினைத்தால், இறைவனது அருளாற்றல் அவனை விட்டு விலகி மறைப்பாற்ற லாகவே நிற்கும் என்றவாறு.

எனவே, திருக்குறளைச் சமய அடிப்படையில் அணுகும் பொழுது, பொதுநீக்கிக் கண்டால்தான், திருவள்ளுவரின் உள் ளக்கிடக்கை என்ன என்பது துல்லியமாகப் புலப்படும். திருக் குறளைப் **பொது நோக்கில் (on general out look)** கண்டால், சமய அடிப்படையில் திருக்குறளின் உட்கிடை என்ன என்பது புலனாகாது. முன்னர்க் கூறியபடி, சமண பௌத்த மதக் கொள்கைகளுக்கு நேர் எதிரான கொள்கைகளைப், பக்குவமுள்ள மக்களுக்கு உணர்த்தி அவர்களை உய்விக்கக் கருதிய திருவள்ளுவ நாயனார், சித்தாந்தச் சைவ நெறியே குறள் நெறி என்பதைக் கொண்டிருந்தார் என்பது, திருக்குறளைப் **பொது நீக்கிக்** காண்பவ ராலேயே தெளியப்படும்.

'' **பொது நோக்கு** '' பற்றித் திருவள்ளுவர்,

'' **ஏதிலார் போலப் பொது நோக்கு நோக்குதல்**
**காதலர் கண்ணே உள** '' *1099.*

என்னும் குறட்பாவில் கூறியுள்ளார். இதற்குப் பொருள் வருமாறு:-

முன் அறியாதார் போல, ஒருவரை ஒருவர் பொது நோக்கத்தால் நோக்குதல, இக் காதலை உடையார் கண்ணே உளவாகா நின்றன. அஃதாவது காதலனும் காதலியும் ஒருவரை ஒருவர் முன்பே அறியாதவர்போல, உலகத்தில் உள்ள மற்றவர்களைப் பார்ப்பதுபோல் பாராமல், தனித்தன்மையில் நோக்குவர் என்றவாறு. திருக்குறளையும் உலகிலுள்ள பிற இலக்கிய நூல்களைக் காணபதுபோல் காணமல், அதன் தனித்தன்மையைக் கூர்ந்து நோக்கவேண்டும்.

உயிர்கள் படிப்படியாக அறிவு விளக்கம் பெற்று உயரும் இயல்பு உடையன என்னும் சைவ சித்தாந்தக் கொள்கையின் அடிப்படையில், உலகில் உள்ள எல்லா மனிதர்களும் முன்னேற வேண்டும் என்னும் பெருநோக்கில், திருவள்ளுவப் பெருந்தகை, எல்லா மதத்தினரும் இனத்தினரும் மொழியினரும் ஏற்கத்தக்க பல செய்திகளைத் தம் நூலில் கூறியருளியுள்ளார்.

**"எவ்வெவர் தன்மையும் தன்வயிற் படுத்துத் தானே ஆகிய தயாபரன்"** *(8-2-95)* என்னும் மணிவாசகத்திற்கு ஏற்ப, இறைவனால் அதிட்டிக்கப்பட்டுத் திருவள்ளுவ நாயனர் இந்நூலை அருளிச் செய்திருப்பதனுல், அத்தகு இறைத்தன்மை திருக்குறளிலும் காணப்படுகிறது. எனவேதான், திருக்குறளைப் பொதுநோக்கில் காண்பவருக்குப் **"பொதுமறை"** யாகவும் பொதுநீக்கிக் காண்பவருக்குத் **"தமிழ் மறை"** யாகவும் அது மிளிர்கிறது.

சமய அடிப்படையில் பொதுநீக்கிக் காணும் நிலையில், **"திருக்குறள் நெறி சைவ சித்தாந்தமே"** என்பது தெளியப்படும். இந்தப் பகுதியில் கீழ்க்காணும தலைப்புக்களில் வைத்து இவ்வுண்மையைக் காணலாம்:-

| சைவசித்தாந்தத் தலைப்பு | திருக்குறள் தலைப்பு | குறட்பா எண் |
|---|---|---|
| 1. இறை இயல்பு | – ஆதி பகவன் | 1 |
| 2. உயிர் இயல்பு | – எல்லா உயிர்க்கும் | 972 |
| 3. ஆணவ மல இயல்பு | – இருள்சேர் இருவினை | 5 |
| 4. கன்ம மல இயல்பு | – ஊழிற் பெரு வலி | 380 |
| 5. மாயாமல இயல்பு | – மருளானும் மாணப் பிறப்பு | 351 |
| 6. மறு பிறப்பு உண்மை | – வேண்டும் பிறவாமை | 362 |
| 7. சாதனம் (சமய ஒழுக்கம்) | – அறம் செய்க | 36 |

| | | |
|---|---|---|
| 8. மலபரிபாகம் | – இருள் நீங்கி | 352 |
| இருவினை ஒப்பு | – அல்லல்படுவது எவன்? | 379 |
| சத்திநிபாதம் | – இன்பம் பயக்கும் | 352 |
| 9. வழிபாடு | – செய்ந்நன்றி | 110 |
| கேட்டல் | – ஈண்டு கற்று | 356 |
| சிந்தித்தல் | – ஓர்த்து | 357 |
| தெளிதல் | – காண்பது | 358 |
| நிட்டை கூடுதல் | – சார்புணர்தல் | 359 |
| 10. ஐந்தெழுத்து உபதேசம் | – பற்றுக பற்றற்றான் பற்றினை | 350 |
| 11. முத்தி இயல்பு | – பேரா இயற்கை தரும் | 370 |

**இறை இயல்பு – ஆதி பகவன் – 1**

**"அகர முதல எழுத்து எல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே உலகு"** *1*

என்பது முதற்குறட்பா, இதற்குப் பொருள் வருமாறு:

உலகில் உள்ள எழுத்துக்கள் எல்லாம், ஒலி வடிவாய் உள்ள 'அ' கரம் ஆகிய முதலை உடையனவாகும். அது போல, இந்த உலகம் அனைத்தும் ஆதி பகவன் ஆகிய முதலை உடையது.

இந்தக் குறட்பாவில் வரும் "**ஆதி பகவன்**" என்ற தொடர், திருக்களிற்றுப் பாடியாரில் உள்ள,

**"அம்மையப்பரே உலகுக்கு அம்மை அப்பர் என்று அறிக;**
**அம்மை அப்பரிசே வந்து களிப்பர் - அம்மை யப்பர்**
**எல்லா உலகுக்கும் அப்புறத்தார்; இப்புறத்தும்**
**அல்லார் போல் நிற்பார் அவர்"**

என்னும் முதல் வெண்பாவை நினைவுறுத்துகின்றது.

இறைவன் தன் நிலையில் சிவமாக நிற்கிறான்; இதனையே திருவள்ளுவர் "**பகவன்**" என்கிறார். இறைவன் உயிர்களின் பொருட்டு அருளாகவும் நிற்கிறான்; இந்த அருளையே திருவள்ளுவர் "**ஆதி**" என்கிறார், அஃதாவது "**ஆதி**" என்றது உயிர்க்கு உதவும் அருளாற்றலைக் குறிக்கும் "**பகவன்**" என்றது அருளை விட்டு என்றும் பிரியாது, தன் கூறாகக் கொண்டுள்ள இறைவனைக் குறிக்கும்.

**"போற்றி அருளுக நின் ஆதியாம் பாதமலர்"** என்னும் திருவெம்பாவைக் கருத்தும் இவ்வுண்மையையே பேசுகின்றது, எனவே **"ஆதி பகவன்"** என்றது, **"மாதொரு பாகன்"** ஆகிய சிவபெருமானையே குறிக்கும் என்பது பெறப்படும்.

**"அகர முதல எழுத்தெல்லாம்"** என்னும் தொடர்,

**"அகர உயிர்போல் அறிவாகி எங்கும்**
**நிகரில் இறை நிற்கும் நிறைந்து"** 1

என்னும் திருவருட்பயனை நினைவுறுத்துகின்றது,

உலகில் பிறக்கும் எல்லாக் குழந்தைகளும் முதன் முதலில் 'அ' என்ற இயற்கை ஒலியோடுதான் வாயைத் திறக்கும் என்பது நடைமுறை உண்மை. இவ்வாறு இயல்பாகத் தோன்றும் அகர ஒலியே, மற்றைய எழுத்துக்களுக்கு எல்லாம் முதலாய் அவற்றில் கலந்து இருக்கிறது; தனித்தும் (கடந்தும்) இருக்கிறது. அதுபோலவே உலகத்திற்கெல்லாம் முதலாய், அவற்ருேடு கலந்தும் கடந்தும் இறைவன் இருக்கிருன். 'கலந்து இருத்தல்' என்பது அவற்றின் உள்ளீடாய் இருப்பதைக் குறிக்கும், இஃது எழுத்துக்களின் உள்ளீடாய் அகர ஒலி கலந்து இருப்பதற்கு ஒக்கும், இவ்வாறு **கட**ந்தும் **உள்**ளும் இருப்பதால்தான் இறைவனைத் தமிழ் மக்கள் **"கடவுள்"** என்னும் தமிழ்ச் சொல்லால் போற்றி மகிழ்கின்றனர்,

இந்த முதற் குறட்பா கடவுள் உண்மையை நிலை நாட்டுவதோடு, கடவுளின் இயல்பையும் தெளிவுறுத்துகின்றது, திருவள்ளுவர் கடவுளின் சிறப்பு இயல்பை **"எண் குணத்தான்"** என்னும் சிவாகமச் சொல்லால் குறிப்பிடுகிருர். ஒன்பதாவது குறட்பாவில் எண்குணத்தான் என்று சொன்ன திருவள்ளுவர், முதல் எட்டுக் குறட்பாக்களிலும் அந்த எண்குணங்கள் யாவை என்பதை விளக்குகிருர். அவ்விளக்கம் வருமாறு :

**1. ஆதி பகவன் – தன் வயம் உடைமை :**

உலகம் ஒரு முதல்வனை உடையது என்பது இந்த முதற் குறட் பாவின் கருத்து. அந்த முதல்வன், பிறர் வழிபட்டு நடக்காமல், தான் விரும்பிய செயல்களை விரும்பியவாறே செய்யும் இயல்பு உடையவனுய் இருத்தல் வேண்டும். அப்படி இருந்தால் தான் உலகம் ஓர் ஒழுங்குக்குக் கட்டுப்பட்டு இயங்கும்.

இந்த இயக்கத்தை முதல்வன் தன் அருளைக்கொண்டு செய்வதால், அவனைத் திருவள்ளுவர் "ஆதி பகவன்" என்றருளிச்செய்தார்.

**2. வாலறிவன் – இயற்கை உணர்வு உடைமை :**

இறைவன், பிறரால் அறிவிக்கப்படாமல் தானே எல்லா வற்றையும் அறியும் இயல்வு உடையவன். "வால்" என்னும் சொல் தூய்மையைக் (**purity**) குறிக்கும். வாலறிவு – தூய அறிவு; அஃதாவது மலக்கலப்பு இல்லாத அறிவு; உயிரறிவு மலக்கலப்புடைய அறிவு (**Impure**), அநாதியே மலக்கலப் பின்றித் தானே இயல்பாகவே எல்லாவற்றையும் உணரும் அறிவுடையன் ஆகலின், இறைவன் இயற்கை உணர்வுடையவன் (வாலறிவன்) எனப்படுகிறான்.

**3. மலர்மிசை ஏகினான் – தூய உடம்பினன் ஆதல் :**

அடியார்களின் உள்ளக்கமலத்தில் எழுந்தருளி நிற்பவன். தன் வயத்தன் ஆகி, இயற்கை உணர்வுடையன் ஆகிய இறைவன், அவனை நினைந்து உருகும் அடியவர்கட்கு அருளும் பொருட்டு, தானே அருள் திருமேனி கொள்ளும் இயல்புடைய வனுதல் வேண்டும். இறைவன் கொள்ளும் எல்லாத் திருமேனிகளும் மலக்கலப்பற்றன ஆதலின், அவை அருளுடம்பு எனப்படுகிறது. இந்த அருளுடம்பு, நமக்குள்ள உடம்பு போல மாயைகாரியங் களால் ஆனதன்று. எனவே இறைவன் தூய உடம்பினன் எனப்படுகிறான்.

**4. வேண்டுதல் வேண்டாமை இலான் – வரம்பில் இன்பம் உடைமை :**

துன்பத்திற்குக் காரணம் எந்தப்பொருளையும் விரும்புவதே ஆகும்; இன்பத்திற்குக் காரணம் எதையும் விரும்பாமையே ஆகும். உயிர்க்குள்ள விருப்பம் மலப்பற்று காரணமாக வருகிறது; எனவே உயிர்க்குத் துன்பம் உண்டாகிறது. இறைவன் பற்றற்றவன் ஆகலின் அவனுக்குத் துன்ப அனுபவம் இல்லை; துன்பம் அனுபவம் இல்லாமையால், இன்ப அனுபவமும் இறைவனுக்கு இல்லை. ஆயினும்,

**"வேண்டாமை அன்ன விழுச் செல்வம்"** **363**

ஆகிய பேரின்பத்தை எல்லா உயிர்களுக்கும் வழங்கும் பொருட்டு, இறைவன அளவு கடந்த இன்பத்தைத் தன்னிடத்து உடையவனுக

இருத்தல் [வேண்டும். இறைவன் இன்பத்தை உடையவனே அன்றி இன்பத்தை அனுபவிப்பவனல்லன், எனவே வரம்பிலின்பம் உடையவன் எனப் படுகிறான்.

**5. இறைவன் – முற்றுணர்வு உடைமை :**

எங்கும் எதிலும் எஞ்ஞான்றும் தங்கி இருக்கும் இறை இயல்பை இது குறிக்கும், இறைவன் உலகில் உள்ள ஒவ்வொரு பொருளிலும் அந்தந்தப் பொருளுக்கு அந்தந்தப் பொருளாய் இருப்பதாலும், பொருள்கள் அனைத்திற்கும் அப்பாற்பட்டு நிற்பதாலும் '**கடவுள்**'' எனப்படுகிறான், இவ்வாறு நிற்பதற்கு இறைவனின் அறிவு இயற்கையாகவே இடநீக்கம் இன்றி முழு நிறைவுடன் இருக்கவேண்டும். எனவேதான் முதல்வனை முற்றுணர்வு உடையவன் என்கிறோம்.

**6. பொறிவாயில் ஐந்து அவித்தான் – இயல்பாகவே பாசங்களின் நீங்குதல் உடைமை :**

இறைவன் எல்லாவற்றையும் ஒருசேர அறியும் இயல் புடையவன்; உயிர்கள் சுட்டியறியும் இயல்புடையன. சுட்டறி வுக்குக் காரணம், உயிர்கள் அநாதியே ஆணவமலத்தைப் பற்றி, அவற்றின் அறிவு மலமறைப்புக்கு உட்பட்டதனாலேயே ஆகும். இறைவனறிவு மல மறைப்புக்கு உட்படாமையால் அவன் முற்றறிவு உடையவன் எனப்படுகிறான்.

உயிர்கள் சிற்றறிவு உடையனவாக இருப்பதனால்தான் அவற்றின் அறிவு ஐம்பொறிகள் வாயிலாக நிகழ்கின்றது, பக்குவம் வாய்க்கப் பெற்ற உயிர்களின் சிற்றறிவை நீக்கி, அவற்றை முற்றறிவுடையனவாக ஆக்குதற்கு, இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கினவனாக இருத்தல் வேண்டும், ஆகவே ''பொறிவாயில் ஐந்தவித்தான்'' என்னும் தொடருக்கு, மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் பொறிகளை வழியாக உடைய ஐந்து அவாவினையும் அறுத்தவன் – என்று பரிமேலழகர் பொருள் கூறினார். இறைவன், **இயல்பாகவே** பொறிவழி வரும் அவாவை **அறுத்தவனல்லன்** ஆயின், உயிர்கள் அவனது மெய்ந்நெறியில் நின்று பிறப்பை அறுக்க முடியாது. எனவே இயல்பாகவே பாசங்களின் நீங்குதல் உடைமை இறைவனுக்கு இன்றியமை யாமை ஆயிற்று.

**7, தனக்குவமை இல்லாதான் – முடிவில் ஆற்றல் உடைமை.**

இறைவன் எல்லாவற்றையும் எக்காலத்தும் தங்குதடையின்றிச் செய்யும் இயல்பினை உடையவன் அவ்வாறு செய்வதற்கு, அவனுடைய ஆற்றல் வரம்புக்குட்பட்டதாக இருந்தால், உயிர்களின் தகுதிக்கேற்ப தக்கன அறிவதோ முழுவதையும் தருவதோ அவனால் இயலாததாகிவிடும். அஃது இறைத்தன்மைக்கு இழுக்காகிவிடும். எனவே, இறைவன் முடிவு இல்லாத ஆற்றலை உடையவன் எனப்படுகிறான். இத்தகு ஆற்றல் எந்த உயிருக்கும் இல்லை. எனவே உலகில் உள்ள உயிர்களோடு இறைவனை ஒப்பாக வைத்துப் பேச முடியாது, உயிர் வேறு, இறை வேறு என்னும் சைவசித்தாந்தக் கொள்கையைத் ' தனக்குவமை இல்லாதான் '' என்னும் தொடரில் வைத்துத் திருவள்ளுவநாயனார் தெளிவுறுத்துகிறார்.

## 8. அற ஆழி அந்தணன் – பேரருள் உடைமை

'' அற ஆழி அந்தணன் '' என்பது, அறங்கள் எல்லாவற்றையும் தனக்கு வடிவாக உடையவன் என்பதைக் குறிக்கும். அற ஆழி-அறக் கடல். நீர்நிரம்பிய கடல்போன்று இறைவனின் ஆணை ஆகிய அருள் எங்கும் நிறைந்து இருக்கின்றது என்பதையே இங்கு '' அற ஆழி '' என்றார். அறம் அருளைக் குறிக்கும் என்பது முன்பே சிந்திக்கப்பட்டது. '' அந்தணன் '' என்பது, என்றும் கருணையே வடிவாகிய இறைவனைக் குறிக்கும். அந்தக் கருணையே பேரருள் எனப்படுகிறது. இறைவன் இந்தப் ''பேரருள் உடைமை'' என்னும் ஒரு குணத்தைக் கொண்டே, உயிர்கள்மீது இரக்கப்பட்டு, ஐந்தொழில் ஆற்றுகின்றான்.

இவ்வாறு இறைவனின் எண்குணக்களை, முதல் எட்டுக் குறட்பாக்களில் கூறி, ஒன்பதாவது குறட்பாவில் இறவனை **''எண் குணத்தான்''** என்று திருவள்ளுவ நாயனார் அருளிச்செய்துள்ளார். எனவேதான் காய்தல் உவத்தல் இன்றிப் பரிமேலழகர் **'' இவ்வாறு சைவாகமத்தில் கூறப்பட்டது ''** என்று கூறிப்போந்தார். முதல் ஒன்பது குறட்பாக்களில் இறைவனைக்குறித்துத் திருவள்ளுவர் கூறியருளிய சொற்றொடர்கள் சிவாகமத்தில், சிவபெருமானின் எண்குணங்கள் இவை இவை என்று அருளிச்செய்ததற்குப் பொருந்துவனவாக இருப்பதால்தான், பரிமேலழகர் வைணவராக இருந்தாலும், உண்மையை ஒளிக்காமல் கூறும்படி ஆயிற்று. ஆகவே, '' கடவுள் வாழ்த்து '' என்னும் முதல் அதிகா

ரத்தில், திருவள்ளுவப் பெருந்தகை குறிப்பிடும் கடவுள் சிவ பெருமானே என்பது தெளியலாயிற்று.

முதல் அதிகாரத்தில் சிவபெருமானின் சொரூப இலக்கணம் எனப்படும் எண்குணங்களைக் குறிப்பிடும்பொழுதே, "வாலறிவன் **நற்றாள்**" "மலர்மிசை ஏகினான் **மாணடி**", "வேண்டுதல் வேண்டாமை இலான் **அடி**" "தனக்குவமை இல்லாதான் **தாள்**" "அறவாழி அந்தணன் **தாள்**" "இறைவன் அடி" என்று ஐந்து குறட்பாக்களில் திருவடியைக் கூறியருளியதையும் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

முதற் குறட்பாவில் "**ஆதி பகவன்**" என்று அருளிச்செய்த தற்கு ஏற்ப, இறைவன் தானும் சக்தியும் (அருளும்) என இரு கூருக இயைந்து நிற்கிருன் என்னும் சைவ சித்தாந்தக் கொள்கையையே "அடி" "தாள்" என்னும் சொற்கள் வலியுறுத்துகின்றன. இறைவனின் எண்குணங்களும், அருவமோ, அருவுருவமோ, உருவமோ அல்ல; ஆயினும் அடி, தாள் என்னும் சொற்கள் இறைவனின் வடிவத்தைக் குறிப்பனவாகத் தோன்றும். அடி தாள் என்னும் சொற்கள் இறைவனின் நீங்காக் குணம் ஆகிய அருளையே குறிக்கும். திருவடி என்பது திருவருள் ஆகும். எனவே தான் "அடிசேர் முத்தி", "அருள்சேர் முத்தி" என்றெல்லாம் சாத்திரங்கள் முழங்குகின்றன. "**திருவடி**" இறைவனின் அருள் திருமேனி ஆகிய உருவத்திலும் உண்டு. அருவுருவத்திலும் உண்டு, அருவத்திலும் உண்டு. இங்குக் கூறிய "திருவடி" சொரூபத்தில் வருவது. இஃது **அங்கு இங்கு எனாதபடி எங்கும்** நிறைந்து நிற்கும் அருள் வெளியைக் குறித்து நின்றது. அது பற்றியே, "**தன் அருள்வெளிக்குளே அகிலாண்டகோடி எல்லாம் தங்கும்படி இச்சை வைத்து**" 1. என்று அருளிச்செய்தார் தாயுமானவரும்.

ஆயினும் "**மலர்மிசை ஏகினான் மாணடி**" என்னும் குறட்பாப் பதத்திக்குப் பரிமேலழகர்,

அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தின்கண், அவரவர் **நினைந்த வடிவோடு** விரைந்து சேறலின், 'ஏகினான்' என்று இறந்த காலத்தால் கூறினார்"

என்று பொருள் கூறியிருப்பதால், திருவள்ளுவப் பெருந்தகை சிவபெருமானின் **உருவத்** திருமேனியையும் சிந்தித்திருக்கிருர் என்பது பெறப்படும்.

சிவஞானபோதச் சிற்றுரை, நான்காம் சூத்திரம் இரண்டாம் அதிகரணத்தின் இறுதிப் பத்தியில்,

"அநாதியே மலத்தின் நீங்குதல் முதல்வன் வினையாய், அநாதி முத்தத் தன்மை என **எண்குணங்களுள்** வைத்து எண்ணப் படுவது என்பது, சிவாகமங்களுக்கு எல்லாம் ஒப்பமுடிந்தாற்போல, அநாதியே மலத்தைப்பற்றுதல் உயிரின் வினையாய், உயிர்க்குற்றங் களுள் வைத்து எண்ணப்படுவது என்பதூஉம் அவற்றிற்கு எல்லாம் (ஆகமங்களுக்கு எல்லாம்) ஒப்ப முடிந்தது. ஈண்டுப் படும் கடா விடைகள் எல்லாம், ஈரிடத்தும் ஒக்கும்"

என்று சிவஞான சுவாமிகள் அருளிச் செய்திருப்பது இங்குச் சிந்திப்பதற்குரியது. "இறைவனுடைய எண்குணங் களுக்கு எதிர் மறையான எட்டும் உயிர்க்குக் குற்றம்; அவற்றுள் **பற்றும் தன்மையே உயிர்க்குக் குற்றம்**" என்று தூத்துக்குடி பொ. முத்தையாபிள்ளை அவர்கள், அதனடியில் விளக்கம், கூறியிருக்கிறார்கள். இந்த இடத்தில், "தெரிந்து தெளிதல்" என்னும் அதிகாரத்தில் வரும்,

**"குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்**
**மிகை நாடி மிக்க கொளல்"** **504**

என்னும் குறட்பாவில் கூறப்படும் "குணம்" எண்குணங்களுள் ஒன்றாகிய அருளுடைமையைத் திருவள்ளுவர் கருதிக் கூறியிருப் பாரோ என்று எண்ணத்தோன்றுகிறது. ஏனெனில் உயிர்க்குக் குற்றம் என்பது, பிறர் நலம் பேணாமை ஒன்றே ஆகும், ஆகவே பிறர் நலம் பேணும் அருளுடைமையையே (பிறரிடத்தில் இரக்கம் கொள்ளுதல்) இங்குக் குணம் எனத் திருவள்ளுவர் கூறுகிறார் என்பது புலப்படும்.

**"தாளை வணக்காத் தலை"** – 9 என்னும் தொடர், சிவஞான போத மங்கல வாழ்த்துச் செய்யுளில் **"பொல்லார் இணை மலர் நல்லார் புனைவரே"** என்னும் தொடருக்குச் சிவஞான சுவாமிகள் **"தாடலை போல் அடங்கி நிற்பர்"** என்று உரை வகுத்து அருளி யுள்ளதைச் சிந்திக்கத் தூண்டுகிறது. தாடலை = தாள் + தலை :- அடியவர்கள் எப்போதும் அவன் **தாள்** தம் **தலை** மேல் இருப்பதாகவே கருதியிருப்பர் என்பதைக் குறிக்கிறது.

முதல் அதிகாரத்தில் சிவபெருமானின் சொரூப இலக்கணம் ஆகிய சிறப்பு இயல்பைப் பேசிய திருவள்ளுவர், இரண்டாவது

அதிகாரத்தில் வானைக் குறிப்பிட்டு அவனுடைய தடத்த இலக்கணம் ஆகிய பொது இயல்பைக் கூறுகின்றார். "வான் சிறப்பு" என்னும் அதிகாரத்தில், வான், 11 புயல், 14 நீர், 20 உலகம், 13 என்னும் சொற்கள் இடம் பெறுகின்றன. பஞ்ச பூதங்களில் இனம் பற்றி நெருப்பையும் சேர்த்து நோக்கினால், இந்த உலகம் தோன்றி நின்று ஒடுங்குவதற்கு, நிமித்த காரணன் ஆகிய இறைவனின் ஆணையே இந்த உலகத்தை நடத்துகின்றது என்பது பெறப்படும். இது பற்றிய விளக்கத்தைப் "பாயிரம் பற்றிய ஓர் ஆய்வு" என்னும் தலைப்பில் காணலாம்.

இறைவனைத் திருவள்ளுவர், "மெய்ப்பொருள்" 356 என்னும் ஒரு சொல்லால் குறிப்பிடுகின்றார். மெய்ப்பொருள் என்பது, என்றும் ஒரு படித்தாய் நிற்கும் பொருளைக் குறிக்கும், அஃதாவது, நிலைமாறுபாடு இல்லாததே மெய்ப்பொருள் ஆகும். இதனையே சிவஞானபோதம் ஆறும் சூத்திரம் "**சிவசத்து**" என்கிறது, இறைவனைக் குறித்த இன்னொரு சொல், "**பற்றற்றான்**" 350 என்பது, இறைவன் எந்த ஒரு பொருளையும் பற்றி நிற்பவன் அல்லன் என்பது இதற்குப் பொருள்: உயிர் யாதானும் ஒன்றைப் பற்றியே நிற்கும் இயல்புடையது, இவ்வேறுபாட்டை விளக்கும் பொருட்டே திருவள்ளுவர் இறைவனைப் "பற்றற்றான்" என்று குறிப்பிடுகிறார்.

"**செம்பொருள்**" - 358 என்னும் சொல் இறைவன் பிறப்பு இறப்பு அற்றவன் என்பதைக் குறிக்கிறது. "**சிறப்பு என்னும் செம்பொருள்**" என்னும் தொடருக்குப் பரிமேலழகர், வீட்டிற்கு நிமித்த காரணமாகிய செவ்வியபொருள் என்று பொருள் கூறுகிறார், எனவே பிறப்புப்படுவது உயிரே அன்றி இறைவன் பிறப்புப்படுவதில்லை, என்பது தெளிவாயிற்று, ஆகவே இறை வேறு, உயிர் வேறு என்பது திருவள்ளுவர் கொள்கை ஆகும்,

**உயிர் இயல்பு – எல்லா உயிர்க்கும் -** 972

இறைவன் ஒருவன்: உயிர்கள் பல-என்பது சைவ சித்தாந்தக் கொள்கை, இதனைத் திருவள்ளுவர் பல குறட் பாக்களில் வலியுறுத்துகின்றார் "**ஊனைக் குறித்த உயிரெல்லாம்**" – 1013 "**பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்**" - 322 "**மாநிலத்து மன்னுயிர்**க்கெல்லாம் – 68 என்னும் குறட்பாக் கருத்துக்கள் அவற்றுள் சிலவாகும்.

**'' துறந்தார் பெருமை துணைக்கூறின், வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று '' - 22**

என்னும் குறட்பா இக்கருத்தைத் தெளிவுறுத்துகின்றது, இதன் பொருள் வருமாறு:

அகப்பற்று புறப்பற்று என்னும் இருவகைப் பற்றினையும் விட்ட ஞானிகளது பெருமையை, இவ்வளவு என்று எண்ணிக் கணக்கிட்டுச் சொல்லப் போனால், இந்த உலகத்தில் பிறந்து இறந்தவர்களின் எண்ணிக்கையைக் கணக்கிட்டுக் கூறுவதுபோல் ஆகும். அஃது இயலாது என்பது போல், உயிர்கள் எத்தனை உள்ளன என்பதையும் எவராலும் கூறமுடியாது, எனவே சைவ சித்தாந்தம் **'' உயிர்கள் எண்ணில ''** என்றும் கூறுகின்றது,

இந்தக் குறட்பாவின் அடியை ஒட்டித் திருவருட்பயனில் உமாபதி சிவம்,

**'' பிறந்த நாள் மேலும் பிறக்கும்நாள் போலும்
துறந்தோர் துறப்போர் தொகை ''** 11

என்று கூறியருளினர்.

இதன் பொருள் வருமாறு:

ஆன்மாக்களுள் முத்தி அடைந்தவர்களின் எண்ணிக்கை, உயிர்கள் இதுவரை பிறந்து வாழ்ந்த நாட்கள் எத்தனையோ அதற்குச் சமம் ஆகும்; இன்னும் முத்தி அடைய இருக்கும் உயிர்களின் எண்ணிக்கை, இனிப் பிறக்க இருக்கும் உயிர்களின் வாழ் நாட்கள் எத்தனையாக இருக்குமோ, அந்தத் தொகைக்குச் சமம் ஆகும். ஆகவே, உயிர்களின் எண்ணிக்கை இத்தனை என்று எவராலும் அறுதியிட்டுச் சொல்ல முடியாது.

எனவே உயிர்கள் எண்ணில என்னும் கருத்தைத் திருவள்ளுவர் கொண்டிருந்தார் என்பது பெறப்படுகிறது.

உயிர்களுக்கு முதன் முதலில் இறைவன் பிறப்பை ஏற்படுத்தியபோது, ஏதேனும் ஓரவாரம் ( பாரபட்சம் ) செய்தானு என்பதைச் சிந்தித்து, எல்லா உயிர்களுக்கும் இறைவன் அநாதியே ஒரே தன்மையதான பிறப்பையே கொடுத்தான் என்று

**" பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பு ஒவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான் "** 972

என்னும் குறட்பாவில் வைத்துத் தெளிவுபடுத்துகிறார்.
இதன் பொருள் வருமாறு :

எல்லா உயிர்களுக்கும் பொதுவாக உள்ள பிறப்பு இயல்பு, ஒரு தன்மையதாகத்தான் இருக்கும்; ஆயினும் அந்த அந்த உயிர் செய்கின்ற நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப, அவற்றிற்கு ஏற்படும் பெருமை சிறுமைகள் வேறுபடும்

இந்தக் குறட்பாவில் வரும் "**எல்லா உயிர்க்கும்**" என்னும் தொடருக்கு 'மனித உயிர்' என்று பொருள் கொள்வது பொருந்தாது. ஏனென்றால், மனிதனுக்குக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டியதைத் திருவள்ளுவர், "**மாந்தர்க்கு**" – 452 என்று குறிப்பிடுவார். எனவே, இக்குறட்பாக் கருத்து, அஃறிணை உயிர் களுக்கும் பொருந்தும் என்பது பெறப்படும். அஃறிணை உயிர் களில், பசு, காளை, யானை, நாய் முதலியவற்றுள் பயன் படுவனவும் உள்ளன; அப்பயன்களால் அவை சிறப்பு பெறுகின்றன என்பது அனுபவ உண்மை. எனவே, இக்குறட் பாவில், சைவ சித்தாந்த நுண்பொருள் ஒன்றைக் கூறக்கருதியே, திருவள்ளுவர் "**எல்லா உயிர்க்கும்**" எனறருளிச்செய்திருக்கிறார்.

போற்றிப் பஃறொடை பத்து முதல் பதின்மூன்றுவது வரை யுள்ள கண்ணிகளில், முதன் முதல் உயிர்கள் எப்படி பிறப்புக்கு வந்தன என்பதை உமாபதிசிவம் அருளிச் செய்துள்ளார். அக்கண்ணிகள் வருமாறு:

**" ஞானத்தின்**
**கண்ணை மறைத்த கடிய தொழில் ஆணவத்தால்,**
**எண்ணும் செயல் மாண்ட எவ்வுயிர்க்கும் உள்நாடிக்**
**கட்புலனால் காணார்தம் கைக்கொடுத்த கோலேபோல்**
**பொற்புடை மாயைப் புணர்ப்பின்கண் - முற்பால்**
**தனுகரண புவனமும் தந்து, அவற்றால்**
**மனம் முதலால் வந்த விகாரத்தால் - வினை இரண்டும்**
**காட்டி அதனால் பிறப்பு ஆக்கிக் கைக்கொண்டும்**
**மீட்டு அறிவு காட்டும் வினை போற்றி "**

இப்பகுதியின் பொருள் சுருக்கம் வருமாறு : ( இதன் பொருள் விரிவைப் பயிற்சிமைய வெளியீடு எண் – 10 ல் காண்க )

அநாதியே ஆணவமலமறைப்பு காரணமாக அறிவு இச்சை செயல்கள் தொழிற்படாமல் கிடந்த உயிர்களுக்கு, இறைவன் முதன் முதலில் நுண்ணுடலை வழங்குகிறான், அந்த நுண்ணுடலில்

உள்ள மனத்தைப் பற்றி உயிர் தன் விருப்பு, வெறுப்புக்களை வெளிப்படுத்துகிறது, அவற்றிற்கு ஏற்பப் பருவுடலை வெவ்வேறு விதமாக இறைவன் வழங்குகிறான். இந்தப் பகுதியில் **"எவ்வுயிர்க்கும்"** என்று கூறியது, குறட்பாவில் **"எல்லா உயிர்க்கும்"** என்று கூறியதோடு வைத்து எண்ணிப்பார்க்கத் **தக்கது.**

மாயாகாரியங்கள் ஆகிய தனுகரண புவன போகங்களை இறைவன் படைத்து உயிர்களுக்கு வழங்கும் பொழுது, முதன் முதலில் எல்லா உயிர்களுக்கும் ஒரே தன்மையதான நுண்ணுடலையே பூட்டுகிறான் என்பதை **"எவ்வுயிர்க்கும் உள் நாடி ... முற்பால் தனுகரண புவனமும் தந்து"** என்னும் தொடர்களால் அறியாலம். இந்தத் தொடரில் "போகம்" என்ற சொல், இல்லாமையால், நுண்ணுடலை முதன் முதலில் இறைவன் உயிர்களுக்குப் பூட்டும் போது, எந்த உயிர்க்கும் நல்வினை தீவினைகளில் விருப்பு வெறுப்பு நிகழவில்லை என்பது பெறப்படும். படவே, **"எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒக்கும்"** என்னும் செய்தி, சைவ சித்தாந்த நுண்பொருளைத் தெருட்டும் பொருட்டு எழுந்தது எனபது புலப்படுபடு.

இறைவன் எல்லா உயிர்கட்கும் ஒரேதன்மையதான நுண்ணுடலைத் தந்து, பின்பு அந்தந்த உயிரின் விருப்பு வெறுப்புக் கேற்ற முதல் பருவுடலையும் இறைவனே தருவதால்தான், சைவ சித்தாந்தம் இறைவனை அம்மையப்பராகக் கொள்கின்றது. எனவே **"ஆதி பகவன்"** என்னும் தொடர், அம்மையப்பரையே குறிக்கும் என்பது தெளிவாகும்.

சிவஞான போதம் ஏழாம் நூற்பாவில் ஆன்மா, சார்ந்த பொருளின் தன்மையையே தன் தன்மையாகக் கொள்ளும் இயல்பு உடையது என்பது தெளிவுறுத்தப்பட்டுள்ளது. இவ்வுண்மை,

> ***"நிலத்து இயல்பான் நீர்திரிந்து அற்றாகும்; மாந்தர்க்கு***
> ***இனத்து இயல்பது ஆகும் அறிவு"*** **452**

என்னும் குறட்பாவால் தெளிவுறுத்தப்படுகிறது.

இதன் பொருள் வருமாறு :

தான் சேர்ந்த நிலத்தினது இயல்பினாலே, நீர் தன் தன்மை வேறுபட்டு, அந்த நிலத்தின் தன்மையது ஆகி விடும், அதுபோல மனிதர்களின் அறிவும், அவர்கள் சேர்ந்த இனத்தினது

இயல்பினாலே வேறுபட்டு, அந்த இனத்தின் தன்மையது ஆகிவிடும்.

நிலத்தில் இருந்து கொண்டு, நிலத்தின் உதவியால் நிலத்தின் தன்மையை நீர் பெறுவது போல், அருளில் இருந்து கொண்டு, அருளின் உதவியால் அருளின் தன்மையை உயிர் பெறும்; இஃதே உயிரின் உண்மை இயல்பு ஆகும்.

உடல் வேறு, உயிர் வேறு என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. இவ்வுண்மையைத் திருவள்ளுவர்,

**"குடம்பை தனித்து - ஒழியப் புள்பறந்த அற்றே**
**உடம்போடு உயிரிடை நட்பு"** 338

என்னும் குறட்பாவில் தெளிவுறுத்துகின்றார்.

இதன் பொருள் வருமாறு :

முன்பு வேறாக இல்லாத முட்டை தனித்துக் கிடக்க, அதனுள் இருந்த பறவை பறந்து போனது. அதுபோல்தான், உடம்போடு இப்போது கூடி இருக்கும் உயிருக்கும், இந்த உடம்புக்கும் உள்ள உறவு ஆகும்.

இந்தக் குறட்பாவிற்குள்ள சிறப்பு உரையில் பரிமேலழகர்.

"சேதனமாய் அருவாய் நித்தமாய் உயிரும், அசேதனமாய் உருவாய் அநித்தமாய் ஆய உடம்பும் தம்முள் மாறு ஆகலின், வினை வயத்தால் கூடியது அல்லது, நட்பு இல என்பது அறிக" என்று கூறியுள்ளது சிந்திப்பதற்கு உரியது.

உயிர் அறிவுடைப் பொருள். உடல் சடப்பொருள்; உயிருக்கு உருவம் இல்லை; உடலுக்கு உருவம் உண்டு. உயிர் நிலையானது; உடல் நிலையற்றது. எனவே உடலும் உயிரும் வினை காரணமாகக் கூடியதே அன்றி, இரண்டிற்கும் வேறு எந்த உறவும் இல்லை. இவ்வளவு தெள்ளத் தெளிவாகப் பரிமேலழகர், வள்ளுவப் பெருந்தகையின் உள்ளக் கிடக்கையை விளக்கியுள்ளமையால், திருவள்ளுவரின் நெறி சைவ நெறியே என்பது தெளியப்படும்.

**"உயிர் உடம்பின் நீக்கியார்" – 330** என்னும் குறட்பாத் தொடரும் இந்தச் சிந்தனையோடு வைத்து ஒப்ப நோக்கத்தக்கது.

உயிர்களைச் சைவ சித்தாந்தம், அவற்றின் சிறப்பு கருதி, விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்று மூன்று வகையாகப் பகுத்துள்ளது. திருவள்ளுவ நாயனுரும் உயிர்களைக் கீழ்க்காணு மாறு மூன்று வகையாகப் பகுத்துள்ளார் :

1. நிறைமொழி மாந்தர் - 28 - விஞ்ஞானகலர்
2. செயற்கரிய செய்வார் - 26 - பிரளயாகலர்
3. செயகரிய செய்கலாதார் - 26 - சகலர்

" **நிறை மொழி மாந்தர்** " என்பவர் இறைவன் திருவருளைப் பெற்ற திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகர் மெய்கண்டார் முதலிய விஞ்ஞானகலர் ஆன்மாக்கள் ஆவர். இவர்களை அதிட்டித்து நின்றே, இறைவன் நமக்கு அறிய வேண்டுவனவற்றை அறிவித்துள்ளான், எனவே இவர்கள் நம் குருமார்கள் ஆவர்.

" **செயற்கரிய செய்வார்** " என்பவர், இவ்வுலகில் சமயநெறி முறைகளை வாழ்ந்து காட்டிய அடியார் பெருமக்கள் ஆவர், இவர்களைச் சேக்கிழார், " **செய்வதற் அரிய செய்கை செய்த நல் தொண்டர்** " 28. என்று இயற்பகை நாயனுர் புராணத்தில் கூறியருளியுள்ளார், இவர்களை நம்முடைய வழிகாட்டிகளாகக் கொள்வதால், இவர்களும் நம் குருமார்களாவர். திருக்கயிலாயத்தில் எழுந்தருளியுள்ள சீகண்ட பரமேசுவரன், சகலர் வகை ஆன்மாக் களாகிய நமக்குத் தலைமைகுரு ஆவர்.

" **செயற்கரிய செயகலாதார்** " என்னும் தொடர் சகலர் வகை ஆன்மாக்களாகிய நம்மைக் குறிக்கும். " **செய்வது அறியாச் சிறு நாயேன்** " என்று மணிவாசகர் நமது சிறுமையைத் தம்மேல் ஏற்றிக் கூறியருளியது இங்குச் சிந்திக்கத் தக்கது.

இவ்வாறு ஆன்மாக்கள் மூவகையாகப் பிரிக்கப்பட்டிருப் பதைத் திருக்குறளில் பல்வேறு இடங்களில், சூழ்நிலைக்கு ஏற்ப இடம்பெறுவதைக் காணலாம்.

## ஆணவமல இயல்பு - இருள்சேர் இருவினை - 5.

ஆணவமலம் ஒன்றே உயிர்க்கு அறியாமையைச் செய்வது என்பது சைவசித்தாந்தக் கொள்கை, இதனைத் திருவள்ளுவர் " இருள் " என்னும் சொல்லால் குறிப்பிடுகிறுர், ஆணவமலம்

என்று ஒன்று இல்லையானால் கன்மம் என்பதே உயிர்க்கு இல்லையாகும், இதனையே "**இருள் சேர் இருவினை**" என்னும் தொடரால் திருவள்ளுவர் கூறுகிறார், இதற்குப் பொருள்: "ஆணவமலப் பற்றோடு கூடிச் செய்யும் நல்வினைகளும் தீவினைகளும்" என்பதாகும், இக்கருத்தை வலியுறுத்தியே உமாபதிசிவம்.

"**இருள் இன்றேல் துன்புஎன்?**" **27**

என்று திருவருட்பயனில் அருளிச்செய்துள்ளார்.

"**அறிதோறு அறியாமை கண்டற்று**" **1110**

என்னும் குறட்பாப் பகுதியில் வரும் "**அறியாமை**" என்னும் சொல், ஆணவ மலப் பற்று காரணமாக உயிர்க்குள்ள அறியாமையைக் குறிக்கும். இப்பகுதிக்குச் சிறப்புரை எழுதிய பரிமேலழகர் "அறிவிற்கு எல்லை இன்மையின், மேன்மேல் அறிய அறிய, **முன்னை அறிவு** அறியாமையாய் முடியும்" என்று கூறியிருப்பது நுண்ணிதின் ஆழ்ந்து சிந்திப்பதற்கு உரியது. உயிர்க்கு அறிவு உள்ளது என்பதை "**முன்னை அறிவு**" என்னும் தொடர் குறிக்கின்றது; அஃது "**அறியாமையாய் முடியும்**" என்பது, அந்த அறிவு நிகழாமையைக் குறிக்கும். அஃதாவது அநாதியே ஆணவமல மறைப்பு காரணமாக, உயிர்க்கு இயல்பாகவே உள்ள அறிவு, விளங்காமையால் அந்நிலையில் (கேவலத்தில்) உயிர் அறியாமை வயப்பட்டு இருந்தது என்பதை இக்குறட்பாப் பகுதி குறிக்கின்றது. "**அறிதோறு**" என்பதற்குப் பரிமேலழகர், நூல்களாலும் நுண் உணர்வாலும் பொருள்களை அறிய அறிய என்று பொருள் கூறுகிறார். அஃதாவது **கேவல நிலையில்** அறிவு நிகழாமையால் அறியாமை வயப்பட்டுக் கிடந்த உயிர், **சகல நிலையில்** நூல்களைப் பயில்வதாலும் நுட்பமான உணர்வுகளாலும் அறிவு விளக்கம் பெறுகிறது. இக்கருத்தை வலியுறுத்தும் பொருட்டே உண்மை விளக்கம் "**அறியாமை ஆணவம்**" 22 என்கிறது.

ஆணவமலப்பற்று நீங்கினால் உயிர்க்குள்ள பிறவித்துன்பம் நீங்கும் என்பது சைவசித்தாந்தம், இதனைத் திருவள்ளுவர்,

"**இருள் நீங்கி இன்பம் பயக்கும்**" **352**

என்கிறார். ஆணவமலம் நீங்கினால், உயிர்க்குப் பிறவித்துன்பம் நீங்கி, வீடுபேற்று இன்பம் கிட்டும் என்பது இதற்குப் பொருள்.

எதைச் செய்தாலும் ஆணவமல மறைப்புக்கு உட்படாமல் செய்ய வேண்டும் என்பதைத் திருவள்ளுவர், "**இருள் தீர எண்ணிச் செயல்**" 675 என்று கூறுகிறர். இஃது உயிர்க்குள்ள சகல நிலைபற்றிக் கூறியருளியது.

ஆணவமலத்தின் இயல்பு பற்றித் திருவள்ளுவர் "**புல்லறிவாண்மை**" – 85

என்னும் அதிகாரத்தில் வைத்துத் தெளிவுபடுத்தி யுள்ளார்.

"புல்லறிவு ஆண்மை" என்பது புல்லிய அறிவை ஆளும் தன்மையைக் குறிக்கும் (புல்லிய – இழிந்த) அஃதாவது தான் சிற்றறிவு உடையவனுய் இருந்து கொண்டே, தன்னைப் பேரறிவு உடையவனுகத் தானே மதித்துக் கொண்டு, உயர்ந்தவர்கள் கூறும் உறுதியான சொற்களைக் கொள்ளமல் தான்றேன்றியாக இருப்பதே ஆணவமலத்தின் இயல்பு ஆகும், இந்த அதிகாரத்தில் வரும் குறட்பாக்களில் உள்ள சில கருத்துக்களைச் சற்று நோக்குவோம்:

**"வெண்மை எனப்படுவது யாதுஎனின் ஒண்மை**
**உடையம் யாம்என்னும் செருக்கு"** - *844*

என்னும் குறட்பாவின் பொருள் வருமாறு.

புல்லறிவுடைமை என்று சொல்லப்படுவது யாது என்று வினவின், அது தம்மைத் தாமே நாம் நல்லறிவு உடையவர் என்று நன்கு மதிக்கும் மயக்கம்; அஃதாவது ஆணவம், இதன் சிறப்புரையில் "வெண்மை" என்பது அறிவு முதிராமை (**Lack of maturity of mind**) என்று பரிமேலழகர் கூறியிருப்பது, **பக்குவம் இன்மை** என்னும் பொருளில் வந்தது.

**ஏவவும் செய்கலான், தான்தேறுன் அவ்வுயிர்**
**போஒம் அளவும் ஓர் நோய்"** - *848*

என்னும் குறட்பாவுக்குப் பொருள் வருமாறு.

புல்லறிவாளன், தனக்கு உறுதியானவற்றை அறிவுடையவர் சொன்னுலும் அதை அறிந்து செய்யமாட்டான்; தானுகவும் இவை இவை செய்யத்தக்கன என்று தெரிந்து கொள்ளவும் மாட்டான்; எனவே இறக்கும் வரை அவன் உயிர், ஒருநோயே ஆகும். உயிரை நோய் என்று கூறியதற்குக் காரணம், அஃது ஆணவமலத்தைப்

பற்றி அறியாமைவயப்பட்டு இருப்பதனுலேயே ஆகும். "நோய்" என்ற சொல்லைத் திருவள்ளுவர்,

**"காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்**
**நாமம் கெடக்கெடும் நோய்" - 360**

என்னும் குறட்பாவில் வைத்து, அஃது ஆணவ மலப் பற்று என்பதைத் தெளிவுறுத்துகிறார், காமம்-விருப்பு வெகுளி - வெறுப்பு மயக்கம் - மருட்சி - அறியாமை, அஃதாவது விருப்பு,வெறுப்பு, அறியாமை என்னும் மூன்றும் காரியங்கள், இவற்றிற்குக் காரணம் ஆணவமலப்பற்று, ஆணவமலப்பற்று. உயிர்க்கு நீங்கவேண்டு மாயின், உயிர்க்குள்ள விருப்பு வெறுப்பு அறியாமை என்னும் மூன்றும் உயிரைவிட்டு நீங்க வேண்டும் என்பது இக்குறட்பாவிற்குப் பொருள்.

**கன்ம மல இயல்பு - ஊழிற் பெருவலி** 380

"இருவினை" க்குக்காரணம் ஆணவமலப்பற்றே என்பதைத் திருவள்ளுவர், "இருள் சேர் இருவினை" - 5 என்று கூறிய திலிருந்து புலப்படும். உடவே, வினை உண்மையையும் அவர் உடன்படுகிறார் என்பது பெறப்படும்.

வினை மூவகைப்படும்; அவை **ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம்** எனப்படும். அவற்றுள் "**ஆகாமியம்**" என்பது நாமாக விரும்பிச் செய்யும் வினை என்பதைத் திருவள்ளுவர்,

**"அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்**
**தவாஅப் பிறப்பு ஈனும் வித்து'** '361

என்னும் குறட்பாவில் வைத்துத் தெளிவுறுத்துகிறார். இதன் பொருள் வருமாறு:

எல்லா உயிர்களுக்கும் எக்காலத்தும் தவறாமல் வருகின்ற பிறப்பை விளைவிப்பது, உயிர்க்கு உள்ள விருப்பமே என்று மேலோர் கூறுவர். ( தவா - கெடாமல் - வழுவாமல் - தவறாமல் ) இதிலிருந்து உயிர்க்குள்ள அறிவு இச்சை செயல்களில், உயிரின் இச்சையே பிறப்பிற்குக்காரணம் என்பது பெறப்படும். எனவே இக்குறட்பா, நாமாக விரும்பிச் செய்யும் வினையே ஆகாமியம் என்பதைத் தெளிவுறுத்துகின்றது.

இன்னும்,

" **அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம்** ". **368**

என்னும் குறட்பாக்கருத்தும் இங்குச் சிந்திக்கத்தக்கது.

" **அகாமியம்** " என்பது, உயிர்களின் **விருப்பத்தால் வருகின்ற வினை** ஆகும். எனவே, இது **வருவினை** எனப்படும். இந்த வருவினை, நல்வினைகளில் விருப்பும் தீவினைகளில் வெறுப்பும் கொண்டு வருவதால், உயிர்களின் விருப்பு வெறுப்புக்கள் வினை எனப்படுகிறது. இதனையே திருவள்ளுவர் " **இருவினை** " - 5 என்றார்.

" **சஞ்சிதம்** " என்பது, இவ்வாறு உயிர்கள் செய்த இருவினைகளும, பக்குவம் ஆகும் வரையில் நுண்ணிய நிலையில், புத்தி தத்துவத்தைப் பற்றி மாயையில் கிடக்கும். உயிர்களின் நல்வினை தீவினைப் பயன்கள் உயிர்களுக்கு ஊட்டப்படுவதற்கு முன்பு, அதற்கான பருவ முதிர்ச்சி ( **period of maturity** ) ஏற்படும் வரை, சஞ்சிதமாக இருப்பில் இருக்கும். எனவே இஃது " **இருப்பு வினை** " எனப்படும்; இருவினைகளின் தொகுப்பாக அஃது இருப்பதால், இதனைத் " **தொகுப்பு வினை** " என்றும் கூறுவர்.

" **காணாதான் காட்டுவான் தான் காணான்; காணாதான்**
**கண்டானாம் தான் கண்ட வாறு** " **849**

என்னும் குறட்பா ஆணவமலப் பற்று உடையவனது இயல்பை மிகத் துல்லியமாக விளக்குகின்றது, இதன் பொருள் வருமாறு :

ஆணவமலப் பற்று மிகுதியாக உடையவன் எப்படி இருப்பான் என்றால், தான் எல்லாவற்றையும் அறிந்தவனாகத் தன்னைத் தானே மதித்துக் கொண்டு இருப்பான்; எனவே பிறரால் எதையும் அறியும் தன்மை உடையவனாக இருக்கமட்டான்; அவனிடத்தில் சென்று எதையாவது அறிவிக்க வேண்டும் என்று ஒருவர் சென்றால், அவர் அவனால் பழிக்கப்பட்டு, அவரும் அறியாமை வயப்பட்டு விடுவார்.

மேலும் ஆணவமலப்பற்று உடையவன், கொண்டது விடாத பிடிவாதத் தன்மை உயைவன் ஆகலின். தான் எதனை அறிந்து வைத்திருக்கிறானோ, அதனையே மேலான அறிவு என்று கருதியபடி இருப்பான்.

இக்குறட்பாவுக்குள்ள சிறப்புரையில், "புல்லறி வாளர்க்கு நல்லறிவு கொளுவுதல் ஒருவாற்றானும் இயைவது அன்று என்பதாம்" என்று பரிமேலழகர் கூறியிருப்பது சிந்திக்கத் தக்கது. உலகியலில் "இவனைத் திருத்தவே முடியாது" என்று கூறுவார்கள் அல்லவா? ஆணவமலப் பற்று மிகுதியாக உடையவனுக்கே இது பொருந்தும்.

எனவேதான் "கடவுள் இல்லை, இல்லவே இல்லை" என்று கூறுபவரிடம் சென்று, பல்வேறு அளவைகளை (பிரமாணங்களை) எடுத்துக்காட்டிக் கடவுள் உண்மையை நிலை நாட்ட முயன்றால், அவன் அதை ஏற்கவே மாட்டான் என்னும் கருத்தமைந்த குறட்பா ஒன்றையும் இந்த அதிகாரத்தின் இறுதியில் பெருந்தகை அருளிச் செய்துள்ளார். அக்குறட்பா வருவாறு :

**"உலகத்தார் உண்டு என்பது இல் என்பான் வையத்து**
**அலகையா வைக்கப் படும்"** 850

இதன் பொருள் வருமாறு :

உயர்ந்தவர்கள் பலர் கூடி 'உண்டு' என்று சொன்ன ஒரு பொருளை, தன் அறியாமை காரணமாக 'இல்லை' என்று சொல்லுபவன், மனிதன் என்று கருதப் படமாட்டான்; அவன் உலகத்தில் காணப்படுவதோர் பேய் என்றே கருதப்படுவான்.

அறியாமை காரியம்; ஆணவமலப் பற்று காரணம், புல்லறிவாண்மை என்பதற்கு, அறிவு இல்லாமை என்பது பொருள் அன்று; விளங்காமையே அதற்குப் பொருளாகும், ஆணவமல உண்மையை அறியாதவரே புல்லறிவாளர் எனப்படுவர்.

இது, விளைந்த வித்து அடுத்துப் பயிராக்கப் படுவதற்கு முன்பு, நெற்குதிரில் சேமித்து வைப்பதைப் போன்றது. இதனைத் திருவள்ளுவர்,

**"அற்றார் அழி பசி தீர்த்தல் அஃதுஒருவன்**
**பெற்றான் பொருள் வைப் புழி"** 226

என்னும் குறட்பாவில் வரும் "**வைப்புழி**" என்னும் தொடரால் குறிப் பிடுகிறார். வைப்பு + உழி = வைக்கும் இடம்.

இக்குறட்பாவின் பொருள் வருமாறு :

வறியவர்களது மிகுந்த பசியை ஒருவன் நீக்க வேண்டும். அப்படிச் செய்வது அவன் தான் பெற்றிருக்கும் பொருளைத் தனக்குப் பின்னொரு காலத்தில் பயன்படுமாறு வைப்பதற்கு உரிய இடமாக அது கருதப்படும்.

இது, நல்வினை ஆகிய புண்ணியத்தைக் குறித்துக் கூறியதாகும். தீவினை ஆகிய பாவத்தைக் குறித்துக் கூறிய குறட்பா வருமாறு :

**" அழுக்காறு என ஒரு பாவி திருச்செற்றுத்**
**தீயுழி உய்த்து விடும் "** 168

இதற்குப் பொருள் வருமாறு :

பிறர்க்குள்ள நல் வாய்ப்புக்களைக் கண்டு, உள்ளம் பொறுக்க மாட்டாமையால், பொறாமைப் படுவதாகிய தீவினை (பாவி), அந்தத் தீவினையைச் செய்பவனுக்கு உள்ள எல்லா வசதி வாய்ப்புக்களை இந்தப் பிறப்பில் கெடுத்துவிடும்; அடுத்த பிறப்பில் அந்தத் தீவினை, அவனுக்கு அழிவை உண்டாக்கக் கூடிய போகூழாக ஆகத்தக்க முறையில், இருப்பு வினை ஆகிய சஞ்சிதத்தில் போய்ச் சேரும்.

உலகத்திலேயே மிகப் பெரிய தீவினை, பொறாமையே ஆகும். ஆகவேதான் அதனைப் " பாவி " என்றார்.

**" பிராரத்தம் "** என்பது, மேலே சொன்ன இருப்புவினையிலிருந்து, உயிர்கள் செய்த நல்வினை தீவினைகளின் பயனாகிய இன்பத் துன்பங்களை உயிர்கள் நுகரும் பொருட்டு, இறைவனால் ஊட்டப்படும் **ஊழினைக்** குறிக்கும். இஃது இறைவனால் விதிக்கப் பட்டு உயிர்க்கு ஊட்டப்படுவதால் **" விதி "** எனப்படுகிறது; உயிர்களால் நுகரப்படுவதால், **" நுகர்வினை "** எனப்படும். **" ஊழ் "** – 38 பற்றித் திருவள்ளுவர் ஒரு அதிகாரமே செய்திருக்கிறார். அந்த அதிகாரத்தின் இறுதிக் குறட்பாவில், **" ஊழிற் பெருவலி யாவுள ? "** – 380 என்று கூறியிருப்பது, ஆழ்ந்த சிந்தனைக்குரியது. ஊழ் இறைவனாலேயே ஊட்டப் படுகிறது என்பதைத் திருவள்ளுவர்,

**"வகுத்தான் வகுத்த வகை அல்லால் கோடி**
**தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது"** 377

என்று தெளிவுறுத்தியுள்ளார், இதன் பொருள் வருமாறு:

ஐம்பொறிகளால் நுகரப்படும் பொருள்களைக் கோடி கோடியாக ஒருவன் சம்பாதித்து வைத்தாலும், அவற்றை அனுபவிப்பதற்குரிய விதியை, இறைவன் ஊட்டினால் அன்றி, அவன் அவற்றை அனுபவிக்க முடியாது.

இந்தக் குறட்பாவிற்குள்ள சிறப்புரையில் பரிமேலழகர்,

**"ஓர் உயிர் செய்த வினையின் பயன், பிறிதோர் உயிரின்கன் செல்லாமல் அவ்வுயிர்க்கே வகுத்தலின், 'வகுத்தான்' என்றார்"**

என்று கூறியிருப்பது, ஒவ்வோர் உயிர்க்கும் வினைப்பயன் ஆகிய ஊழை இறைவனே வகுத்து வருகிறான் என்னும் சைவ சித்தாந்தக் கொள்கையினைத் தெருட்டியவாறு பிற்று, இந்த இடத்தில் உமாபதிசிவம் அருளிச் செய்த,

**"செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்**
**உய்வான் உளன்என்று உணர்"** 53

என்னும் திருவருட்பயன் சிந்திப்பதற்கு உரியது.

**"சேர் பயனைச் சேர்ப்பவன்"** இறைவன் என்னும் சைவ சித்தாந்தக் கொள்கையையே திருவள்ளுவ நாயனார் **"வகுத்தான்"** என்னும் சொல்லால் வலியுறுத்துகின்றார். **ஊழ் இறைவனால் உயிர்க்கு ஊட்டப் படுவதால்தான், அதனைவிட வலு மிக்கது எதுவும் இல்லை என்னும் கருத்தில் திருவள்ளுவர், 'ஊழிற் பெருவலி யாவுள?" - 380 என்று கூறினர். ஆயினும் ஊழினை எந்த வகையாலும் வெல்ல முடியாது என்று அவர் எங்கும் கூறவில்லை.**

**"ஆள்வினை உடைமை"** – 62 என்னும் அதிகாரத்தில், ஊழை வெல்வதற்கான வழி வகைகளை எல்லாம் திருவள்ளுவர் கூறுவதால், ஊழை வெல்லமுடியாது என்பது அவர் கருத்தன்று என்பது பெறப்படும். "ஆள்வினை உடைமை" என்பது, இடைவிடாத **மெய்ம்முயற்சி** உடையன் ஆதலைக் குறிக்கும் என்று பரிமேலழகர் பொருள் கூறியிருப்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். "மெய்ம் முயற்சி" என்பது, நிலைபேறுடைய

பயனைத்தரும் முயற்சி என்பதாகும். அஃதாவது உலகியலில் 'முயற்சி' என்னும் பெயரில், பல்வேறு வகைகளில் முயலுவன வற்றைக் கொள்ளாமல், இறையியலில் கூறப்படும் நெறிப்பாடு களில் நின்று முயன்றால், இறைவனால் ஊட்டப்பட்ட ஊழை. அவனருளாலேயே வெல்லலாம் என்பது தெளியப்படும்.

இவ்வுண்மையைத் தெளிவுறுத்தும் பொருட்டே திருவள்ளுவர்,

**"பொறியின்மை யார்க்கும் பழியன்று; அறிவறிந்து**
**ஆள்வினை இன்மை பழி"** **618**

என்னும் குறட்பா வாயிலாக, ஊழை வெல்லாமல் இருப்பது குற்றம் என்று கூறியதோடு, நில்லாமல் அதனை வெல்வதற்குரிய வழிவகைகளையும் கூறியருளியுள்ளார். இக்குறட்பாப் பொருள் வருமாறு :

நல்வினை தீவினைப் பயன்களைத் தருகின்ற நிலையில், தேவை யான பயனைத் தரும் விதி, எவருக்கும் இல்லாமற் போகலாம் அஃது ஒன்றும் பெருங்குறை இல்லை. (ஏனென்றால் அஃது இறைவனால் ஊட்டப்படுவது ஆகலின்). ஆனால், அறிய வேண்டுவனவற்றை அறிந்து தெளிந்து, அந்த விதியை மாற்றுவதற்கு **மெய்ம் முயற்சி** செய்யாமல் இருப்பதுதான் பெருங்குற்றம் ஆகும்.

இந்தக் குறட்பாவில் **"அறிவறிந்து"** என்று வரும் தொடர் வாயிலாகத்தான், திருவள்ளுவர் விதியை வெல்வதற்குரிய வழிவகைகளைக் கூறியருளியுள்ளார். அறிய வேண்டுவன யாவை? கூறுதும். வினைப்பயன் இறைவனால் ஊட்டப்படுகிறது என்பது ஒருதலை. இறைவனால் ஊட்டப்படும் வினைப்பயனை இறையருளாலேயே வெல்ல முடியும் என்பது முதற்கண் தெரிந்து கொள்ள வேண்டுவது. அடுத்து, மதியால் விதியை வெல்ல முடியாது என்பது. ஏனென்றால், நமது மதி விதி வழியே செல்லும் இயல்புடையது; "அறிவால் அறிந்த யாவும் அசத்து ஆதல் அறிதி" – என்று உமாபதிசிவம் சிவப்பிரகாசத்தில் அருளிச்செய்திருப்பதால், நமது மதி பசு பாச ஞானங்களால் மட்டுமே விளங்குவது, இறைவனின் குறிக்கோளைப் புரியும் திறன் நமது அறிவுக்குப் போதாது. எனவே தான் நமது மதியின் வழி முயன்றால் விதியை வெல்லவே முடியாது என்பதை இரண்டா வதாக அறிந்து கொள்ள வேண்டும். மூன்றாவதாக அறிய

வேண்டுவது, இறையருளினுல் **“ விதியை வெல்வது எப்படி ? ”** என்பதாகும்

இறையருளேயே நினைந்து, இந்தப் பிறப்பிலேயே ஊழ் வினைப்பயனை ஒழித்து, நம் போன்ற சகலர் வர்க்கத்து ஆன்மாக்கள் உய்தி பெறும் பொருட்டே, இறைவன் அவ்வச் சமயத்தில் அருளாளர்களைத் தோற்றுவித்து, அவர்கள் வாயிலாகப் பல அருளிப்பாடுகளைச் செய்தருளியுள்ளான். இந்த வகையில் சைவ சமயத்தைச் சார்ந்திருக்கும் பொருட்டு நால்வர் பெருமக்களை இங்கு அனுப்பியருளியுள்ளான். அவர்கள் அருளிச் செய்தன எல்லாம் இறைவனுல் கூறப்பட்டன ஆதலின், அவற்றைத் “ திருவாக்கு ”, “ அருள் வாக்கு ” என்று பலவாருகப் போற்றுகின்ருேம். அந்த அருள் வாக்குகளைத் திரும்பத் திரும்ப இடைவிடாமல் தொய்வு ஏற்படாமல் ஓதி வருவோமாயின், நமக்கு நாளடைவில் திருத்தம் ஏற்பட்டு விடும். விடவே, மேலும் வினைப்பயனை ஊட்டுவதை இறைவன் சிறிது சிறிதாகக் குறைத்து, இறுதியில் அறவே நீக்கிவிடுவான். இவ்வுண்மையைக்,

*“ கற்றவர்கள் பணிந்து ஏத்தும் கழுமலத்துள்*
*ஈசன் தன் கழல்மேல், நல்லோர்*
*நற்றுணையாம் பெருந்தன்மை ஞானசம்பந்தன்*
*தான் நயந்து சொன்ன*
*சொற்றுணை ஓர் ஐந்திெெடு ஐந்து இவை*
*வல்லார், தூமலராள் துணைவர் ஆகி,*
*முற்றுலகம் அது ஆண்டு முக்கணுன் அடி*
*சேர முயல்கின்ருரே ”* **(1 - 129 - 11)**

என்று சம்பந்தப்பெருமான் அருளிச் செய்திருப்பதிலிருந்து, எத்தகைய முயற்சியை நாம் மேற்கொள்ள வேண்டும் என்பது இனிதே பெறப்படும். இந்த முயற்சியையே திருவள்ளுவ நாயனுர்,

**“ அறிவறிந்து ஆள்வினை ”** – 618 என்னும் தொடர்களால் கூறியருளினுர் என்க.

இறைவன் திருவருட்டுணையால் ஊழை வெல்ல முடியும் என்பதைத் திருவள்ளுவர்,

**"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவு இன்றித்
தாழாது உஞற்று பவர்"** 620

என்னும் குறட்பாவில் தெளிவுறுத்தியுள்ளார். இதற்குப் பொருள் வருமாறு :

தேவையான பயனைத் தராமல் அலக்கழிக்கும் விதியைத், தளர்வு இன்றி இடைவிடாது முயல்பவர்கள், தமக்குப் பின் புறமாக முதுகாட்டி ஓடும்படி செய்வர்.

இக்குறட்பாவிற்குச் சிறப்புரை வழங்கிய பரிமேலழர்,

"ஊழ் ஒரு காலாக இருகாலாக அல்லது விலக்காமையின் பலகால் முயல்வார், பயன் எய்துவர் என்பார், 'உப்பக்கம் காண்பர்' என்றார்" என்று வழங்கியிருப்பதிலிருந்து, திருவருளை வேண்டி முயற்சி மேற் கொள்ளும் பொழுது, கைமேல் பலன் உடன் கூட வில்லையே என்று தளர்வு எய்திவிடக் கூடாது என்பதும், இடைவிடாமல் முயற்சியைக் கைவிடாது இருக்க வேண்டும் என்பதும் பெறப்படும். படவே, திருவள்ளுவர் சைவ சித்தாந்தத்தின் வினைக்கொள்கையை விளக்கும் வகையிலேயே தம் நூலைச் செய்திருக்கிறார் என்பது தெளிவாகும். இந்த முறையில் நோக்கினுலே, வினைக் கொள்கை பற்றிய திருவள்ளுவப் பெருந்தகையின் உள்ளக் கிடக்கை தெள்ளிதின் அறியப்படும்.

## மாயா மல இயல்பு – மருளானும் மாணுப் பிறப்பு 351

ஆணவ மலத்தை "இருள்" என்னும் சொல்லால் குறிப்பிட்ட திருவள்ளுவ நாயனுர், மாயாமலத்தை "**மருள்**" என்னும் சொல்லால் கூறியருளியுள்ளார்.

**"பொருள் அல்ல வற்றைப் பொருள்என்று உணரும்
மருளான் ஆம் மாணுப் பிறப்பு"** 351

என்னும் குறட்பா, பிறப்பு நிலையில் உயிர்க்கு உள்ள விபரீத உணர்வைக் குறித்துப் பேசுகின்றது. இதன் பொருள் வருமாறு:

நிலையான பொருளாக இல்லாதனவற்றை நிலையான பொருள் என்று எண்ணி உணர்கின்ற மயக்குறு அறிவினுலேயே, இன்பம் இல்லாத இந்தப் பிறப்பு உண்டாகிறது.

மருளால் – மயக்க உணர்வால். எத்தகைய மயக்க உணர்வு? நிலையில்லாதவற்றை நிலையானது என்று உணரும் மயக்க உணர்வு. இந்த உலகம், மாயையிலிருந்து தோன்றி நின்று ஒடுங்குவதால், இஃது இன்று போல் என்றும் ஒருபடித்தாய் நிற்காது என்பது சைவசித்தாந்தக் கொள்கை. இதனையே திருவள்ளுவர், "நிலையில்லாத பொருள்" என்கிறார். "**மாணாப் பிறப்பு**" என்றதால், பிறப்பு துன்பம் என்பதும், அப்பிறப்பிற்குக் காரணம் ஆணவம் என்பதும் கூறப்பட்டது. மேலும்,

**"இருள் நீங்கி இன்பம் பயக்கும், மருள் நீங்கி**
**மாசறு காட்சி யவர்க்கு"** *352*

என்னும் குறட்பாவில் வரும் "இருள்" ஆணவ மலத்தையும், "மருள்" மாயா மலத்தையும் குறிக்கும், இக்குறட்பாவிற்குப் பொருள் வருமாறு:

நிலையில்லாதனவற்றை நிலையானது என்று உணரும் மயக்க உணர்வு நீங்கப் பெற்று, உள்ளதை உள்ளவாறு உணரும் மெய்யுணர்வு உடையவர்க்கு, ஆணவமலப்பற்று நீங்கப்பெற்று அதன் பயனாகப் பிறப்பு நீங்கலுற்று, அந்த மெய்யுணர்வு அவர்க்கு வீட்டின்பத்தைக் கொடுக்கும்.

"மருளானும் மாணாப் பிறப்பு" என்னும் சொற்றொடர் ஆட்சி, "**நன்றியில் செல்வம்**" என்னும் அதிகாரத்திலும் வருகிறது. அந்தக் குறட்பா வருமாறு:

**"பொருளான் ஆம் எல்லாம் என்று ஈயாது இவறும்**
**மருளான் ஆம் மாணாப் பிறப்பு"** ***1002***

இதன் பொருள் வருமாறு:

உலகத்தில் பணம் ஒன்றினாலேயே எல்லாவற்றையும் சாதித்து விடலாம் என்று நினைத்து, அதனைச் சம்பாதித்துப் பிறர்க்கு ஈயாமல், பணப்பற்றுடன் வாழ்கின்ற மயக்க உணர்வினால், நிறைவு இல்லாத பேய்ப் பிறப்பு உண்டாகும். (ஆகவே, ஈயாத உலோபிகள் அடுத்த பிறப்பில மனிதராகப் பிறப்பது இல்லை).

இந்தக் குறட்பாவிலும் "மருள்" என்ற சொல், மயக்க உணர்வு என்னும் பொருளிலேயே ஆளப்பட்டிருப்பதைக் காணலாம்.

உலகம் நிலை உடையது என்னும் மயக்க உணர்வு எனபதையே " **மருள்** " என்னும் சொல் ஆளப்படுவதை, இன்னும் ஓர் குறட்பாவில் வைத்துக் காணலாம். அந்தக் குறட்பா வருமாறு ;

**" பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார்' மருள் தீர்ந்த**
**மாசறு காட்சி யவர்க்கு "** *199*

இதற்குப் பொருள் வருமாறு:

மயக்க உணர்வு நீங்கப்பெற்ற தூய அறிவினை உடையவர் பயனற்ற சொற்களைத் தன்னை மறந்தும் சொல்லமாட்டார்.

இவ்வாறு மாயாமலத்தின் இயல்பைத் திருவள்ளுவர் ' **மருள்** ' என்னும் சொல்லில் வைத்துத் தெளிவுறத்துகின்றார்.

**மறுபிறப்பு உண்மை – வேண்டும் பிறவாமை 362**

இந்தியப் பெரு நாட்டில் தோன்றிய எல்லா மதங்களும் மறுபிறப்பு உண்டு என்னும் பேருண்மையை ஏற்றுக் கொண்டுள்ளன. ஆனால், வெளிநாட்டிலிருந்து இந்திய நாட்டிற்கு வந்துள்ள கிறித்துவம் இசுலாமியம் முதலிய மதங்கள், மறு பிறப்பு உண்மையை ஒப்புக் கொள்ளவில்லை.

சித்தாந்த சைவம், ஒருவன் இறைவனிடம் ஏதவது வேண்டு கிறான் என்றால், அவ்வேண்டுதல் மீண்டும் பிறவாமையாகவே இருக்க வேண்டும் என்று கூறுகிறது. இதனைத் திருக்களிற்றுப் படியார்,

**" வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்**
**வேண்டின், அஃது ஒன்றுமே வேண்டுவது - வேண்டினது**
**வேண்டாமை வேண்டவரும் என்றமையால், வேண்டிடுக**
**வேண்டாமை வேண்டும், அவன் பால் "** **40**

என்று பேசுகின்றது. இந்தச் சைவ சித்தாந்த சாத்திர வெண்பா, குறட்பாவை அப்படியே எடுத்து ஆண்டிருப்பதைக் காணலாம். அந்தக் குறட்பா வருமாறு:

**" வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை; மற்றது**
**வேண்டாமை வேண்ட வரும் "** **362**

இதன் பொருள் வருமாறு :

பிறப்பு, துன்பம் என்பதை அறிந்தவன் ஒன்றை விரும்புவான் ஆயின், மீண்டும் வந்து இந்த உலகத்தில் பிறந்து விடக் கூடாது என்பதையே விரும்புவான், அந்தப் பிறவாமைதான் எந்த ஒரு பொருளையும் விரும்பாமையை அவனுக்கு ஏற்படுத்தும்.

எனவேதான், எதனையும் விரும்பாமை ஆகிய பெருஞ் செல்வத்தை விடச் சிறந்தது வேறு இல்லை என்கிறார் திருவள்ளுவர்; இதனை,

**"வேண்டாமை அன்ன விழுச் செல்வம் ஈண்டு இல்லை;**
**யாண்டும் அஃது ஒப்பது இல்"** *363*

மறுபிறப்பு உண்மையை வலியுறுத்தித் திருவள்ளுவர்.

**"உறங்குவது போலும் சாக்காடு; உறங்கி**
**விழிப்பது போலும் பிறப்பு"** *339*

என்னும் குறட்பாவில் பேசுகின்றார். இதற்குப் பொருள் வருமாறு :

ஒருவனுக்கு இறப்பு வருவது, உறக்கம் வருவதைப் போன்றது; பிறப்பு வருவது, உறங்கிய பிறகு விழிப்பு வருவதைப் போன்றதாகும், இக்குறட்பாவிற்குச் சிறப்புரை வழங்கிய பரிமேலழகர்.

"உறங்குதலும் விழித்தலும் உயிர்கட்கு இயல்பாய்க் கடிதின் மாறி மாறி வருகின்றாற் போலச், சாக்காடும் பிறப்பும் இயல்பாய்க் கடிதின் மாறி மாறி வரும் என்பது கருத்து" (கடிதின் – விரைவில்)

பிறப்பும் இறப்பும் விரைவில் மாறி மாறி வரும் என்பது இக்குறட் பாவினால் பெறப்பட்டது; படவே, திருவள்ளுவர் மறு பிறப்பு உண்மையை வலியுறுத்தியுள்ளார் என்பது. தெளிவாகிறது.

## சாதனம் (சமய ஒழுக்கம்) - அறம் செய்க – 36

சைவ சித்தாந்தம், இந்தப் பிறவியிலேயே வீடு பேறு பெறுவதற்கான நெறிப்பாடுகளை வகுத்துள்ளது, அவற்றைச் சமய ஒழுக்கம் என்பர். இதனை "இழுக்கிலா அறங்கள்"

என்று சிவஞான சித்தியார் பேசுகின்றது, அந்தச் சித்தியார்ச் செய்யுள் வருமாறு :

**ஒழுக்கம், அன்பு, அருள், ஆசாரம்,**
**உபசாரம், உறவு, சீலம்,**
**வழுக்கிலாத் தவம், தானங்கள்,**
**வந்தித்தல், வணங்கல், வாய்மை,**
**அழுக்கிலாத் துறவு, அடக்கம்,**
**அறிவொடு அர்ச்சித்தல் ஆதி**
**இழுக்கிலா அறங்கள் ஆனல்**
**இரங்குவான் பணி அறங்கள்** 113

இத்தகு அறங்கள், உயிர்கள் உய்யும் பொருட்டு கருணை கூர்ந்து இறைவனால் விதிக்கப்பட்டவை ஆகும், இந்தச் சிவஞான சித்தியார்ச் செய்யுளில் உள்ள சொல் ஒவ்வொன்றும், திருக்குறட் தலைப்பிலிருந்து மேற்கொள்ளப்பட்டது ஆகும், அதன் விபரம் வருமாறு :

| | சித்தியார்ச் சொல் | | இயைபுடைய திருக்குறள் அதிகாரங்கள் – (எண்) |
|---|---|---|---|
| 1. | ஒழுக்கம் | — | ஒழுக்கம் உடைமை - 14 |
| 2. | அன்பு | — | அன்புடைமை – 8 |
| 3. | அருள் | — | அருளுடைமை – 25 |
| 4. | ஆசாரம் | — | ஒப்புரவு அறிதல் – 22 |
| 5. | உபசாரம் | — | விருந் தோம்பல் - 9 |
| 6. | உறவு | — | நட்பு - 79 |
| 7. | சீலம் | — | சான்ருண்மை – 99 |
| 8. | வழுக்கிலாத் தவம் | — | தவம் – 27 |
| 9. | தானங்கள் | — | ஈகை – 23 |
| 10. | வந்தித்தல் | — | பெரியாரைத் துணைக் கோடல் - 45 |
| 11. | வணங்கல் | — | மானம் – 97 பெருமை 98 |
| 12. | வாய்மை | — | வாய்மை – 30 |
| 13. | அழுக்கிலாத் துறவு | } | துறவு – 35<br>பிறனில் விழையாமை - 15 |
| 14. | அடக்கம் | ... ... | அடக்கம் உடைமை – 13 |
| 15. | அறிவு | .... .... | அறிவுடைமை – 43 |
| 16. | அர்ச்சித்தல் | .... ... | கடவுள் வாழ்த்து – 1 |

இனி, திருக்குறள் அதிகாரத் தலைப்பில் நின்று, சைவ சித்தாந்தம் கொள்ளும் சாதனங்களைக் குறித்துச் சிந்திப்போம்.

**1. ஒழுக்கம் உடைமை - 14**

உயிரினும் மேலானதாகப் பாதுகாக்கப் படுவது ஒழுக்கம். ஒருவன் உயர்ந்த குடியில் பிறந்தவனு அல்லது இழிந்த குடியில் பிறந்தவனு என்பதைத் தீர்மானிப்பது ஒழுக்கமே ஆகும், ஒழுக்கம் ஒருவனை உயர்த்தும்; ஒழுக்கம் தவறினல் அது பெருங்குற்றம் ( பழி ) ஆகும், ஒழுக்கம் உடையவர் தன்னை மறந்து, பிறர்க்குத் தீயன விளைவிக்கும் சொற்களைச் சொல்ல மாட்டார், எவ்வளவு படித்தவர் ஆயினும், ஒழுக்கம் இல்லாதவர் ஆயின், அவர் கற்றவரும் அல்லர்; அறிவுடையவருமல்லர், எனவே அறங்களுள் ஒழுக்கம் முதன்மையாகக் கொள்ளப்படுகிறது

**2, அன்புடைமை - 8**

பிறரிடத்தில் இரக்கம் ஏற்படுவதற்கு அன்பு உடைமையே ஆதாரம் ஆகும். நல்லனவற்றிற்கு மட்டும் அன்பு துணையாவதில்லை; பகைமையை மறப்பதற்கும் அன்பு துணை செய்யும். **உள்ளத்தில் எப்போதும் அன்பு என்னும் நிலத்தடி நீர் ஊறிக் கொண்டே இருக்க வேண்டும்;** இல்லையேல் கொடிய பாலை வனத்தில் நிற்கும் ஈரம் வற்றிய மரம் போல், வாழ்க்கை பயனற்றது ஆகிவிடும். ஆகவே, உயிரின் நிலை அன்பின் வழியிலேயே நிற்கிறது. " **அன்பே சிவமாவது** " என்று திருமந்திரம் ஓதுவதற்கு ஏற்ப, " **உயிர்க்கு அன்போடு இயைந்த வழக்கு** " என்கிறது திருக்குறள்,

**3. அருளுடைமை - 25**

எல்லா உயிர்களிடத்திலும் இயல்பாகச் செல்லும் கருணையே அருளாகும். எல்லாச் செல்வங்களிலும் பெருஞ் செல்வம் அருளே ஆகும். அனைத்து நெறிகளிலும் உயர்ந்த நெறி அருள் நெறியே ஆகும். அருளுடையவர்கள் நரகம் புகுவதில்லை; அவர்களுக்கு அச்சமே வருவதில்லை; இன்பமே எந்நாளும், துன்பம் இல்லை.

**" அருள் என்னும் அன்பீன் குழவி "** **757**

என்னும் குறட்பாத் தொடர்,

என்னும் சித்தியார்த் தொடரை நினைவுறுத்துகின்றது. எனவே அருள் என்பது, சிவபெருமானின் திருவருள் ஆகிய கருணை வடிவையே குறிக்கும்.

## 4. ஒப்புரவு அறிதல் – 22

உலக நடையினை அறிந்து அதற்கு ஏற்ப ஒழுகுவதே ஒப்புரவு ஆகும். பிறர்க்கு உதவும் பொழுது எந்தவிதக் கைம்மாறும் ( பிரதியுபகாரம் ) கருதாது உதவ வேண்டும். ஈட்டிய பொருளை எல்லாம் தக்கவர்க்கு உதவுவதே ஒப்புரவு; **வேளாண் பண்பு** வேளாளன் என்பவன் ஒப்புரவு உடையவனே ஆவன். ஒப்புரவு உடையவரைப் போல தேவலோகத்தில் ஒருவரும் இல்லை. ஒப்புரவுப் பண்புடன் வாழ்பவனே உயிரோடு வாழ்பவன் ஆவன்; அப்பண்பு இல்லாதவன், உயிருடன் உலாவும் பொழுதே செத்தவனாகக் கருதப்படுவான். ஊரில் உள்ள குளத்தில் நீர் நிறைந்து இருந்தால், அஃது எப்படிப் பலர்க்கும் பயன்படுமோ, அதுபோல அறிவு நிறைந்த ஒப்புரவாளனின் பெருஞ்செல்வம் உலகில் உள்ள அனைவருக்கும் உதவும். ஒப்புரவுடையவன் எப்போது வருந்துவான் என்றால், தன்னால் பிறர்க்கு உதவி செய்யமுடியாத நிலை ஏற்படும் போதே ஆகும்; தன்னை விற்றுவது பிறர்க்கு உதவுவதால் வரும் கேட்டையும் அவன் பொருட்படுத்த மாட்டான்.

## 5. விருந்தோம்பல் - 9

விருந்தினர் இரு வகையினர். அறிமுகம் இல்லாமல் புதியராய் வருபவர்; முன்பே அறிமுகமானவர், இல்வாழ்வின் நோக்கமே விருந்தினரைக் காத்தலே ஆகும். தன் வீட்டுக்கு வந்த விருந்தினரை வெளியே வைத்துவிட்டு, அமுதமே ஆயினும் தான் உண்பது முறை ஆகாது, நாள்தோறும் விருந்தினரை உபசரித்து வந்தால், வறுமையால் வாடும் நிலை வராது, ஏனென்றால், விருந்து உபசரிப்பவரின வீட்டில் திருமகள் மனமகிழ்ச்சியுடன் தங்குகிறாள், விருந்தைப் பேணுபவர் மறு பிறப்பில் தேவர் பதவியை எய்தப் பெறுவர், வசதி படைத்தவர்கள் விருந்தினைப் பேணாது இருந்தால், அஃது அறியாமையே ஆகும், விருந்தினர் முகம் சிறிதுகூடக் கோணாது பேண வேண்டும்.

## 6. நட்பு – 79

உலகில் உள்ளவர்களோடு, பல்வேறு செயற்பாடுகளில் நாம் உறவு கொள்ளும் நிலையே நட்பு ஆகும். நட்பு பற்றி திருவள்ளுவர் 79 முதல் 95 வரையுள்ள பதினேழு அதிகாரங்களில் யார் யாரோடு நாம் எப்படி எப்படி உறவு கொள்ள வேண்டும் என்பதைத் தெளிவுறுத்துகின்ருர், " நட்பு " என்னும் உறவுக்கு, ஒதுக்கியிருக்கின்ற அளவு, வேறு எந்தத் தலைப்புக்கும் இவ்வளவு குறட்பாக்களை அவர் ஒதுக்கியது இல்லை என்பது கருத்தில் கொள்ளத்தக்கது, மனித வாழ்வில் உயர்வு தாழ்வுகளை விளைவிப்பது இந்த நட்பே ஆகும், ஆகவேதான்;

" **நட்பின் செயற்கு அரிய யாவுள ? -** **781**

என்ருர். அறிவுடையாரோடு நட்பு கொண்டால், அது வளர்பிறைபோல் வளரும்; அறிவற்றவரோடு கொள்ளும் நட்பு தேய்பிறை போல் தேயும், ஒரு நூலின் நயம் அதனைப் பலமுறை கற்கும் பொழுதே இன்பம் செய்யும்; அதுபோல, பண்பு உடையவரோடு பழகப் பழகவே, அவரோடு உள்ள தொடர்பு இன்பம் செய்யும், சிரித்துப் பேசி மகிழ்வதன்று நட்பு; நண்பர் தகாதன செய்யும் பொழுது கண்டித்துப் புத்தி சொல்லவும் வேண்டும், நட்புக்கு அடிக்கடி சந்திக்கத் தேவை இல்லை; உள்ளத்தில் உறவு உரிமை இருந்தால் போதும்› இந்த அதிகாரத்தில் உள்ள

" **உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே**
**இடுக்கண் களைவதாம் நட்பு** " **788**

என்னும் குறட்பாவில், ஆடை குலைந்தவனது கை, குலைந்த பொழுதே சென்று மானத்தைக் காப்பது போல் நண்பனுக்குத் துன்பம் வந்த பொழுது சென்று உதவுவதே நட்புக்கு இலக்கணம் என்று திருவள்ளுவர் கூறுகிருர், சமணர்கள் எனப்படும் அமணர்கள் ஆடை உடுக்கும் பழக்கம் இல்லாதவர்கள்; எனவே அவர்களுக்கு மானத்தைக்காப்பது என்பது தெரியாது; ஆகவே நட்பின் அருமையையும் அவர்கள் அறியமாட்டார், எனவே சமண் நெறி குறள் நெறிக்குப் புறம்பானது என்பது புலப்படும்.

நட்பிற்கு இருப்பிடம் தளராமல் நின்று தாங்குவதே ஆகும், நண்பர்கள் இருவருக்குள் எந்த வேற்றுமையும் இருப்பதில்லை;

இருந்தால் அது நட்பு ஆகாது, எத்தகைய நட்பைக் கொள்ள வேண்டும், எவரோடெல்லாம் நட்பு கொள்ளக் கூடாது, பழகிய நட்பின் இயல்பு எத்தகையது, தீயவரோடு நட்பு கொள்வதால் என்னென்ன தீமை ஏற்படும் என்பன போன்ற பல்வேறு கோணங்களில் நின்று நட்பு என்னும் உறவு பற்றித் திருவள்ளுவர், திரட்டித் தெருட்டியிருக்கும் செய்திகள் ஏராளம்! ஏராளம்!!

**7. சான்றாண்மை : - 99**

பெருமைக்குரிய குணங்கள் பலவற்றையும் தொகுத்துக் கொண்டு நிற்பது சான்றாண்மைப் பண்பு ஆகும். பிறர் குற்றத்தைப் பெரிது படுத்தாத பெருங்குணமே சான்றாண்மை ஆகும். சான்றாண்மையைத் தாங்கும் தூண்கள் ஐந்து; அவை வருமாறு: அன்புடைமை, ஒப்புரவு, கண்ணோட்டம் (தாட்சண்யம்), வாய்மை, நாண் (தகாதன செய்ய வெட்கப் படுதல்) என்பன. ஒருவர் சான்றோர் என்பதை எப்படி அறிவது ? தம்மைவிடத் தரத்தில் தாழ்ந்தவரிடத்திலும் தமது தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டும்; அதுவே சான்றோர் என்பதற்குச் சான்றாகும். தமக்குத் தீமை செய்தவனுக்கு நன்மை செய்வது உயர்ந்த பண்புதான்; ஆயினும் தமக்குத் தீமை செய்தவர்க்கும் நன்மை செய்யாமல் இருந்தால், அவரைச் சான்றோர் என்று கூறவே முடியாது, ஏனென்றால், இந்த இயல்பு அவரிடம் இல்லை என்றால், அவரைச் சான்றோர் என்று கூறுவதால் ஒரு பயனும் இல்லை, சான்றாண்மைப் பண்பு உடையவர், வறுமை உடையவராய் இருந்தால், அஃது அவருக்கு இழிவு அன்று, நிலம் எல்லோரையும் பொறுமையுடன் தாங்கி நிற்பது போல, சான்றோர் எக்காலத்தும் சான்றாண்மை குன்றாது இருப்பர், எனவே, சான்றோர் என்றும் நிறைவுடையவர்

**8. தவம் 27**

மனம், ஐம்பொறிகளின் வழியே போகாமல் நிற்கும் பொருட்டுத், தன்னை ஒறுத்துப் பிற உயிர்களைப் பாதுகாத்தலே தவம் எனப்படும், தவம் உடையவர் என்றும் இரக்கத்துடனேயே இருப்பர், தவத்திற்கு வடிவம் யாது? தனக்கு வரும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்வதும், பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாது இருத்தலுமே தவத்திற்கு இலக்கணம் ஆகும், முற் பிறப்பில்

தவ முயற்சி மேற்கொண்டவர்க்கே இப்பிறப்பில் தவச் செயல் கைகூடும், எனவே, மறு பிறப்பில் தவநிலை வேண்டும் என்று விரும்புபவர், இந்தப் பிறப்பில் தவமுயற்சியை மேற் கொள்ள வேண்டும்.

தவம் செய்வது என்றால் என்ன? தவநிலையில் இருப்பவர், தமது கடமை என்ன என்பதைக் கருத்தில் கொண்டு, வீடுபேற்றினையே நோக்கமாகக் கொண்டு ஒழுக வேண்டும்; அதைவிட்டு ஆசைப்பட்டு சிற்றின்பத்தில் ஈடுபடுவர் தவசி ஆகார். ஆகவே, தன்னைப் பொறிபுலன்களினின்றும் நீங்கப் பெற்றவனை, உலகில் உள்ளவர்கள் எல்லாம் தொழுவார்கள் தவ வலிமை உடையவர்கள், எவராலும் வெல்ல முடியாத இயமனையும் வெல்வர், உலகத்தில் செல்வம் உடையவர் சிலரே உளர்; வறுமை உடையவரே பலராய் உளர். இதற்கு என்ன காரணம்? தவம் செய்பவர் சிலராகவும், அது செய்யாதவர் பலராகவும் இருப்பத னாலேயே ஆகும். ஆகவே, தவம் முயல்க

## 9. ஈகை - 23

வறுமையில் இருப்பவர்கள் யாசிக்கும் பொழுது இல்லை என்று சொல்லாமல், கைம்மாறு கருதாமல் கொடுப்பதே ஈகை ஆகும். ஆகவே வறியவராய் இல்லாதவர்க்கு, ஏதாவது ஒருபயன் கருதிக் கொடுப்பது ஈகை ஆகாது எந்த வகையில் நோக்கினாலும் யாசிப்பது இழிவே ஆகும்; ஈகைப் பண்பு உடையவர்கள் வீடுபேறு ( முத்தி ) அடை முடியாது என்று சொன்னாலும். ஈகையே உயர்வாகும், நல்ல குலத்தில் உதித்தவர்கள், தாம் வறுமை உடையவர் என்று சொல்லி எவரிடமும் யாசிக்கும் இழிசெயலைச் செய்யமாட்டார். அவ்வாறு தம்மிடம் சொல்பவ ருக்கு மறுக்காமல் ஈவர். எல்லா ஆற்றல்களிலும் பெரிய ஆற்றல், தமக்கு உற்ற பசியைப் பொறுப்பதே ஆகும் ; அதனினும் பெரிய ஆற்றல், பிறரது பசியைப் போக்குவதாகும், வறியவரது பசியைப் போக்குபவனுடைய பொருளை வைக்கும் இடம் அந்த அறமே ஆகும், தம்மிடம் உள்ள பொருளைப் பிறர்க்குக் கொடுத்து அதனால் பெறப்படும் இன்பத்தை, இரக்கம் அற்றவர் பெறமுடியாது. சாவைவிடக் கொடுந்துன்பம் வேறு இல்லை; அதனைவிடப் பெரிய துன்பம், வறியவர்க்கு ஒன்று கொடுக்க முடியாமல் இருப்பதுவே ஆகும்.

## 10. பெரியாரைத் துணைக்கோடல் – 45

நம்மை நல்வழிப்படுத்தும் பேரறிவு உடையவரை, நமக்குத் துணையாக எப்போதும் கொண்டிருக்க வேண்டும், நமக்கு ஏற்படும் துன்பங்களைப் போக்கி, அவை வராதபடி முன்பே நம்மைக் காக்கவல்ல பெரியார் துணை வேண்டும்.

நம்மைவிட அறிவிலும் ஆற்றலிலும் உயர்ந்த பெரியவர்களை உவந்து உறவினராகக் கொள்வது, பெறற்கு அரிய பேறுகளில் எல்லாம் அரியது ஆகும்; ஆகவே அஃது எல்லா வலிமையையும் நமக்குத் தரும், தரவே பகைவரால் நம்மை ஏதும் செய்துவிட முடியாது. நாம் தவறான பாதையில் செல்லும் பொழுது, நம்மை நெருங்கி நமக்கு உறுதியான வழியைக் காட்டும் பெரியவர் ஒருவர் இல்லாவிட்டால், நம்மைக் கெடுப்பதற்குப் பிறர் வேண்டுவதில்லை; நாமே கெட்டுவிடுவோம், எனவே பெரியவர்களின் நெருங்கிய தொடர்பு நமக்கு இன்றியமையாத தாகும்.

## 11. பெருமை - 98 & மானம் 97

வணக்கம் என்பது, எல்லோரிடத்திலும் பணிவுடையவராய் இருப்பதாகும். ஆகவே தான் **" எல்லார்க்கும் நன்றாம் பணிதல் 125 "** என்றார் திருவள்ளுவர். இதற்குப் பணிவாய் இருப்பது எல்லோருக்கும நல்லதே ஆகும் என்று பரிமேலழகர் பொருள் கூறுகிறார். பெருமைக்கு உரியவர்கள் எக்காலத்தும் தற்பெருமை இன்றிப் பணிவுடையவராகவே இருப்பர். இதனைத் திருவள்ளுவர், **" பணியுமாம் என்றும் பெருமை " – 978** என்கிறார். உயர்ந்த குலத்தில் பிறந்தவர்கள் எல்லோரிடத்திலும் வணக்கத்துடன் பழகுவர். இதனைக் **" குலம் வேண்டின் வேண்டுக யார்க்கும் பணிவு " – 960** என்கிறார் பெருந்தகை. செல்வந்தர்களாக இருப்பவர்களுக்கு, அந்தச் செல்வம் (பணிவு) மேலும் உயர்வைச் செய்யும்; எனவே அவர்கள் பணிவுடையராய் வாழ்வது இன்றியமையாதது. **" பெருக்கத்து வேண்டும் பணிதல் " – 963** என்பார் பெருந்தகை. பிறர் கூறுவதை நுட்பமாகக் கேட்க வேண்டும்; அப்படி இல்லாதவர் பணிவான முறையில் எதையும் சொல்ல முடியாதவர் ஆவர். இதனை,

"நுணங்கிய கேள்வியர் அல்லார், வணங்கிய
வாயினர் ஆதல் அரிது" 419

என்றார் திருவள்ளுவ நாயனார்.

பிற உயிர்க்குத் தீங்கு சிறிதும் விளைவிக்காத சொற்களைச் சொல்வதே மெய்மை ஆகும். பிறிதோர் உயிர்க்குக் குற்றமற்ற நன்மையை விளைவிக்கும் ஆயின், பொய் கூடச் சொல்லலாம்; அப்பொய், வாய்மைக்கு இணையாகும். மனதறியப் பொய் சொல்லக் கூடாது; அப்படிச் சொன்னால், மனச்சாட்சியே, சொன்னவனுக்குத் தண்டனை வழங்கும். பொய் சொல்லக் கூடாது என்னும் எண்ணத்தோடு நடந்தால், பெரியவர்கள் எல்லாம் போற்றுவர். பொய் பேசாமல் இருப்பதைத் துணிந்து இடைவிடாமல் ஒருவன் கடைப்பிடிப்பானாயின், அவன் பிற அறம் ஏதும் செய்யத்தேவை இல்லை. ஒருவன் மனத்தூய்மை உடையனா என்பதை அவன் சொல்லும் சொற்களைக் கொண்டு அறிந்து விடலாம். மனத்தின் இருளைப் போக்கும் பொய்யா விளக்கே, சூரியன், சந்திரன் முதலிய புற விளக்குகளிலும் சிறந்தாகும். "நான் கண்ட ஞான நூல்களுள், வாய்மையை விடப் பெரிய அறம் வேறு உள்ளதாகக் கண்டதில்லை" என்று திருவள்ளுவர் கூறுகிறார்.

## 13 துறவு - 35

உலகப்பற்று ஆகிய புறப்பற்றும், உயிர்ப்பற்று ஆகிய அகப்பற்றும் அற்று இருப்பதே துறவு ஆகும். ஒருவன் எந்த எந்தப் பொருள் மீது உள்ள பற்றை விடுகிறானோ, அவனுக்கு அந்தந்தப் பொருளால் துன்பம் இல்லை. பிறப்பு அறுபட வேண்டும் என்று எண்ணி இருப்பவனுக்கு, உடம்பு தேவை இல்லை; எனவே உடம்போடு தொடர்பு உடைய எல்லாவற்றையும் விட்டு நீங்கிவிட வேண்டும். யான், எனது என்னும் செருக்கு அறுபட்டால், சிவலோகம் சித்திக்கும். இருவகைப் பற்றையும் விடாமல் பற்றிக் கொண்டு இருப்பவரைத் துன்பங்கள் விடாமல் இறுகப் பற்றிக்கொள்ளும். எனவே வீடுபேற்றை விரும்புபவர் எல்லாவற்றையும் முற்றத் துறந்துவிட வேண்டும். பற்று இருக்கும் வரை பிறப்பு உண்டு. எனவே பற்றை அறுக்க வேண்டும். எப்படி அறுப்பது? பற்றற்றான் ஆகிய சிவபெருமானின் திருவருளைப் பற்றி நின்றால், பற்றை அறுக்கலாம்; அஃதன்றி

பற்றை அறுப்பதற்கு வேறு வழி இல்லை. இதுவரை பொதுவாகப் பற்றறுப்பது பற்றிக் கூறப்பட்டது.

இல்லறத்தில் இருப்பவன் பிறர் மனைவியை விரும்பாமல் இருப்பதே, பற்றற்று இருப்பதாகும். "பிறனில் விழையாமை" என்னும் அதிகாரத்தில், திருவள்ளுவர் ஆண் மகனுக்கும் கற்பு உண்டு என்பதைப் பேசுகிறார். அஃதாவது, பிறனொருவன் மனைவியை மனம்கொள்ளாதவனே "ஆண்" என்ற சொற்கு உரியவன்; அவன் அவ்வாறு இருப்பது அவனுக்குப் பெருந் தகைமை மட்டும் அன்று; அஃதே அற நூல்களில் சொல்லப்பட்ட ஒழுக்கங்களில எல்லாம் சிறந்த ஒழுக்கம் ஆகும்; ஆகவே அவன் அறத்திற்கு மாறான பாவங்களைச் செய்தாலும், இந்த ஓர் அறம் அவனைக் காக்கும்.

## 14. அடக்கம் உடைமை – 13

மனம் மொழி மெய்களால், தீய வழிகளில் செல்லாமல் அடங்கி இருப்பதே அடக்கம் ஆகும். அடக்கம் ஒருவனைத் தேவர் உலகத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கும். எனவே பொருளைப் பேணிப் பாதுகாப்பது போல் அடக்கத்தைக் காக்க வேண்டும்; அதைவிட உயிர்க்கு உயர்ந்த செல்வம் வேறு இல்லை. பொறி புலன்களில் மயங்காமல் அடங்கி இருப்பவனது உயர்வு, மலையை விடப் பெரியது ஆகும். அடங்கி இருப்பதே அறிவு உடைய வனுக்கு அழகு. செல்வந்தன் அடங்கி இருந்தால், அவனுக்கு வேறொரு செல்வம் சேர்கிறது. ஒரு பிறப்பில் ஒருவன், ஆமையைப்போல ஐம்பொறிகளை அடக்கி வாழ்வானாயின், வரும் ஏழுபிறப்புக்களிலும், இந்த அடக்கம் அவனுக்கு அரணாக அமையும். எதை அடக்காவிட்டாலும் நாக்கை அடக்க வேண்டும்; அவ்வாறு நாவடக்கம் இன்றிப் பேசினால், சொற் குற்றம் ஏற்பட்டுத் துன்பப் பட நேரும். தீயினால் சுட்ட புண், உடம்பில் இருந்தாலும் மனம் அதை மறந்து விடும்; ஆனால் நாவினால் சொன்ன தீய சொல் மனத்தை விட்டு என்றும் அகலாது; அஃது ஆறிய புண்ணின் வடு, உடம்பை விட்டு நீங்காமல் இருப்பதைப் போன்றது, எனவே மனதில் சினம் தோன்றாமல் காத்துக்கொள்ள வேண்டும். படித்த வனுக்கு அழகு மன அடக்கமே.

## 15. அறிவுடைமை - 43

கல்வி அறிவும் கேள்வி ஞானமும் பெற்ற ஒருவன், உண்மை அறிவு உடையவனாக இருக்க வேண்டும், அஃதே அறிவு ஆகும், அத்தகைய அறிவு அவனைப் பல வகைகளில் காக்கும்; அவனுக்கு இறுதி வராமல் காக்கும்; பகைவரிடமிருந்தும் காக்கும். அறிவுக்கு இலக்கணம் யாது? மனம் போன போக்கில் போகாமல், அவ்வாறு போவதால் ஏற்படும் நன்மை தீமைகளை ஆராய்ந்து, தீமையை நீக்கி நன்மையின்பால் செலுத்துவதே அறிவுக்கு இலக்கணமாகும். யார் பேசுகிறார் என்பது முக்கியமன்று; என்ன பேசுகிறார்? அவர் பேச்சில் உண்மை இருக்கிறதா? என்பதை அறியவேண்டும். நாம் பிறரிடம் பேசும்போது, கேட்பவர்கள் எளிதில் மனங்கொள்ளுமாறு சொல்ல வேண்டும்; பிறர் பேசுவதை நாம் கேட்கும் போது, அவர் பேச்சில் உள்ள நுட்பத்தைக் கவனிக்க வேண்டும்.

நாம் எந்தச் சூழ்நிலையில் பழகுகிறோமோ, அந்தச் சூழ்நிலையில் உள்ள வழக்கங்களுக்குக் கட்டுப் பட்டு நடக்க வேண்டும், அஃதே அறிவுடையவனுக்கு அழகாகும், அறிவுடையவர் பின்பு நடக்கப் போவதை முன்பே அறிவார்; அறிவற்றவருக்கு அந்த வாய்ப்பு இல்லை, எதையும் ஒரு முறைக்குப் பலமுறை எண்ணிச் செய்ய வேண்டும், அவ்வாறு எண்ணும் போது தவிர்க்க வேண்டுவனவற்றை அஞ்சாமல் தவிர்க்க வேண்டும்; சில சூழ்நிலைகளில் சிலவற்றைத் தவிர்க்க முடியாமற் போகும்; அப்போது அடங்கி இருக்கவேண்டும், வருமுன் காக்கும் அறிவுடையவருக்கு, நடுக்கம் ஏற்படும் அளவுக்குத் துன்பம்ஏதும் வராது. எனவே, அறிவு உடையவர், பிறிது ஒன்று இல்லாதவர் ஆயினும், எல்லாவற்றையும் உடையவர் ஆவர்: அறிவு இல்லாதவர், பிற எல்லாவற்றையும் உடையவர் ஆயினும், ஒன்றும் இல்லாதவரே ஆவர். இவ்வாறு கூறுவதற்குக் காரணம், எல்லாவசதிகளையும் உடையவர் அவற்றைப் பயன்படுத்தும் அறிவு இல்லாதவராய் இருந்தால் அந்தப் பொருள்கள் இருந்தும் அவருக்கு அவற்றால் ஒருபயனும் இல்லை என்பதனாலேயே ஆகும்.

## 16. கடவுள் வாழ்த்து – 1

எத்தனை நூல்களை எவ்வளவு கற்றும் இறைவழிபாடு செய்யா விட்டால், படித்த படிப்பெல்லாம் பாழே ஆகும். இறைவனை உள்ளத்தாமரையில் வைத்து மறவாமல் வழிபட வேண்டும்.

அவ்வாறு வழிபடும் பொழுது விருப்பு வெறுப்பற்ற நடுவு நிலை உணர்வு வளரும்; அதன் பயனாகத் துன்பம் இல்லாமல் வாழலாம். அருளாளர்களின் நூல்களில் உள்ளவாறு இறைவன் புகழை விரும்பிப் போற்ற வேண்டும். அந்நிலையில் உயிர்க்குள்ள அறியாமை நீங்கும்; வினைத் துன்பமும் நீங்கும், இறை வழிபாட்டினால் ஐம்புல அடக்கம் ஏற்படும்; ஒழுக்கம் உண்டாகும். இறைவழிபாட்டினால் அன்றி வேறு எந்த வகையிலும் கவலை தீராது; **"எண்குணத்தான் தாளை வணங்காத்தலை (கள்) குணம் இல** " 9 என்று நாயனார் அருளிச்செய்தமையால், சிவபெருமானை யின்றி, பிறதெய்வங்களை வழிபடுபவர்கள், வழிபாட்டின் பயனை அடைய முடியாது என்பது தெளியப்படும். பிறவிக் கடலில் நீந்திக் கரை சேர்வதற்கு, இறைவழிபாடு ஒன்றே வழி ஆகும், ஆகவே இறைவன் திருவடியையே எந்நேரமும் நினைந்து இருக்க வேண்டும். அஃது ஒன்றே நம்மை ஈடேற்றும்., வீடு பேற்றையும் தரும்.

இதுவரை சிந்திக்கப்பட்டவை, சிவஞான சித்தியாரில் தெரிவிக்கப்பட்ட வாறே ஆகும். இவற்றைத் தவிர திருக்குறளில் சொல்லப்பட்ட அனைத்து அறங்களும் கடைப்பிடிக்கத் தக்கனவே ஆகும். இவ்வுண்மையைச் சிவஞான சித்தியாரில் "அர்ச்சித்தல் ஆதி இழுக்கிலா அறங்கள்" என்று கூறியிருப்பதிலிருந்து அறியலாம். "ஆதி" என்பது "முதலிய" என்னும் பொருளை உடையது. எனவே, திருக்குறளில் கூறப்பட்டுள்ள அறங்கள் அனைத்துமே ஒவ்வொரு சித்தாந்த சைவரும் கடைப்பிடிக்க வேண்டிய சமய ஒழுக்கமே ஆகும். எனவேதான் பெருந்தகை "**அறம் செய்க**" 36 என்றருளிச் செய்தார்.

சைவ சித்தாந்தம், நான்கு சமய நெறிப்பாடுகளை வகுத்துள்ளது. அவை சரியை கிரியை யோகம் ஞானம் என்பன ஆகும். இவற்றை ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்று சாத்திரங்கள் பேசுகின்றன. **ஞானத்தில் சரியை** என்பது, ஞான சாத்திரப் பொருளைக் குருவிடம் **கேட்டல்** ஆகும். இதனைத் திருவள்ளுவர்,

**"கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார், தலைப்படுவர்**
**மற்று ஈண்டு வாரா நெறி"** *356*

என்னும் குறட்பாவில் கூறுகிறார்.

இதற்குப் பொருள் வருமாறு.

இந்த மகசுட் பிறப்பின் கண்ணே, **உபதேச மொழிகளை அனுபவம் உடைய தேசிகர் பால் கேட்டு**, அதனால் மெய்ப்பொருளை உணர்ந்தவர், மீண்டும் இந்தப் பிறப்பின் கண்ணே, வாராத நெறியை எய்துவர்.

இந்தக் குறட்பாப் பொருளில், "**உபதேச மொழிகளைக் கேட்டல்**" என்று வருவது, இக்குறட்பா "**ஞானத்தில் சரியை ஆகிய கேட்டல்**" என்னும் சாதனம் கூறுவது ஆயிற்று.

**ஞானத்தில் கிரியை** என்பது, கேட்ட உபதேச மொழிகளைக் காரண காரிய இயைபு படுத்தி, எடுத்துக் காட்டுக்களுடன் **சித்தித்தல்** ஆகும். இதனைத் திருவள்ளுவர்,

**"ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின், ஒருதலையாப்**
**பேர்த்துள்ள வேண்டா பிறப்பு"** **357**

என்னும் குறட்பாவில் கூறுகிறார். இதற்குப் பரிமேலழகர் உரை வருமாறு.

அங்ஙனம் **கேட்ட உபதேச மொழிப் பொருளை**, ஒருவன் உள்ளம் அளவைகளாலும் பொருந்துமாற்றானும் **தெளிய ஆராய்ந்து**, அதனால் முதற்பொருளை உணருமாயின் அவனுக்கு மாறிப் பிறப்பு உள்ளதாக நினைக்க வேண்டா.

**ஞானத்தில் யோகம்** என்பது, கேட்டுச் சிந்தித்த பொருளைத் தெளிதல் ஆகும். இதனைத் திருவள்ளுவர்,

**"பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பு என்னும்**
**செம்பொருள் காண்பது அறிவு"** **358**

என்றருளிச் செய்தார். இதற்குப் பொருள் வருமாறு.

பிறப்பிற்கு முதற் காரணம் ஆய அவிச்சை கெட, வீட்டிற்கு நிமித்த காரணம் ஆய செவ்விய பொருளைக் காண்பதே ஒருவர்க்கு மெய் உணர்வு ஆவது.

"**காண்பது**" என்றது தெளிதலைக் குறித்து நின்றது.

**ஞானத்தில் ஞானம்** என்பது, அவ்வாறு தெளிந்த பொருளோடு கூடி நிற்றலைக் குறிக்கும். கூடி நிற்றலைச் சார்தல்

என்னும் சொல்லால் குறட்பா விளக்குகிறது. இதனைத் திருவள்ளுவர்,

**" சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின், மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய் "** 359

என்று அருளிச் செய்தார். இதன் பொருள் வருமாறு :

ஒருவன், எல்லாப் பொருட்கும் சார்பாய அச் செம்பொருளை உணர்ந்து, இருவகைப் பற்றும் அற ஒழுக வல்லானாயின், அவனை முன் சாரக்கடவனவாய் நின்ற துன்பங்கள் அவ்வுணர்வு ஒழுக்கங்களை அழித்துப் பின் சார மாட்டா.

**" செம்பொருளை உணர்ந்து ஒழுகுவதே "** ஞானத்தில் ஞானம் ஆகிய நிட்டை கூடுதல் ஆகும், இவ்வாறு சித்தாந்த சைவம் கூறும் நால்வகை நெறிப்பாடுகளையும் வரிசைப் படுத்தி, ஒன்றன் பின் ஒன்றாகத் திருவள்ளுவ நாயனார் அமைத்தருளிச் செய்திருப்பதைக் காணும் பொழுது, சித்தாந்தச் சைவ நெறியே திருக்குறள் நெறியும் ஆகும் என்பது தெளியப்படும்.

## இருவினை ஒப்பு – அல்லல் படுவது எவன் ? - 379

ஞானத்தைப் பெற வேண்டும் என்னும் வேட்கை உயிர்க்கு ஏற்படும் நிலையில் உயிர் சிவப் பணியில் ஈடுபடும், அத்தகைய ஈடுபாடு உயிர்க்கு, மலபரிபாகம், இருவினை ஒப்பு, சத்திநிபாதம் ஆகியவற்றை நிகழ்த்தும், **"மலபரிபாகம்"** என்பது, ஆன்மாவின் அறிவு இச்சை செயல்களை, ஆணவமலம் மறைக்க இயலாமல் நிற்கும் நிலையே ஆகும், ஆகவே ஆன்மா ஆணவமலப்பற்றை விட்டு இறைப்பற்றில் அழுந்தி நிற்பதைக் குறிக்கும். இதனைத் திருவள்ளுவர், **" இருள் நீங்கி" - 352** என்னும் தொடரில் வைத்துப் பேசுகின்றார் **"இருவினை ஒப்பு"** என்பது, ஒருவன் தான் செய்த நல்வினைப் பயன் ஆகிய இன்பத்தில் விருப்பும், தீவினைப் பயன் ஆகிய துன்பத்தில் வெறுப்பும் இன்றி, இரு பயன்களையும் சமமாக கருதும் நிலையை எய்துவதே ஆகும். இதனைத் திருவள்ளுவர்,

**" நன்று ஆம் கால் நல்லவாக் காண்பவர், அன்று ஆம்கால்
அல்லல் படுவது எவன்? "** 379

என்னும் குறட்பாவில் வைத்துத் தெளிவுறுத்துகிறார்,

இக்குறட்பாவின் சிறப்புரையில் பரிமேலழகர், "தாமே முன செய்து கொண்டமையானும், ஊட்டாது கழியாமையானும், இரண்டும் இயைந்து அனுபவிக்கற் பால; அவற்றுள் ஒன்றற்கு (இன்பத்திற்கு) இயைந்து அனுபவித்து, ஏனையதற்கு அது செய்யாது வருந்துதல் அறிவன்று என்பதாகும்"

இந்த விளக்கம் இருவினை ஒப்பின் இயல்பைத் தெள்ளத் தெளிய விளக்குகின்றது.

"**சத்தி நிபாதம்**" என்பது, உயிரின் அறிவு இச்சை செயல்களை, மலப்பற்றிற்கு ஏற்ப மறைத்து வந்த இறைவனின் அருளாற்றல், மலபரிபாகமும் இருவினை ஒப்பும் எய்தப் பெற்ற ஆன்மாவின் மீது பதிதல் ஆகும். இதனைத் திருவள்ளுவர், "இருள் நீங்கி **இன்பம் பயக்கும் 352** என்னும் தொடரில் வைத்து பேசுகின்றார், இவ்வாறு ஆன்மா சிவபுண்ணியத்தைப்பெறு தற்கான வழிவகைகளையும், சிவாகம அடிப்படையில் திருவள்ளுவ நாயனார் நுல்லியமாகத் தெளிவித்துள்ளமையால், திருக்குறள் நெறி சித்தாந்தச் சைவ நெறியே என்பது இனிதே பெறப்படும்.

**வழிபாடு – "செய்நன்றி கொன்ற மகற்கு உய்வில்லை" 110**

**"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" 362**

என்றமையால், வேறு எந்த வேண்டுதலையும் இறை வழிபாட்டில் வேண்டத் தேவை இல்லை என்பது தெளியப்படும். அவ்வாறாயின் இறைவனை ஏன் வழிபடவேண்டும் என்னும் வினா எழும். அவ்வினா விற்கு விடை கூறும் நோக்கத்தில் திருவள்ளுவப் பெருந்தகை,

**"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுஉண்டாம்; உய்வுஇல்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு" 110**

என்னும் குறட்பாவினை அருளிச் செய்துள்ளார், இதற்குப் பொருள் வருமாறு:

உலகத்தில் ஒருவர் நமக்குச் செய்த உதவிகளை மறக்கக் கூடாது; ஒருவேளை மறந்தாலும் அதற்குக் கழுவாய் தேடிக் கொள்ளலாம்; அற நூல்களில் அதற்கு வழிவகைகள் கூறப் பட்டுள்ளன, ஆனால், இறைவன் நமக்கு **முக்காலத்தும்** செய்து வருகின்ற பேருதவிகளை மறந்தோமாயின், அதற்குக் கழுவாய் (பரிகாரம்) எந்த அறநூலிலும் இல்லை,

இந்தக் குறட்பாவில் "**நன்றி கொன்ற மகற்கு**" என்னும் தொடர், சிவஞான சித்தியார் எட்டாம் சூத்திரத்தில், "**மன்னவன்தன் மகன்**" "**என்மகன் நீ**" என வரும் தொடர்களை நினைவுறுத்துகின்றது, "**செய்ந் நன்றி**" என்பது வினைத் தொகை; அது **செய்த உதவி, செய்கின்ற உதவி, செய்யப் போகும் உதவி** என விரியும், அஃதாவது ஆணவமலத்தைப் பற்றி அநாதியே அறிவையும் செயலையும் இழந்து கேவலநிலையில் கிடந்த நமக்கு இறைவன், பிறப்பு வாய்ப்பைக் கொடுத்து சகல நிலைக்குக் கொண்டு வந்தானே, அஃது அவன் **செய்த உதவி** ஆகும்.

சகல நிலையில் இருக்கும் பொழுது, நாம் செய்யும் தவறுகளை எல்லாம் பொறுத்து, நாம் திருந்தி முன்னேற வேண்டும் என்னும் நோக்கில், நமக்குப் பல் வேறு பிறப்பு வாய்ப்புக்களைத் தந்து கொண்டு இருக்கிறானே, அஃது அவன் **செய்கின்ற உதவி** ஆகும். எண்ணற்ற பிறவிகள் பிறந்து இறுதியில் "**வேண்டேன் பிறப்பு**" என்னும் பக்குவ நிலை நமக்கு வந்ததும், நமது "**மலம் அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைக்கப்**" போகிறானே, அஃது அவன் "**செய்யப் போகின்ற உதவி**" ஆகும். இவ்வாறு முக்காலத்தும் இறைவன் நமக்குச் செய்து வரும் பேருதவிகளை மறப்பதையே திருவள்ளுவர், "செய்ந் நன்றி கோறல்" என்கிறார். (கோறல் – கொல்லுதல்). எனவேதான், திருமுறைகளில் "மறந்து உய்வனோ" "மறந்து உய்வனோ" என்று பல இடங்களில் பேசப்படுகின்றது.

இதிலிருந்து "**வழிபாடு**" என்பது, இறைவன் திருவடியைச் சார்தல் பொருட்டு அவனை மறவாது இருத்தலே (**Causing one to enter into His lotus feet**) என்பது பெறப்படும். ஆகவே, இறைவழிபாடு என்பது, இறைவன் நமக்குச் செய்து வருகின்ற பேருதவிகளை நினைத்து இருப்பதே ஆகும். இந்த நினைப்பு வலுப்பெற வலுப்பெற, அஃது இறைவன் திருவடிகளில் நம்மைக் கொண்டு சேர்த்துவிடும். இந்த ஒப்புயர்வற்ற சிந்தனையை நமக்குத் தெளிவுறுத்தும் பொருட்டே, திருவள்ளுவப் பெருந்தகை இந்தத் திருக்குறட்பாவை அருளிச்செய்துள்ளார். இவ்வாறு சித்தாந்த சைவம் கூறும் வழிபாட்டின் இயல்பைத் தெளிவுறுத்திய குறள் நெறியே, சைவ நெறி ஆகும்.

**கேட்டல் :**

**"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார்"** **356**

என்னும் குறட்பாவில் வரும் **"கற்று"** என்ற சொற்கு, **"உபதேச மொழிகளை அனுபவம் உடைய தேசிகர்பால் கேட்டு"** என்று பரிமேலழகர் கூறியிருக்கும் பொருள் போற்றுதற்குரியது.

**சிந்தித்தல் :**

**"ஓர்த்து உள்ளம் உணரின்"** – 357 என்னும் குறட்பாவில் வரும் **"ஓர்த்து"** என்ற சொற்கு, **"அளவைகளானும் பொருந்து மாற்றானும் தெளிய ஆராய்ந்து"** என்று பரிமேலழகர் பொருள் கூறியிருப்பது சிந்தித்தலைக் குறிக்கிறது.

**தெளிதல் :**

**"செம்பொருள் காண்பது அறிவு"** – 358 என்னும் குறட்பாவில் வரும் **"காண்பது"** என்னும் சொல் தெளிதல் நிலையைக் குறிக்கும்.

**நிட்டை கூடுதல் :**

**"சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின்"** ***359***

என்னும் குறட்பாவில் வரும் **"சார்பு உணர்ந்து ஒழுகுவதே"** நிட்டை கூடுதல் ஆகிய முடிந்த ஞானப்பயனைக் குறிக்கும்.

இவ்வாறு சரியை முதலிய நால்வகை நன்னெறிகளின் பயன்கள் ஆகிய கேட்டல் முதலியவற்றை **"மெய்யுணர்தல்"** என்னும் அதிகாரத்தில் வரிசைப்படுத்தி வள்ளுவப் பெருந்தகை அருளிச் செய்திருப்பது எண்ணி எண்ணி இறும்பூது எய்துதற் குரியது.

**ஐந்தெழுத்து உபதேசம் - "பற்றற்றான் பற்றினைப் பற்றுக" 350**

**"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும்"** ***28***

என்னும் குறட்பா, இறையருள் பெற்ற அருளாளர்களின் பெருமையை, அவர் ஆணையாகச் சொன்ன மந்திரங்களே

கண்கூடாகக் காட்டும் என்னும் கருத்தைக் கூறுகிறது. சிவாகமங்களில் "**சிவாய நம**" என்னும் அஞ்செழுத்து மந்திரத்தைத் தவிர வேறு மந்திரங்கள் இல்லை. இந்த மந்திரம் சைவ சித்தாந்தத்தின் கொள்கைத் திறனை முற்ற முடிந்த நிலையில் வைத்து அமைத்துள்ளது. சி – சிவம்; வ – அருள்; ய – உயிர்; ந – மறைப்பாற்றல்; ம – மலம் - என்பது இந்த மந்திரத்தின் பத விளக்கம் ஆகும். இந்தப் பதங்களைத் திருவள்ளுவர்,

**"பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு"** 350

என்னும் குறட்பாவில் வைத்துத் தெளிவுறுத்துகின்றார்.

பற்றற்றான் - சிவம்; பற்றினை - அருள்; பற்றுக, பற்றுக — உயிர்; அப்பற்றை - மறைப்பாற்றல்; பற்று விடற்கு – மலம். அஃதாவது, ஆணவமலப் பற்றை விடுதல் பொருட்டு ஆன்மா, இறைவனின் அருளாற்றலே மறைப்பாற்றலாக நின்று தனக்கு உதவுகிறது என்று முதலில் அப்பற்றைப் பற்றி நிற்க வேண்டும்; சாதனையின் முடிவில், ஆன்மா சிவபெருமானின் திருவடி ஆகிய அருளாற்றலைப் பற்றி நிற்கக் கடவது என்பதாகும். இதுவே முற்ற முடிந்த நிலை ஆகலின், திருவைந்தெழுத்தின் உண்மைப் பொருளைத் திருவள்ளுவ நாயனார் இந்தக் குறட்பாவில் வைத்து அருளிச் செய்தார் என்பது தெளியப்படும்.

இந்தக் குறட்பா உரையில் பரிமேலழகர் "**விடாது வந்த பற்று விடுதற்கு**" என்று கூறிச் சென்ற விளக்கமே, இக்குறட்பாவிற்கு இத்தகைய பொருளைச் சிந்திக்குமாறு செய்தது. "விடாது வந்த பற்று" என்பது அநாதியே உயிரை விடாது வந்த ஆணவமலப்பற்றைக் குறிக்கும். அதனை விடுவதற்குத் திருவருளைப்பற்றி நிற்றலை அன்றி வேறு வழி இல்லை. எனவே இக்குறள் திருவைந்தெழுத்தின் உண்மைப் பொருளைத் தெளிவுறுத்துகின்றது என்பது போதரும்.

**முத்தி இயல்பு – பேரா இயற்கை தரும் – 370**

"பேரா இயற்கை" 370 என்பது மாறுபடாத இயல்பு ஆகிய முத்தி நிலையைக் குறிக்கும். எனவே பெயரும் இயல்புக்கு இஃது எதிர் மறை ஆகும்; பெயரும் இயல்பு, மாறுபடும் இயல்பாகும்.

**'ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே**
**பேரா இயற்கை தரும்' 370**

இக்குறட்பாவிற்குப் பரிமேலழகர், "ஒரு காலும் நிரம்பாத இயல்பினை உடைய அவாவினை ஒருவன் நீக்கும் ஆயின், அந்நீப்பு அவனுக்கு **அப்பொழுதே** எஞ்ஞான்றும் ஒரு நிலைமையன் ஆம் இயல்பைக் கொடுக்கும்" என்று பொருள் கூறியுள்ளார். இவ்வுரையில் உள்ள. "அப்பொழுதே" என்று வரும் சொல், மலப்பற்றினை நீக்கிய பொழுதே முத்தி நிலையை ஆன்மா எய்தும் என்பதைக் குறிக்கிறது. முத்தியின் இயல்பு பற்றி உண்மை விளக்கம்.

**"முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்**
**சுத்தஅனு போகத்தைத் துய்த்தல்அணு - மெத்தவே**
**இன்பம் கொடுத்தல இறை, இத்தை விளைவித்தல் மலம்**
**அன்புடனே கண்டுகொள், அப்பா"** 50

என்று பேசுகின்றது. இதற்குப் பொருள் வருமாறு.

முத்தி நிலையில் இறை உயிர் தளை என்னும் மூன்று பொருள்களும் எந்நிலையில் இருக்கும் என்பதைக் கூறுகிறேன் கேள்.

ஆன்மா இறை இன்பம் என்னும் பேரா இயற்கையை அனுபவித்துக் கொண்டு இருக்கும்; அந்த இன்பத்தை இறைவன் இடையீடின்றி வழங்கிக் கொண்டு இருக்கிறான்; உயிர்க்கு ஒரு காலும் நிரம்பாத இயல்பினை உடைய ஆணவமலப் பற்றினை ஆன்மா நீக்குமாயின், **அந்நிலையே** வீடுபேற்றினை உயிர்க்குத் தரும்.

முத்தியில் ஆன்மா ஆணவமலப் பற்றினை விட்டு நிற்கும் நிலையிலேயே முத்திநிலை கிட்டும். அந்த முத்திநிலையின் போது ஆணவம் உள்ளது; எப்படி உள்ளது? அப்போது, இறைவனைப் பற்றி நிற்கும் ஆன்மாவின் அறிவையும் செயலையும் மறைக்காமல் நிற்கும். அவ்வாறு ஆணவமலம் நிற்கும் நிலையையே, திருவள்ளுவர், "**அந்நிலையே**" என்கிறார். இதனை "**அவா நீப்பின் அந்நிலையே**" - (370) என்னும் தொடருக்குப் பரிமேலழகர், "**அப்பொழுதே எஞ்ஞான்றும்**" என்று பொருள் கூறியிருப்பதிலிருந்து தெளியலாம். இவ்வுரையில் "**எஞ்ஞான்றும்**" என்னும் சொல் ஆழ்ந்த சிந்தனைக்குரியதாக இருக்கிறது.

அஃதாவது ஆணவமலம் உயிரின் ஞானத்தை எப்போதும் மறைத்துக் கொண்டுதான் இருக்கிறது; இறைவனும் உயிர்க்கு எப்போதும் ஞானத்தை விளக்கிக் கொண்டுதான் இருக்கிறான்.

இவ்விரு நிலைகளும் என்றும் உள்ள அநாதி நிலையைக் குறிக்கும். " **அநாதி** " என்பது **எக்காலத்தும்** என்னும் பொருளையே தரும். தொடக்கமில் காலம் என்பது 'அநாதி' என்பதற்கு முழுமையான பொருளன்று. எனவேதான் " அஞ்ஞானம் " என்னும் சொற்குப் பொருள் கூறியருளிய சிவஞான சுவாமிகள், " **ஞான அபாவமே அஞ்ஞானம்** " என்பது பொருந்தாது என்று சிவஞான போதச் சிற்றுரை நான்காம் சூத்திரம் இரண்டாம் அதிகரணத்தின் ஏதுவுக்கு விளக்கம் கூறும்பொழுது அருளிச் செய்துள்ளார்.

அஃதாவது, **அஞ்ஞானம் என்ற சொற்கு, ஞானம் இல்லாமை என்பது பொருளன்று; ஞானம் விளங்காமை என்பதே பொருளாகும்.** ஏனென்றால் இல்லது தோன்றாது என்னும் சற்காரிய வாதம் பற்றியதால் ஆகும். ஆகவே, ஆன்மாவை விட்டு என்றும் நீங்காத இறை அருள் என்றும் ஆன்மாவிலேயே இருக்கிறது; ஆன்மா ஆணவமலத்தைப் பற்றி நின்றதாலேயே அந்த அருள் ஆன்மாவிற்கு விளங்காமல் இருந்திருக்கிறது; ஆணவமலப்பற்றை ஆன்மா விட்டு, இறையருளைப் பற்றிய அப்பொழுதே, மலத்தின் மறைப்பாற்றல் அந்த ஆன்மா வினிடத்தில் **செல்லுபடி ஆவதில்லை.** அவ்வளவே. அந்நிலையில் ஆணவமும் நீங்கவில்லை ; ஆணவத்தின் ஆற்றலும் நீங்கவில்லை.

அஃது அப்படியேதான் இருக்கிறது. ஆன்மாவின் பற்றுக்கு ஏற்ப, அருள் விளங்குவதும் விளங்காமலிருப்பதும் நிகழ்கின்றன. ஆணவமலப்பற்றை விட்டு ஆன்மாதான் இறையருளைப் பற்றுகிறது. " **அந்நிலையே** " என்று நாயனார் அருளிச் செய்ததிலிருந்து, இந்நிலை நன்கு விளங்கும். எனவே, சைவ சித்தாந்தம் கொள்ளும் முத்திநிலை குறித்துத் திருக்குறள் தெருட்டும் செய்தி, குறள்நெறி சித்தாந்தச் சைவ நெறியே என்பதை மெய்ப் படுத்துகின்றது.

" **திருக்குறள் நெறி சைவசித்தாந்தமே** " என்பது குறித்து, இந்நூலில் ஓரளவே காணமுடிந்தது. **தொட்டனைத்து ஊறும் மணற்கேணி** " என்பதற்கு ஏற்ப இன்னும் தோண்டினால் பல செவ்விய உண்மைகள் கிடைக்கும். வருங்காலச் சைவ உலகம் இந்த வகையில் திருவருட்டுணையோடு இன்னும் முயன்று அரிய பல உண்மைகளை வெளிப்படுத்தும் என்று நம்புகிறேன்.

## 5. திருக்குறள் சைவர்களின் வேதமே :

### தோற்றுவாய் :

இதுவரை சிந்தித்ததிலிருந்து, சைவப் பெருமக்கள் தம் இரு கண்களாகப் போற்றி வரும் பன்னிரு திருமுறைகளும் பதினன்கு சாத்திரங்களும், திருக்குறட் கருத்துக்களை உள்ளடக்கியே அமைந்துள்ளன என்பது தெளிவாகும்.

இவ்வுண்மையை வலியுறுத்தியே அறிவிற் சிறந்த ஔவை மூதாட்டியும்,

**" தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்**
**மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை**
**திருவா சகமும் திருமூலர் சொல்லும்**
**ஒருவா சகம்என்று உணர் "**

என்றருளிச் செய்துள்ளார்கள், எனவே, திருக்குறட் கருத்துக்கு மாறுன எந்தக் கொள்கையும் சைவசித்தாந்தம் ஆகாது. திருக்குறளில் உள்ள ஒவ்வொரு சொல்லும், ஒவ்வொரு எழுத்தும் சித்தாந்த சைவத்திறனைத் தெளிவுறுத்துகின்றது. எனவேதான், திருக்குறளைத் " **தமிழ்மறை** " என்று சான்ருேர் பகர்ந்தனர்.

" **மறை** " எனபதும் " **வேதம்** " என்பதும் ஒரு பொருட் கிளவி. **திருக்குறளில் வேதம் என்ற சொல் இடம் பெறவில்லை;** ஆயினும் " **மறைமொழி** " என்ற தொடர் உள்ளது. (குறள் - 28) இத்தொடர், **இறையருள் பெற்ற சான்ருேர் ஆணையாகச் சொன்ன மந்திரம்** என்னும் பொருளில் திருக்குறளில் ஆளப்படுகிறது.

**" நிறைமொழி மாந்தர் ஆணையில் கிளந்த**
**மறைமொழி தானே மந்திரம் என்ப "** ***(செய் 179)***

என்னும் தொல்காப்பியர் கூற்றுக்கு ஏற்பத் திருவள்ளுவர்,

**" நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும் "** ***28***

என்றருளிச் செய்துள்ளார். இங்கு " **நிறைமொழி மாந்தர்** " என்னும் தொடர் திருவைந்தெழுத்து மந்திரத்தை அருளிச்செய்த சீகண்டபரமேசுவரனையும் அவனருள் பெற்ற நந்தி முதலிய

குருமார்களையே குறிக்கும். "நிறை மொழி" என்பது குறைவே இல்லாத ஐந்தெழுத்து மந்திரத்தையே குறிக்கும். இந்த இடத்தில்,

**" அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்**
**பொருள் நூல் தெரியப் புகும் "** 81

என்னும் திருவருட்பயன் கருத்து சிந்திக்கத்தக்கது. இதன் கருப்பொருள் வருமாறு.

சைவ ஆகமங்களும் வேதங்களும், உபாகமம் முதலிய அனைத்து ஞான நூல்களும், ஐந்தெழுத்தின் பொருளை உணர்த்தும் நூல்களே ஆகும். ஆகவே ஐந்தெழுத்தை ஆராய்ந்து பார்த்தால், வேதாகமங்கள் அனைத்தும், ஐந்தெழுத்தின்கண் **அடங்கி** உள்ளன.

**"வேதம்"** என்ற சொல், ஒரு பொதுச் சொல். ஒவ்வொரு சமயத்தாரும் தம் தம் சமயத்திற்குரிய பிரமாண நூலை வேதம் என்னும் பொதுச் சொல்லாலேயே குறிக்கின்றனர். சிலப்பதிகாரம், நாடுகாண் காதையில்,

***" ஓதிய வேதத்து ஒளி உறின் அல்லது***
***போதார் பிறவிப் பொதியறையோர் "***

என்று வரும் பகுதியில் உள்ள "வேதத்து ஒளி" என்னும் தொடருக்கு, "அருகன் ஆகமம் ஆகிய விளக்கொளி" என்று பொருள் கொள்ளப்பட்டுள்ளது; மேலும் சமணர்கள் அருகக் கடவுளையே வேத முதல்வன் என்று கூறுகின்றனர்.

கிறித்துவர்கள் அவர்களது சமய நூலை **" விவிலிய வேதம் "** என்கின்றனர்; இசுலாமியர்கள் அவர்களது சமய நூலைக் **" குர்ரான் வேதம் "** என்கின்றனர். வடநூலார் தம் சமய நூலை **" ருக்வேதம் "** என்கின்றனர். தமிழ் நாட்டில் வாழும் வைணவர்களும் தம் சமய நூலை "ருக் வேதம்" என்றே கூறுகின்றனர். பன்னிரு ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிர திவ்யப் பிரபந்தங்களை, வைணவர்களுள் ஒரு சாரரே " தமிழ் வேதம் " என்று ஏற்றுக் கொண்டுள்ளனர். இந்நிலையில் சைவர்களின் வேதம் எது என்பதே இன்று சிந்தனைக்குரியதாக இருக்கிறது.

சைவர்களிடம் உங்கள வேதம் எது என்று கேட்டால், ஒரு சாரார் " ருக்வேதம் " என்பர்: பிறிதொரு சாரார்

பன்னிரு திருமுறைகள்'' என்பர். ருக்வேதத்தில் என்ன உள்ளது என்பதை அறியாமலே எங்கள் வேதம் "ருக்வேதம்" என்று சைவர்கள் கூறுகிறார்கள். சைவ ஆகமம் முழுமுதற் பொருள் ஆகிய சிவபெருமான் ஒருவனே கடவுள், பிறர் அனைவரும் ஆன்மாக்களே என்று முழக்குகின்றது; பன்னிரு திருமுறைகளும் இவ்வுண்மையைப் பலவாற்றானும் பறைசாற்றுகின்றன. ஆனால் ருக்வேதத்தில் உள்ள பத்து மண்டலங்களிலும் கூறப்படும் ( 1028 ) சூக்தங்களிலும் பல தெய்வங்கள் கடவுள் எனப் பேசப்படுகின்றன. எடுத்துக்காட்டாக ( 881 ) ஆவது சூக்தத்தில், "கிருஷ்ணன் இந்திரனையே தன் தலைவனாகப் போற்றினான்'' என்று கூறப்பட்டுள்ளது. இந்திரனை விட் உயர்ந்தவன் எவனும் இல்லை என்று (326) – ஆவது சூக்தம் கூறுகிறது.

வடமொழி வேதங்களில் வேள்விகளைப்பற்றிய செய்திகளே பெரும்பகுதியும் கூறப்பட்டுள்ளன; வழிபாடு பற்றிய செய்தி இல்லை என்றே கூறலாம். திருமுறைகளில் வேள்வி பற்றிய செய்தி ஒரு சில இடங்களிலேயே பேசப்படுகின்றது; வழிபாடு பற்றிய செய்திகளே முழுமையாக உள்ளன. ஞானம் பற்றிய செய்தி வடமொழி வேதங்களில் இல்லை; திருமுறைகள் ஞானத்தையே குறிக்கோளாகக் கொண்டு இலங்குகின்றன. இறைவன் எண்குணம் உடையவன் என்னும் சிந்தனையே வடமொழி வேதத்தில் எழவில்லை. திருமுறைகளிலும் திருக்குறளிலும் இறைவன் எண்குணம் உடையவன் என்பது சிறப்பித்துப் பேசப்படுகின்றது. வடமொழி வேதங்கள் பிராமணர், சத்திரியர், வைசியர் எனப்படும் மூன்று வருணத்தாருக்கு மட்டுமே உரியன என்றும், வேளாளர்களோ பிற வருணத்தார்களோ வடமொழி வேதங்களைத் தொடுவதற்குக் கூட உரிமை அற்றவர்கள் என்றும் வேதஸ்மிருதிகள் கூறுகின்றன.

பன்னிரு திருமுறைகளையோ திருக்குறளையோ எந்த இனத்தவரும் பயிலலாம்; எந்த மதத்தினரும்கூடப் பயிலலாம். உலகத்தில் உள்ள எல்லா மனிதர்களும் சமமே, சாதி மத வேறுபாடு கூடாது என்பன போன்ற சமநோக்குகளைத் திருக்குறளும் திருமுறைகளும் கொண்டுள்ளன. வடமொழி வேதத்தைச் சமய நூலாகக் கொள்பவர்கள், அவர்கள் சமயத்தைச் சேர்ந்த பெண்கள் மந்திரம் செபிக்கக் கூடாது என்றும், வேதம் ஓதக் கூடாது என்றும் வேதஸ்மிருதிகள் கூறுகின்றன. ஆனால்

திருமுறைகளைப் பெண்கள் தாராளமாக ஓதலாம் என்றும் பெண்களுக்கும் தீட்சா உரிமை உண்டு என்றும் சைவசித்தாந்தம் கூறுகின்றது. இவ்வாறு பல திறப்பட்ட நிலைகளில் வைத்து நோக்கும் பொழுது, ருக் வேதம் முதலான வடமொழி வேதங்கள், சித்தாந்த சைவர்களின் சமய வாழ்வோடு தொடர்புடையனவாகப் படவில்லை என்பது போதரும்.

அவ்வாறுயின் பன்னிரு திருமுறைகளில், வடமொழி வேதங்களைப் பற்றிய செய்திகள், உடன்பாட்டு முறையில் இடம் பெற்றுள்ளனவே என்னும் தடை எழுவது இயல்பு. திருமுறை ஆசிரியர்களுள் சம்பந்தப் பெருமானும் அப்பரடிகளும் வாழ்ந்த காலச் சூழ்நிலையை இது போழ்து நாம் நினைத்துப் பார்ப்பது பயனுடையதாகும் கி. பி. ஆரும் நூற்றுண்டுக் காலச் சூழ்நிலையில், சைவ சமயத்தை முடக்கிய சமணர்களின் மயக்குரைகளால் மயங்கிக்கிடந்த மக்களைப் பக்குவப் படுத்தும் நிலையில், ஆரியர்களையும் தமிழர்களையும் இணைந்து செயல்படுமாறு இறைவன் அருளிச் செய்தான்.

ஆரியர்களும் தமிழர்களும் **"கடவுள் உண்மைக்"** கொள்கையை உடையவர்கள்; **"கடவுள் இன்மை"** கொள்கையினர் ஆகிய சமணர்களை வெலவதற்கு ஆரியர்களும் தமிழர்களும் இணைந்து போராடவேண்டும் என்று இறைவன் திருவுளம் கொண்டான், அது காரணமாகவே, **"வேத வேள்வியை நிந்தனை செய்துழல் ஆதம் இலி அமணொடு தேரரை வாதில் வென்று அழிக்கத் திருவுள்ளமே"** **(3 - 108 – 1)**

என்று ஞானசம்பநதப் பெருமான் திருவாக்கில் நின்று இறைவன் அருளிச்செய்தான்.

**"ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய்"** **(6 - 23 - 5)**

என்றும்

**"நால்வேதம் ஆறங்கம் ஆனுன் கண்டாய்"** **(6 - 39 - 5)** என்றும் அப்பரடிகள் திருவாக்கில் நின்று இறைவன் அருளிச் செய்தான். இறைவன் திருவுளப்படியே, ஆரியத் தமிழரும் திராவிடத்தமிழரும் இணைந்து முயன்றதன் பயனுகத் தமிழகத்தை விட்டுச் சமணம் அகன்றது; சைவம் தளிர்த்து மேலோங்கியது. இந்நிலை சம்பந்தப் பெருமான் காலம் தொடங்கி ஆதிசங்கரர் தோன்றிய காலம் வரை நீடித்திருந்தது, ஆதிசங்கரர் வடமொழி

வேதங்களுக்கு முதன்மை நிலை வழங்கி, பிரமசூத்திரத்திற்குப் பாடியம் செய்த பிறகு, திருமுறைக் கருத்துக்களுக்குப் பொருள் காண்பதில் பல இடர்ப்பாடுகள் ஏற்பட்டன. அந்நிலையில்தான் மெய்கண்ட சிவத்தை இறைவன் தமிழகத்திற்கு அனுப்பியருளிச் சைவசித்தாந்த நூற் கருத்துக்களின் அடிப்படையில் திருமுறை களுக்குப் பொருள் காணும் பெரும் பேற்றினை வழங்கியருளினன்,

சமணர்கள் தமிழகத்தில் காலூன்றித் தமது கொள்கை களைப் பரப்பிய பொழுது, திருவள்ளுவரைத தமிழகததிற்கு அனுப்பியருளி, இறைவன் சமணர்களின் கடவுட்கொள்கை, வினைக்கொள்கை முதலானவற்றைத் திருவள்ளுவரைக் கொண்டே முறியடிக்கச் செய்தான், மொழிப்பற்று மிக்க தமிழர்கள், சமணர்கள் செய்த ஐம்பெருங்காப்பியங்களில் மூழ்கியிருந்த மையால், திருவள்ளுவரின் சமயக் கொள்கையை முறையாக அறியாமலிருந்தனர்; தமிழர்க்கிருந்த பக்குவமின்மை காரணமாகத் திருக்குறளில் உள்ள சமயக்கருத்துக்கள் அடங்கிப்போயிருந்தன.

அந்நிலையில்தான் இறைவன் பன்னிரு திருமுறைகளைத் தோற்றுவித்து, அவையனைத்திலும் திருக்குறட்கருத்து பரவலாக விளங்குமாறு செய்தான், இவ்வுண்மையை இந்நூலின் இரண்டாவது அத்தியாயத்தில் ஓரளவு கண்டோம்,

திருக்குறள் அறம் பொருள் இன்பம் என்று மூன்று பகுதி களாகப் பிரிக்கப்பட்டு முப்பாலாக இருப்பினும், திருக்குறளின் பாயிரத்திலும் அறத்துப்பாலின் பிற்பகுதியிலும் "வீடு" பற்றிய செய்தி உள்ளமையால், திருக்குறள் அறம், பொருள், இன்பம் வீடு என்னும் நான்மறையையே பேசுகின்றது என்பது பெறப்படும் இறைவன் இந்த நானமறைகளை அருளிச் செய்யாமல் இருந்தால், உலகத்தில் உள்ளவர்கள் எப்படி வாழ்வது என்பதை அறியாமல் திருத்தம் பெருமல் இருந்து விடுவர் என்னும் உண்மையைத் திருவாசகம், திருச்சாழல் – 20 ஆவது பாட்டில்,

**"அரும் தவருக்கு அறம் முதல் நான்கு அன்று**
**அருளிச் செய்திலனேல்**
**திருந்த அவருக்கு, உலகு இயற்கை தெரியாகாண்**
**சாழலோ" (8 - *12* - *20*)**

என்று மணிவாசகப் பெருந்தகை வாயிலாக இறைவன் அருளிச் செய்தான் என்பதை,

**" அறம் பொருள் இன்பம் வீடு மொழிந்த வாயான் முக்கண் ஆதி " (1 - 53 - 6)**

என்னும் சம்பந்தப் பெருமான் திருவாக்கினாலும்,

**" ஆலதான் கீழ் இருந்து நால்வர்க்கு அறம், பொருள், வீடு, இன்பம், ஆறு அங்கம், வேதம் தெரித்தானை " (6 - 66 - 2)**

என்னும் அப்பரடிகள் அருள் வாக்கினாலும்,

**" அன்று ஆலின் நிழற்கீழ் அறம் நால்வர்க்கு அருள்புரிந்து " (7 - 28 - 3)**

என்னும் சுந்தரர் பெருமான் திருவாக்கினாலும் அறியலாம்,

தமிழர் வேதம் எனப்படும் அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்மறைகளை இறைவன், ஆலின்கீழ் இருந்து நால்வர்க்கு அருளிச் செய்தான் என்று திருமுறைகள் கூறுகின்றன. வடமொழி வேதம் அநாதியே உள்ளது என்றும், அதனை வியாசர் ருக், யசுர், சாமம், அதர்வணம் என நான்காகத் வகுத்தார் என்றும் கூறப்படுகிறது. எனவே வடமொழி வேதம் வேறு. தமிழ் மொழி வேதம் வேறு என்பது பெறப்படுகிறது. வடமொழி வேதத்தை வியாசர் எந்த மொழியில் எந்த லிபியில் (எழுத்து) வகுத்தார் என்பதற்கு ஆதாரம் இல்லை. தமிழர்க்கான வேதம் தமிழிலேயே இறைவனால் அருளிச் செய்யப்பட்டன என்பதற்குத் திருமுறைப் பிரமாணம் உள்ளது.

இந்த இடத்தில் இன்னொரு முக்கியமான ஒன்றையும் சிந்தனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இன்று சைவ சித்தாந்த சாத்திரங்களை எளிமைப்படுத்திப் பேசுவதற்கு, நமக்கு பெரிதும் உறுதுணையாய் இருக்கும் சிவஞான சுவாமிகளை நினைந்து போற்றக் கடமைப்பட்டிருக்கிறோம். அவர்கள் சிற்றுரை, பேருரை (பாடியம்) என்னும் இரு அரிய உரை நூல்களை எழுதித் தந்திருக்கா விட்டால், இன்று சைவ சித்தாந்தம் இவ்வளவு எளிதில் எவருக்கும் விளங்கி இருக்காது. அவர்களது அருட்கொடைக்கு ஈடாக, அவர்கள் ' செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும் வானகமும் ஆற்றல் அரிது '. சிவஞான சுவாமிகள் சிவஞான போதத்திற்கு

பாடியம் செய்தார்கள் ; ஆதிசங்கரர் பிரமசூத்திரத்திற்கு பாடியம் செய்தார் ; இருவரும் மெய்கண்டார் செய்தது போல் முதல் நூல் ஏதும் செய்தாரில்லை. எனவே, சிவஞான சுவாமிகளை விட ஆதிசங்கரர் எந்த வகையிலும் உயர்ந்தவர் அல்லர்: ஆதிசங்கரரை விட சிவஞானசுவாமிகள் எந்தவகையிலும் குறைந்தவரும் அல்லர். இவ்வுண்மையைச் சைவ சித்தாநதம் கற்றுத் தெளிந்த அனைவரும் அறிவர்.

சிவஞான சுவாமிகள் அருளிச் செய்த சிவஞான மாபாடியத்தில் நூற்றுஆறு நூல்களை மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார்கள். அவற்றுள் வடமொழி வேதத்திலிருந்து ஒரு செய்தியைக் கூட மேற்கோளாகக் காட்டவில்லை என்பது சிந்திப்பதற்குரியது. " உருத்திரம் " எனப்படும் திருவுருத்திரத்தை மேற்கோளாகக் காட்டும் இடத்திலும் ( சூத். 12. அதி. 3 ) அதற்கு இணையாக அப்பரடிகள் அருளிச் செய்த நின்ற திருத்தாண்டகத்தைச் சொல்கிருர்கள். இதிலிருந்து என்ன தெரிகிறது? வடமொழி வேதங்களில் சைவ சித்தாந்தக் கருத்துக்களோடு இயைந்த செய்தி ஏதும் இல்லை என்பது தெளிவாகிறது, எனவே சைவ சித்தாந்தக் கருத்துக்களையே, சமயக் கொள்கையாகக் கொண்டுள்ள திருக்குறளே சைவர்களின் வேதம் என்று போற்றத் தக்கது என்பது பெறப்படும்.

சம்பிரதாயம் அல்லது மரபு என்னும் பெயரில், நடைமுறை உண்மைக்கு மாருன ஒன்றைக் கடைப்பிடிப்பது பொருத்தம் அற்றது. இவ்வுண்மையைச் சிவப்பிரகாசம் அவையடக்கச் செய்யுளில் (12) வரும் " **தவறு நலம் பொருளின் கண் சார்வு, ஆராய்ந்து அறிதல் இன்மையிஞர், பலர் புகழில் ஏத்துவர்; ஏதிலர் உற்று இகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர்; தமக்கு என ஒன்று இலர்** " என்று உமாபதி சிவம் அருளிச்செய்திருப்பதிலிருந்து அறியலாம். வடமொழி வேதம் தமிழர்க்கும் உரியது என்னும் சம்பிரதாயம் எப்போது ஏற்பட்டது என்பது அறியக் கூட வில்லை; முன்பு ஆய்ந்தபடி, திருமுறைகளில் அவை இடம் பெற்ற காலக் கட்டத்தில், இம்மரபு ஏற்பட்டிருக்கக் கூடும்.

சித்தாந்த சைவர்கள் ஆகிய நாம் பேசும் பொழுதும் எழுதும் பொழுதும் திருக்குறட் கருத்துக்களை, இடைவிடாமல் மேற்கோள் காட்டி வருகிரேம். ஆயினும் திருக்குறளுக்கு உரிய இடத்தை

நாம் இதுவரை கொடுக்க வில்லை. இது நமது வேதமா? ஆகமமா? அல்லது பல்வேறு மதத்தவரும் பொதுவாகக் கொள்வது போல், திருக்குறளை நாம் ஒரு சாதாரண நூலாகத்தான் கருதுகிறோமா? இத்தடைகள் ஆழ்ந்த சிந்தனைக் குரியவை.

திருக்குறளை ஒரு சாதாரண நூலாக நாம் கருதிவிடக் கூடாது; **திருக்குறள் நமது வேதம்** என்பதை நமக்குத் தெளிவுறுத்தும் பொருட்டே, சிவஞான சுவாமிகள் சிவாஞான மாபாடியம் எழுதத் தொடங்கும் பொழுது, திருப்பாசுரம் எழுதி திருவாசகம் எழுதி அவற்றை அடுத்துத் திருக்குறளின் முதற் பாவையும் எழுதித் திருமுறைகளை முடிக்கும் பொழுது " திருச்சிற்றம்பலம் " என்று கூறுவோமே அதனையும் அந்தத் திருகுறட்பாவின் முடிவில் எழுதியருளியுள்ளார்கள். திருக்குறள் சைவர்களின் வேதமே என்பதற்கு இதைவிடப் பெரிய சான்று எங்கே உள்ளது? எங்கும் கிடையாது. எனவே **திருக்குறள் சைவர்களின் வேதமே** என்பது இனிதே பெறப்பட்டது.

**நிறைவுரை:**

உலகில் உள்ள அறிஞர்களில் பெரும்பாலோர் திருக்குறட் கருத்துக்களை விதந்து பாராட்டுகின்றனர். இதற்குக் காரணம், திருக்குறளின் உள்ளீடாக இருக்கும் சித்தாந்த சைவ சமயத்தின் கொள்கைப் பிடிப்பே ஆகும். எந்த மதத்தவரும் மறுக்க முடியாத கொள்கைகளைச் சைவ சித்தாந்தம் காரண காரிய இயைபு படுத்திக் கூறுகிறது. திருக்குறளும் இந்த அடிப்படை யிலேயே உலக மக்கள் அனைவரும் உய்தி பெறவேண்டும் என்னும் உயர்ந்த உள்ளப்பாங்கில் அமைந்துள்ளது.

எந்த ஒரு கருத்தும், ஞானத்தின் வழி நின்று பேசப்படும் பொழுது, எவராலும் மறுக்க முடியாத இடத்தைப் பெறுகின்றது. எந்த வித ஆடம்பரமும இன்றி, அடக்க ஒடுக்கத்தோடு கூறப் படும் சைவ சித்தாந்தக் கொள்கைகள் அனைத்தும் திருக்குறளில் ஊடுருவி நிலைபெற்றிருப்பதால்தான், திருக்குறள் அனைவரும் ஏற்றுக் கொள்ளத்தக்க நூலாக உள்ளது. இந்நூலின் ஐந்து தலைப்புக்களில் ஆய்ந்து உரைக்கப்பட்ட செய்திகளைக் காய்தல் உவத்தல் இன்றி ஆழ்ந்து நோக்கினல் இவ்வுண்மை புலப்படும்.

சைவர்களின் வேதம் ஆகிய திருக்குறளைச் சைவர்கள் தலையாய இடத்தில் வைக்காமல், "**பொது மறை**" என்று கருதியதால், கிறித்தவர் ஒருவர் திருக்குறளைத் தங்கள் மத நூலாகிய விவிலிய வேதத்தின் வழிவந்த நூல் என்று எழுதித் திருக்குறளைக் கற்பனை செய்யமுடியாத அளவுக்கு, இழிந்த இடத்தில் கொண்டுபோய் வைத்து விட்டார். திருக்குறளுக்கு இது போன்ற இழிநிலை இனியும் ஏற்பட்டு விடக் கூடாது. தமிழர்கள், குறிப்பாகச் சைவர்கள் இனி விழிப்புணர்வுடன் இருக்க வேண்டிய சூழ்நிலை உருவாகி இருக்கிறது. எனவே திருக்குறள் தலையாயதோர் சைவநூல் என்பதை நாம் என்றும் நினைவில் கொள்வோமாக,

**நிறைவுறும்**



